# சங்க இலக்கியத்தில்-தமிழரின் உறைவிடமும் உறவும்

சென்னைப் பல்கலைக்கழகத்தின்
முனைவர் (பிஎச்.டி,)பட்டப்பேற்றுக்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு


பா.பாபு
பகுதிநேர ஆய்வாளர்
தமிழ்த்துறை
பச்சையப்பன் கல்லூரி
சென்னை-600 030



மேற்பார்வையாளர்
டாக்டர்.வ.உமாபார்வதி எம்.ஏ.,பிஎச்.டி.,
இணைப் பேராசிரியர்
தமிழ்த்துறை
பச்சையப்பன் கல்லூரி
சென்னை-600 030






தமிழ்த்துறை
பச்சையப்பன் கல்லூரி
சென்னை-600 030

ஏப்ரல்-2011

டாக்டர் வ.உமாபார்வதி எம்.ஏ.,பிஎச்.டி.,
**இணைப் பேராசிரியர்**
தமிழ்த்துறை
பச்சையப்பன் கல்லூரி
சென்னை-600 030

# மேற்பார்வையாளர் சான்றிதழ்

'சங்க இலக்கியத்தில் தமிழரின் உறைவிடமும் உறவும்' என்னும் இவ்வாய்வேடு, சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழ்த்துறையில், என் மேற்பார்வையில் **திரு.பா.பாபு** அவர்களால் ஆய்வு நிகழ்த்தி எழுதப்பெற்றதாகும்.

இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும், ஆய்வரங்கிற்கும் இவ்வாய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும், இதன்மீது வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றிதழ் வழங்குகிறேன்.

சென்னை-600 030.
நாள் .04.2011

(டாக்டர் வ.உமாபார்வதி)
மேற்பார்வையாளர்
வ.உமாபார்வதி
Dr. V. UMAPARVATHY, M.A., Ph.D.,
READER IN TAMIL
PACHAIYAPPA'S COLLEGE
CHENNAI-600 030

**பா.பாபு எம்.ஏ.,எம்.ஃபில்.,**
பகுதிநேர ஆய்வாளர்
தமிழத்துறை
பச்சையப்பன் கல்லூரி
சென்னை-600 030.

# ஆய்வளர் உறுதிமொழி

சங்க இலக்கியத்தில் தமிழரின் உறைவிடமும் உறவும் என்னும் இவ்வாய்வேடு, சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழத்துறையில், பேராசிரியர் **டாக்டர் வ.உமாபார்வதி எம்.ஏ.,பிஎச்.டி., அவர்கள்** மேற்பார்வையில் என் முயற்சியால் ஆய்வு நிகழ்த்தி எழுதப்பெற்றதாகும்.

இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும்,ஆய்வரங்கிற்கும்இவ்வாய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும், இதற்காக வேறு எந்தப் பட்டமும் வழங்கப் பெறவில்லை என்றும் நான் உறுதியளிக்கிறேன்.

சென்னை-600 030
நாள் .04.2011

(பாபாபு)
ஆய்வாளர்

# நன்றியுரை

பல்கலைக்கழக மானியக் குழுவின் உயர்சிறப்புத் தகுதியைப் பெற்றுள்ளதுமாகிய தாய்ப் பல்கலைக்கழகம் என்னும் பெருமைக்குரிய **சென்னைப் பல்கலைக்கழகம்** யான் மேற்கொண்ட இவ்வாய்வுக்குத் தன் மேலான அனுமதியை அளித்து வித்திட்டு உதவியது.

தாய்மை அன்பு மாறாத் தனித்தகைமைப் பெருமாட்டி எம் பேராசிரியை டாக்டர் **வ.உமாபார்வதி, எம்.ஏ., பிஎச்டி.,அவர்கள்,** யான் தொடங்கிய இவ்வாய்வுக்கு நெறியாளராகத் திகழ்ந்து, தம் நுண்மாண் நுழைபுலத்தால் ஆய்வுப் புலத்தை எனக்கு அறிவுறுத்தி நன்னெறி காட்டிப் பேருதவிப்புரிந்தார்.

என் ஆய்வைப் பகுதிநேர ஆய்வாக மேற்கொள்வற்குப் பச்சையப்பன் கல்லூரி முதல்வர் டாக்டர் பி.சேகர், **எம்.எஸ்சி,எம்.ஃபில்.,பிஎச்டி., அவர்கள்** தம் உயரிய ஒப்புதலை நல்கினார்.

இவ்வாய்வைத் தம் துறையில் தொடங்கி நிகழ்த்த, தமிழ்த் துறைத் தலைவர் **டாக்டர் பு. பிரகாசம் எம். ஏ.,எம்.ஃபில்., பிஎச்டி.,அவர்கள்** உளமுவந்து தம் ஒத்துழைப்பைத் தந்தார்.மேலும் டாக்டர் சா .வளவன், **எம்.ஏ.,எம்.ஃபில்.,பிஎச்டி.,** அவர்கள் இவ்வாய்வேடு செவ்வனே அமைய பேருதவிப்புரிந்தார்.

லிட்டில் ஹோலி ஏஞ்செல்ஸ் மெட்ரிக் மேனிலைப் பள்ளியின் ஒருங்கிணைப் பாளர் **திரு.ஜொ.ரெஜினால்டு எபனேசர் பி.இ,எம்.பி.ஏ.,எம்.எஸ்.,பி.எட்.,அவர்கள்** இந்த ஆய்வுக்குப் பதிவு செய்யும் பொருட்டு எனக்கு அனுமதியும் யான் ஆற்றிய பணிச்சான்றிதழும் அளித்துதவினார் .

நான் கேட்டபோது ஆய்வுத்தொடர்பான நூல்கள் வாங்க உதவியவர் **திரு. கு.சே.சுரேஷ் எம்.எஸ்சி,எம்.ஃபில், கணிதப்பேராசிரியர் அவர்கள்**.மேலும் சென்னைப் பல்கலைக்கழகம் மெரினா வளாகம் **நூலகர்** அவர்கள்.இவ்வாய்வேட்டை அழகுற ஒளியச்சு செய்தும், கட்டமைத்தும் உதவி செய்தோர் **திருமதி சாய்சுஜாதாஇராமமூர்த்தி, திருமதி கோவிந்தம்மாபாபு** ஆவர்.

என் ஆய்வுச் சிறப்பாகச் செய்து முடிக்கப் பேரன்புடன் உறுதுணைப் புரிந்த நல்லோர் பெருமக்களாகிய இவர்கள் அனைவருக்கும் என் உள்ளம் நிறைந்த பெருநன்றியை மகிழ்ச்சியுடன் உரித்தாக்குகிறேன்.

-பாபாபு .

## சுருக்கக்குறியீடு

| | |
|---|---|
| **அகத்** | -அகத்திணையியல் |
| **அகம்** | -அகநானூறு |
| **அரசி.பட.** | -அரசியல் படலம் |
| **ஆ.கோ.** | -ஆசாரக்கோவை |
| **இளம்** | -இளம்பூரணர் |
| **இறை.** | -இறையனார் களவியல் உரை |
| **ஐங்.** | -ஐங்குறுநூறு |
| **களவு .** | - களவியல் |
| **கலி.** | - கலித்தொகை |
| **கம்ப.** | - கம்பராமாயணம் |
| **கற்பு.** | - கற்பியல் |
| **குறள்.** | - திருக்குறள் |
| **குறி.பா.** | - குறிஞ்சிப்பாட்டு |
| **குறு.** | - குறுந்தொகை |
| **சிறு.பாண்** | - சிறுபாணாற்றுப்படை |
| **சூ.** | - சூத்திரம் |
| **செ.எண்** | - செய்யுள் எண் |
| **செய்** | - செய்யுள் |
| **சொல்.** | -சொல்லதிகாரம் |
| **தொல்.** | -தொல்காப்பியம் |

| | |
|---|---|
| நச். | -நச்சினார்க்கினியர் |
| நம்பி. | -நம்பியகப் பொருள் |
| நற். | -நற்றிணை |
| நெடு. | -நெடுநல்வாடை |
| பக். | -பக்கம் |
| ப.ப. | -பதிற்றுப்பத்து |
| ப.ள். | -பக்கங்கள் |
| பட்டினப். | -பட்டினப்பாலை |
| பரி. | -பரிபாடல் |
| பால. | -பாலகாண்டம் |
| புறத். | -புறத்திணையியல் |
| புறம்.வெண். | -புறப்பொருள் வெண்பாமாலை |
| புறம் | -புறநானூறு |
| பெரு. | -பெருமழைப்புலவர் |
| பெருபாண். | -பெரும்பாணாற்றுப் படை |
| பேரா. | -பேராசிரியர் |
| பொரு ந. | -பொருநராற்றுப்படை |
| பொருள். | -பொருளதிகாரம் |
| மது. | -மதுரைக்காஞ்சி |
| மரபு. | -மரபியல் |
| மலை. | -மலைபடுகடாம் |

| | |
|---|---|
| **முல்லை.** | -முல்லைப்பாட்டு |
| **மெய்.** | -மெய்ப்பாட்டியல் |
| **விளி.** | -விளிமரபு |
| **திரி.க.** | -திரிகடுகம் |
| **நாலடி.** | -நாலடியார் |
| **நா.பா.** | -நாட்டுப்புறப்பாடல் |
| pa. | -page |
| pp. | -pages |

# பொருளடக்கம்

# முன்னுரை

பண்டைய மனிதன், தான் வாழும் உலகத்தை இருக்கும் இடத்தில் இருந்தவாறே கண்ணால் காண முடியாமையால் மிகப்பெரியதாக எண்ணினான்.

இன்று மக்கள் தொடர்புக் கருவிகளால் உலகச் செய்திகளைச் செவிகளால் கேட்கவும் உலக நடப்புகளைக் கண்ணால் காணக் கூடியவையாக மாறியதால் உலகம் சுருங்கிவிட்ட நிலையை நம்மால் உணரமுடிகிறது.

மனிதன் உலகில் தோற்றத்தை விரிவானதாகக் கருதியபோது அவன் உறவு ஒரு கட்டுப்பாட்டுக்குள் இருந்து வரன்முறை படுத்தப்பட்டதாக அமைந்திருந்தது. அதனால் போலித்தனமோ, சண்டையோ, தீமையோ அவ்வளவாக ஏற்பட வில்லை .மனிதமனமும் செம்மைசான்ற நல்வழி உடையதாய் அமைந்திருந்தது.

இன்று உலகம் சுருங்கியதால் உறவுகள் மட்டும் பெருகியுள்ளன. அதனால் போலித்தனம், சண்டை, பழிவாங்கல், பாலியல்பலாத்காரம், ஊழல், கொலை, கொள்ளை, நாடுபறிப்பு போன்ற சொல்லுக்கடங்காத் தீங்குகள் பெருகிவருகின்றன, இதற்கு அடிப்படைக் காரணம் உறவு, என்ற சொல்லின் பொருளும், உறவு முறைமைகளும் மக்கட்கு விளங்காமையே ஆகும்.

# ஆய்வு நோக்கம்

சங்க இலக்கியங்கள் குறித்து முன்னர் நடை பெற்ற ஆய்வுகள் தனித்தனி இலக்கியங்கள் பற்றியும், தனித்தனி திணைகள் பற்றியும், இலக்கிய மாந்தர்களின் உளவியல் கூறுகள் அடிப்படையிலும் நடைபெற்றுள்ளன.

சங்க இலக்கியம் தொடங்கி இன்று 21 ஆம் நூற்றாண்டில் நாம் நுழைந்திருக்கும் வேளையில் பண்டைத் தமிழர் உறைவிடத்தையும் உறவையும் எண்ணிப் பார்ப்பதும் இன்றியமையாதது. இன்று உலகெங்கும் பரந்து வாழும் தமிழர், உறைவிடத்திலும் உறவிலும் காலத்தோடு ஒட்டிமாறி வருவதாகக் கருதப்படுகிறது. ஆனால் இன்றைய நிலையைவிட அன்று திட்டமிடப்பட்ட செம்மையான வாழ்வியல் நடைபெற்றதை உணர்த்துவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

# ஆய்வுத் தலைப்புத் தேர்வு

சங்க காலத் தமிழ்மக்கள், மனிதனுடைய வாழ்க்கை மதிப்பும் பயனும் வாய்ந்ததாக அமையவேண்டும் என்பதில் பேரார்வம் காட்டினர். அதற்குரிய

சிறந்த கருவி இல்வாழ்க்கை என்பதை அவர்கள் நன்கு உணர்ந்து இருந்தனர். எனவேதான், அவர்கள் படைத்த இலக்கியத்தில் வீடும் வாழ்க்கையும் பின்னிப் பிணைந்துள்ளன. என்ற கருத்தே இத்தலைப்புத் தேர்வுக்குக் காரணமாக அமைந்தது.

## ஆய்வின் எல்லை

இவ்வாய்விற்குச் சங்க இலக்கிய நூல்களாகிய மேல்கணக்கு எனப்படும் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்னும் 18 நூல்கள் முதன்மை ஆதாரங்களாகக் கொள்ளப்பட்டுள்ளன. குறிப்பாக அகமாந்தர்கள் கூற்றுகள் வாயிலாக வெளிப்படுத்தும் உறவுமட்டுமே எடுத்துக் கொள்ளப்பட்டன. புறமாந்தர்கள் உறவுகளை ஆய்வுக்கு உட்படுத்தவில்லை.

ஆய்வுக்கு அரண் செய்யக்கூடிய வகையில் தொல்காப்பியம் இலக்கண நூலும் செய்தித்தாள்களில் வெளிவந்த செய்திகளையும் இக்கால உறவுநிலைத் தகவல்களாகத் தொகுக்கப்பட்டுள்ளது. மொத்தத்தில் இவ்வாய்வின் எல்லையாக சங்க காலம் முதல் இக்காலமான 2010 ஆம் ஆண்டு வரை ஆய்வுக்குரிய எல்லையாக எடுத்துக்கொள்ளப்படுகிறது.

## ஆய்வின் மூலம்

இவ்வாய்விற்குத் தேவையான மூலங்கள் இரண்டு வகைகளாகத் திரட்டப் பட்டுள்ளன.

1. முதன்மை மூலங்கள் -பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் என்ற 18 நூல்கள் (மூலமும் உரையும்)

2. துணைமை மூலங்கள்- செய்தித்தாள் செய்திகள், தொல்காப்பியம், இறையனார் களவியலுரை ஆகியவை.

## ஆய்வேட்டின் அமைப்பு

முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளன.

அவை,

இயல்-1. தமிழரின் உறைவிடம்

இயல்-2 கூற்றுகள் வெளிப்படுத்தும் உறவு

இயல்-3 தமிழரின் நம்பிக்கையும் சடங்குகளும்

இயல்-4 தமிழரின் உறவு அன்றும் இன்றும்

என்பனவாகும்.

## 1.தமிழரின் உறைவிடம்

பண்டைத் தமிழ்ச் சமுதாயத்தின் அடிப்படை, தனிமனிதர் பலரின் கூட்டுத் தொகையை சமுதாயம் என்பர். நம் முன்னோர், குடும்பங்கள் பலவற்றின் கூட்டுத்தொகையாகவே சமுதாயத்தைக் கருதினர். அவர்கள் தொழிலுக்கு ஏற்றவாறு நால்வகைக் குடிகளாக துடியன், பாணன், பறையன், கடம்பன் என்றும் வழங்கினர். அவர்கள் ஐந்நிலத்து சூழலுக்கு ஏற்றவாறு வாழ்வும் தொழிலும் செய்து வாழ்ந்தனர். பின்பு தங்குவதற்கு ஏற்றவகையில் இயற்கை சார்ந்த பல்வேறு வகையான உறைவிடங்கள் அமைத்து இயற்கையோடு இயைந்து வாழ்ந்தனர். அவர்கள் உறைவிடங்களுக்கு ஏற்றவகையில் வாழ்வியல் நடைமுறைத் தொடர்புகளாக, பிறப்பு நடைமுறைத் தொடர்பு, பூப்பு நடைமுறைத் தொடர்பு, வழிபாட்டு நடைமுறைத் தொடர்பு, பொது நடைமுறைத் தொடர்பு என்பன போன்ற கருத்துக்கள் இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளன.

## 2.கூற்றுகள் வெளிப்படுத்தும் உறவு

சங்க இலக்கியத்தில் கூற்றுக்குரியஉறவுகளாக, தலைவி, பார்ப்பான், பாங்கன் பாங்கி,செவிலி, ஆகியோரும்,களவு வாழ்வில்

-

கூற்றுவழி நிகழ்த்தும் உறவுகள். கற்புவாழ்வில் கூற்று நிகழ்த்தும் தலைவன் தலைவி பார்ப்பான், பாங்கி, கண்டோர், பாணன், கூத்தர்,விறலி,பரத்தை, அறிவர், ஆகியோர் கற்பிற் கூற்றிற்குரிய உறவுகள். தந்தை அன்னை,உயங்குநோய் அறிவர், ஊரவர், அயலோர், சேரியோர் ஆகியோர் களவு கற்பு ஆகிய இரண்டிலும் கூற்றிற்கு உரிமையில்லாத உறவுகள்.

சங்க காலத்தில் உள்ள தலைவன், தலைவியின் உறவு செம்மையாக அமைய களவு, கற்பு ஆகிய வாழ்க்கையிலும் துணை நின்று கூற்றுகள் வாயிலாக உறவை வெளிப்படுத்தும் அகமாந்தர்கள் உள்ளனர். இவர்கள் நல்லிலக்கண முறையிலும், நல்லொழுக்க முறையிலும் மரபிற்கு மாறாமல் நிலையோடு நின்று உறவு கொண்டனர் என்று இவ்வியலில் ஆராயப்படுகின்றன.

-

## 3.தமிழரின் நம்பிக்கையும் சடங்குகளும்

தமிழர்கள் வாழ்வியலில் உண்மைப்பொருளை உணர்த்தவும் செயல்படுத்தவும், பல்வேறு நம்பிக்கைளை வகுத்துக் கடைப்பிடித்தனர். அவ்வகையில், அவர்கள் கடவுள் இருப்பதாகவும் அவர் எல்லாப் பொருள்களிலும் ஊடுருவியுள்ளார் எனவும் நம்பிக்கைக்கொண்டனர். அவரவர் வாழ்வில் இன்பமும் துன்பமும் இயற்கையின் வழிபடியே வரும் என நம்பினர். அவரவர் செய்கின்ற செயலுக்கு ஏற்ப நன்மையும் தீமையும் கிட்டும் என்றும் நம்பினர். மக்களினம் செழிக்கவும் உறவுகள் மேம்பட்டு வளரவும் தெய்வ வழிபாடு செய்தனர்.

நம் முன்னோர்கள் பலவகையாக பழக்க வழக்கங்களைக் கடைப்பிடித்து வாழ்ந்து வந்தனர். இயற்கையின் நிலைப்பாடுகளை உணர்ந்திருந்த தமிழர்கள் மழைவருவதாகவும், கிரகணம் தோன்றுவதாகவும் நம்பினர். மேலும் பேய்கள் இருப்பதாகவும், ஒருவர் பார்வை மற்றவருக்குத் துன்பந்தரும் எனவும் நம்பியிருந்தனர்.

தமிழர்கள் பிறப்புமுதல் இறப்புவரை நடைபெறும் சடங்குகளை இருவகையாகப் பிரித்தறிந்தனர். குடும்பத்தில் நடைபெறும் சடங்குகளை மங்கலம், அமங்கலம் என இரண்டாகப் பகுத்து, பிறப்பு சடங்குகளும், பெண்கள் பருவமுற்ற காலத்தும் கருவுற்ற காலத்தும் நடைபெறும் சடங்குகளை மங்கல சடங்குகள் என்றும், இறந்தவர்க்காக நடைபெறும் சடங்குகள் அமங்கலச் சடங்குகளாகக் கருதப்படுகின்றன. இவ்வாறு பிறப்பு முதல் இறப்பு வரை உள்ள சடங்குகளும் நம்பிக்கைகளும் மேற்கொண்டதாக இவ்வியலில் ஆராயப்பட்டன.

## 4. தமிழரின் உறவு அன்றும் இன்றும்

பண்டையத் தமிழர் உறவு முறையில் அகமாந்தர் உறவுகளாக தலைவன், தலைவி, தோழி, நற்றாய், செவிலித்தாய், பாங்கன், பாங்கி, கண்டோர், பாணன், கூத்தர், விறலி,- பரத்தையர், பிறர் என்பன போன்ற உறவுகள் உள்ளதாக சங்க இலக்கியங்கள் தெள்ளத்தெளிவாகக் காட்டுகிறது. இவ்வகையான உறவுகள் அவரவர்களுக்குரிய கடமையுணர்வு, கற்புநெறி, பண்பாடு, பழக்கவழக்கம், குறிக்கோள், விருதோம்பல், பெண்கல்வி ஆகியவைப் பற்றி விளக்கம் தந்து ஆராய்கிறது.

இன்றுள்ள உறவுகளாக தாய் தந்தை, பாட்டன் பாட்டி, அத்தை மாமா, அண்ணன் தம்பி, அக்கா தங்கை, அண்ணன் அண்ணி, கொழுநன் கொழுந்தி, மாமியார் மருமகள், மருமகன் மாமானார், சக்களத்தி மாற்றாந்தாய், விதவையர் மலடியர், பரத்தையர் ஆகிய உறவுகளில் ஏற்படும் இன்பத்துன்பம் என்பனப்

போன்ற விளக்கமும், உறவுச் சிதைவுக்குரிய காரணமும் இவ்வியல் ஆராய்கிறது.

## முடிவுரை

முடிவுரையில் ஆய்வில் கண்டறிந்த உண்மைகள் தொகுத்தளிக்கப் படுகின்றன.

## பின்னிணைப்புகள்

1. அகமாந்தர் கூற்றுகள் அட்டவணை

2. குறிஞ்சி நிலவாழ்க்கை, முல்லை நிலவாழ்க்கைப்படம்

3. மருத நிலவாழ்க்கை, நெய்தல் நிலவாழ்க்கைப்படம்

4. பாலை நிலவாழ்க்கை, சங்ககால உறைவிடத்தின்படம் ஆகியவை இணைக்கப்பட்டுள்ளன.

----

# கூற்றுகள் வெளிப்படுத்தும் உறவு

*2:24.* தோழி இயற்பழித்துழி இயற்பட மொழிதல்

*2:25* அறத்தொடு நிற்றல்

*2:26* தலைவி தலைவனிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

*2:27* தலைவி பிறரிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

*2:28* தலைவி தன் நெஞ்சிடம் கூறும் கூற்றுவழி உறவு

*2:29* தலைவி தோழியிடத்து நிகழ்த்தும்-கூற்றுவழி உறவு

*2:30* தலைவி தலைவனிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

*2:31* தலைவி புதல்வனிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு.

*2:32* தலைவி பாணனிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

*2:33* தலைவி பிறரிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

*2:34* தலைவி தன் நெஞ்சிடம் கூறும் கூற்றுவழி உறவு

*2.35* காமம் மிக்க கழிபடர் கிளவியால் நிகழும் கூற்றுவழி உறவு

*2:36* தோழி கூற்றுவழி உறவுகள்

*2:37* தலைவியிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

*2:38* குறை நயப்பித்தல்:-

*2:39* வரைவு கடாதல்

*2:40* சிறைப்புறமாக வரைவு கடாயது

*2:41* அலர் அச்சம் தோன்றச் சொல்லி வரைவு கடாயது.

*2.42* பகற்குறியில் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது

*2.43* இரவுக் குறியில் சிறைப் புறமாகத் தோழி சொல்லியது.

*2:44* இற்செறிப்பு அறிவுறுத்தியமை

*2:45* தலைவன் இடையீடிட்டு வந்துழி

*2:46* வரைவு நீட்டிக்குமிடத்து

*2:47* தலைவன் வரவுணர்ந்து

*2:48* இயற்பழித்து

*2:49* தலைவிக்கு உரைத்தல் நிலையில்

*2:50* வெறியை முன் நிறுத்தி வரைவு கடாதல்

*2:51* அறத்தொடு நிற்றல்

*2:52* உடன் போக்கு வலித்தல்

*2:53* வரைவிடை ஆற்றாத தலைவியை ஆற்றுவித்தல்

*2:54* தலைவனின் வரைவு மலிதல்

*2.55* தலைவனிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

*2:56* குறை மறுத்தல்

*2:57* குறை நயப்பித்தல்

*2:58* சேட்படுத்தல்

*2:59* குறி நேர்தல்

*2:60* வரைவு கடாதல்

*2:61* குறிவந்து நீங்கும் தலைவனிடம் வரைவு கடாதல்

*2:62* தலைவனின் ஆற்றாமையைச் சுட்டிவரைவு கடாதல்

*2:63* உடன் போக்கிற்கு அஞ்சி உரைத்தல்

*2:64* தலைவியின் உடன் போக்குணர்தல்

*2:65* உடன் போக்கு வலித்தல்

*2.66.* உடன் போக்கும் தோழி தலைவனிடம் கூறல்

*2:67* வரைவிடை தலைவன் பிரியுமிடத்து

*2:68* செவிலியிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

*2:69* செவிலிக்கு அறத்தொடு நிற்றல்

*2:70* தமரிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

*2:71* கட்டுவிச்சியிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

*2:72* பிறரிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

*2:73* தன்னுள் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

*2:74* பிறபொருட்கள்களிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

*2:75* தலைவியிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

*2:76* உடன் போய் வரைந்து மீண்ட இடத்து

*2:77*தலைவனுக்கு வாயில் நேருமிடத்து

*2:78* தலைவனிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

*2:79* செவிலியிடத்து நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

*2:80* பிறரிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

*2:81* விறலியிடம்

*2:82* வாயில்களிடம்

*2:83* பாங்காயினரிடம்

*2:84* அறிவரிடம்

*2:85* குயவனிடம்

*2:86* தன்னுள் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு

*2:87* நற்றாய், செவிலித்தாய் கூற்றுவழி உறவுகள்

*2:88* தொல்காப்பியம் குறிப்பிடும் தாய்

*2:89* நற்றாய் கூற்றுவழி உறவுகள்

*2:90* மகட் போக்கிய தாய் கூற்று

*2:91* தாய் மனை மருண்டு சொல்லியது

*2:92* மனை மருண்டு தலைவியின் தோழிக்கு நாற்றாய் சொல்லியது

*2:93* தெருட்டும் அயலுலாட்டியர்க்கு நற்றாய் உரைத்தது

*2:94* செவிலி ஆற்றாமை கண்டு நற்றாய் அவளுக்குச் சொல்லியது

*2:95* உடன்போய் மீண்டவிடத்து நற்றாய் கூறியது

*2:96* செவிலித்தாய் கூற்றுவழி உறவு

*2:97* மகட்போக்கிய செவிலி கூற்று

*2:98* தலைவி உடன் செல்ல செவிலி தன் மகளுக்குச் சொல்லியது

*2:99* தலைமகளை நினைந்து செவிலி மனைக்கண் வருந்தியது

*2:100* இடைச் சுரத்துப் பின்சென்ற செவிலி கண்டார்க்குச் சொல்லியது

*2:101* செவிலி நற்றாய்க்கு அறத்தொடு நிற்றல்

*2:102* தலைமகள் உடன் சென்ற வழி தெருட்டுவார்க்குச் சொல்லியது

*2:103* உடன்போன தலைவி இன்று வரும் எனக் கேட்ட செவிலி நற்றாய்க்குச் சொல்லியது

*2:104* இல்லறம் சென்று வந்து நற்றாய்க்கு உரைத்தல்

*2:105* கடிமனை சென்று வந்த செவிலி நற்றாய்க்கு உரைத்தல்

*2:106* பரத்தை கூற்றுவழி உறவு

*2:108* பாங்கன் கூற்றுவழி உறவு

*2:104*பாணன் கூற்றுவழி உறவு

*2:109* கண்டோர் கூற்றுவழி உறவு

*2:110* தலைவன் மடல் ஏற–தமர் மகட்கொடுத்திட கண்டோர் கூற்று

*2:111* தலைவன் தலைவி உடன்போக்கில் கண்டோர் கூற்று

*2:112* கண்டோர் தலைவி தாயிடம் கூறும் கூற்று

*2:113* இடைச் சுரத்துத் தாயைக் கண்டோர் கூற்று

*2:114* உடன் போக்கு மீட்சியில் கண்டோர் தாயிடம் கூறும் கூற்று

*2:115* பிற வாயில்களின் கூற்றுவழி உறவு

# இயல் 2

## கூற்றுகள் வெளிப்படுத்தும் உறவு

### 2:1 தலைவன் கூற்றுவழி உறவுகள்

சங்க இலக்கியங்களில் தலைவன் தலைவியின் களவொழுக்கத்திற்கும் கற்பொழுக்கத்திற்கும் உற்றவராக, நிற்கின்றவர்களை இலக்கண நூற்கள் அகத்திணை மாந்தர் எனக் குறிக்கும். இம்மாந்தர்களுள் கூற்றிற்குரிய உறவுகளும் உள்ளனர். கூற்றிற்கு உரிமையில்லாதவரும் உள்ளனர். இம்மாந்தர்களுள் சிலர், களவுக் காலத்துக் கூற்றிற்குரியவராக இருக்கின்றனர்; சிலர், கற்புக்காலத்துக் கூற்றிற்குரியவராக இருக்கின்றனர். இவர்கள் தம் கூற்றுகளின் வாயிலாகத் தலைவனுடைய நல்லியல்புகளும் பிறவும் அறியப்படுகின்றன. மேலும் கூற்றுக்கு உரிமையில்லாதார் கூறக்கூடிய கூற்றிலிருந்தும், கூற்றுக்குரியவர் கூற்றிலிருந்தும் தலைவனின் நல்லியல்புகளை ஆராயப்படுவதும், இவ்வியலின் நோக்கமாகும்.

### *2:2* உறவுக்குரிய அகத்திணை மாந்தர்கள்

களவு, கற்பு ஆகிய அகவாழ்வுப் பகுதியில் உரை நிகழ்த்துகின்றவரும். உரை நிகழ்த்தாதவர்களும் என இரு வகையினர் உள்ளனர். முதலாவதாக தலைவன், தலைவி, பார்ப்பான், பாங்கன், பாங்கி, செவிலி, நற்றாய், கண்டோர், பாணன், கூத்தர், விறலி, பரத்தை, அறிவர், பயந்தோன், தன்னை, உயங்குநோய் அறிவோர், ஊரவர், அயலோர், சேரியோர், ஆகியோர் உரை நிகழ்த்தும் அகத்திணைக்குரிய உறவுமாந்தராவர்,[1] தலைவியின் தம்பி, தங்கை, தமக்கை, முதலியோரும், தலைவனின் தம்பி, தங்கை, அண்ணன், தமக்கை முதலியோரும் உரைநிகழ்த்தாத அகத்திணை மாந்தர்களாக இலக்கணங்களாலும் சங்க இலக்கியங்களாலும் பேசப்படவில்லை. காரணம் அன்றைய புலனெறி வழக்கிற்கு அவர்கள் பயன்படார் என அக்கால இலக்கிய உலகம் விட்டுவிட்டதெனலாம். எனினும் ஊடல் தீர்க்குங் கருவியாக பல பாடல்களில் புதல்வர் இருப்பதைக் காண்கிறோம்.[2] ஊடல் தீர்க்கும் வாயில்களைப் பன்னிரண்டாகப் பட்டியலிட்டுக் காட்டும் தொல்காப்பியரும் அவற்றுள் ஒன்றாகப் புதல்வனைக் குறிப்பிடாமல், பின்னர், தலைவியின் கூற்றிலும்,[3] காமக் கிழத்தியின் கூற்றிலும், புதல்வன் வாயிலாவதைக் குறிக்கிறார்.[4] இது கருதியே பின்னர்த் தோன்றிய நம்பி அகப்பொருள். புதல்வனையும் உள்ளடக்கி, பதினான்காகக் குறிக்கின்றதை உணர்த்துகிறது.[5]

சங்க காலச் சமுதாயத்தில் இன்னார் இன்னாரிடம் கூற்று நிகழ்த்தலாம்என்றும், இன்னார் இன்னாரிடம் கூற்று நிகழ்த்தலாகாதென்றும் வரையறை இருந்ததனைக் கூற்றிற்குரியார், கூற்றிற்குரிமையில்லார் என்னும்

பாகுபாடுகளே புலப்படுத்துகிறது. இவர்களுள் களவிற் கூற்றுக்குரியவர் என்றும் கற்பிற் கூற்றுக்குரியவர் என்றும் பிரித்தறிந்தனர்.

## 2:3 களவிற் கூற்றிற்குரிய உறவுகள்

சங்க இலக்கியங்களில் கூற்றுக்குரிய உறவுகளாக, தலைவி பார்ப்பான், பாங்கன், பாங்கி, செவிலி ஆகியோரும் களவு வாழ்வில் கூற்றுவழி நிகழ்த்தும் உறவுகள். அதனால் அவர்களை களவிற் கூற்றிற்குரியார் என்றனர்.[6] இவர்கள் கூற்று நிகழ்த்துதலைப் பல சங்கப் பாடல்களில் காணலாம்.[7] களவில் தலைவன் தலைவி ஆகிய இருவரின் உள்ளக்குறிப்புகளை அறிந்து அறநெறியில் செயல்பட்டனர் என்று உணர்த்தப்படுகிறது.

## 2:4 கற்பிற் கூற்றிற்குரிய உறவுகள்

கற்பு வாழ்வில் கூற்று நிகழ்த்தும் தலைவன், தலைவி, பார்ப்பான். பாங்கி, செவிலி, கண்டோர், பாணன், கூத்தர், விறலி, பரத்தை, அறிவர் ஆகியோர் கற்பிற் கூற்றிற்குரிய உறவுகள் எனப்படுவர்.[8] நம்பி அகப்பொருள் நற்றாயுங் கற்பிற் கூற்றிற்குரியவளாகச் சேர்த்துக் கூறுகிறது.[9] இவர்தம் கூற்றுக்களைச் சங்க இலக்கியத்துள் காண்கிறோம்.[10] மேலும் கூற்றிற்கு உரிமையில்லாத உறவுகள் உள்ளதாக இலக்கியங்கள் வாயிலாகச் சொல்லப்படுவது நோக்கத்தக்கதாகும்.

## 2:5 கூற்றிற்கு உரிமையில்லாத உறவுகள்

தந்தை, அன்னை, உயங்குநோய் அறிவர், ஊரவர், அயலோர், சேரியோர் ஆகியோர்கள் களவு கற்பு ஆகிய இரண்டிலும் கூற்றிற்கு உரிமையில்லாதவர்கள்.[11] அஃதாவது, இவர்கூற்றாகப் பிற கூற்றிற்குரிய மாந்தர் எடுத்து மொழிவரேயல்லாமல், இவர் கூற்றார் என்பதாம். தொல்காப்பியர் இவ்வாறு கூறுதலைக் கொண்டெடுத்து மொழிதல் என்பர்.[12] "கொண்டெடுத்து மொழியப்படுதல்லது" என்பது இவர் கூற்றாகப் பிறர் சொல்லினல்லது. இவர்தாங் கூற்றார் எவ்வாறு என்று பேராசிரியர் கூறுவது ஈண்டு காணத்தக்கது. இவ்வாறு கொண்டெடுத்து மொழிவதைப் பல பாடல்களிற் காணலாம்.[13]

## 2:6 அகத்திணை மாந்தர் இடம்பெறும் உறவு வகை

### பாங்கன் கூற்றுவழி உறவு

இயற்கைப் புணர்ச்சி எய்திய தலைவன், தலைவியின் நினைவினின்று, அவள் மாட்டு துய்த்த இன்பத்தினின்றும், மீளாத நிலையில், தந்த தெய்வம் மீண்டுந் தருமெனத் தானாகத் தேறி முன்னர் கூடிய இடத்தில் தலைவியைத் தலைப்பட்டுத் துய்க்கின்றான். இயல்பாகவே, தலைவியைக் கூடிய சமயம் வாய்த்துத் தான் எய்திய

இன்பம் நிறைந்திருந்தாலும் அவளை நீங்கிய பின் குறைபட்டு மேலும் துய்க்க வேண்டும் எனும் அவாவாக கூறுவது உலகறிவது. இங்ஙனம் ஒரு கால் நிறைந்து, பின் குறைபட்டு நிற்பதாலேயே இல்லற வாழ்வு தொடர்ந்து நிகழ்கின்றது எனலாம். இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப் பாடுகளில் நிறைந்த இன்பம் தலைவியின் நீக்கத்தால் எஞ்சி நிற்கத் தலைவனின் மனித மனம் பின்னும் அவாவி நிற்கின்றது. நிற்க, துன்பத்தில் மூழ்கினார் தன் பக்கம் இருப்பாரை நாடுதலே பொதுவான இயல்பு என்னும் முறைமைப்படி, தன் துணையாகிய பாங்கனை நாடுகின்றான். இங்குதான் முதன்முதல் பாங்கன் இடம் பெறுகின்றான்.

தலைவன் உற்றது என்? என வினாவிய பாங்கனிடம் தான் நிறையழிந்தமையும் காமம் கையிகந்தமையும் மொழிகின்றான். ஒரு பெண் மீது கொண்ட காதலால் தலைவன் தன்னுள்ளத்தை இழந்து, உடல் மெலிந்தமையினையும்,[14] கூறுகின்றான். இதனைப்

"புதுக்கோள் யானையின் பிணித்தாற்றால் எம்மே"[15]
"என் நெஞ்சு பிணிக் கொண்ட அஞ்சில் ஓதி"[16]
"போதல் ஒல்லாள் என் நெஞ்சத் தானே"[17]
"அரிவை கொண்டனள் நெஞ்சே"[18]
"பான்மான் பேதைக்கு ஒழிந்தது என் நெஞ்சே"[19]
"நிறையரு நெஞ்சம் கொண்டொழித் தோளே"[20]
"கொடிச்சி கையகத்ததுவே------என்நெஞ்சே"[21]

என்னும் பாக்கள் காட்டுகின்றன. ஒரு பெண்ணால் தன் நண்பன் உடல்மெலிந்ததை அறிந்த பாங்கன், அவன் தகுதிக்கு அஃது அழகன்று, எனக் குற்றங்காட்டிக் கழறியுரைக்கின்றான். அவன் தலைவனின் குற்றங் காட்டி, எதிர்மொழி கூறும் உரிமையுடையவன். இதனை,

"குற்றங்காட்டிய வாயில் பெட்பினும்"[22]
"மொழி எதிர் மொழிதல் பாங்கற் குரித்தே"[23]
"குறித்தெதிர் மொழிதல் அஃதித் தோன்றும்"[24]

என்னும் பகுதிகளால் தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். மேலும் தலைவன் பாங்கனுக்குத் தலைவியின் அழகை எடுத்துரைக்கின்றான். அவளுடைய க,ண் மார்பு, மொழி, கூந்தல் ஆகியவற்றை எடுத்துரைக்கின்றான். அதனால் ஐம்புல இன்பத்தை மறைமுகமாகத் தெரிவிக்கின்றான்.[25] தன் கையிகத்து செல்லுங் காமத்தைக் கட்டுப்படுத்தும் ஆற்றல் தன்னிடம் இல்லையென்ற போது, பாங்கனின் அறிவுரைகளும் கழறியுரைத்த உரைகளும், தலைவனின் காமத்தை மிகுதிப்படுத்தவே துணை நிற்கின்றன. இஃதோர் உளவியற் போக்கு என்பதனை அறிந்த சங்க இலக்கிய உலகம் பாங்கனின் மனம் தலைவனின் காமத்தைக் கட்டுப்படுத்தும்

நோக்கங்கொண்டதாகத் தலைவன் எதிர்பார்க்கும் புணர்வுக்குத் துணையாகும் மனநிலைக்கு மாறுபட்டு நிற்கிறது. தான் உணர்த்தியும் ஆற்றாது புலம்பலால் பாங்கன், குறிவழிச் சென்று தலைவியைக் கண்டு, தலைவனின் வருத்தம் தகுமென்று கூறியும்[26] தலைவியை வியந்தும் திரும்பிவந்து, அவனிடம் கூறுகின்றான். பின் தலைவன் சென்று தலைவியைக் கூடுகின்றான். கற்புக்காலத்துப் பாங்கன், தலைவியின் ஊடலைத் தீர்க்குமிடத்தே மீண்டும் இடம் பெறுகின்றதைக் காண்கிறோம். அவ்வக் காலங்களில் நிகழும் பாங்கன் கூற்றுகளில் தலைவன் தன் இயல்புகள் வெளிப்படுகின்றன.

## 2:7 தோழி கூற்றுவழி உறவு

பாங்கனை மறைத்துத் துய்த்தல் இயலாது எனத் தேர்ந்த தலைவன், அவனைத் துணையாகக் கொண்டு தொடர்ந்து துய்ப்பதும் ஆகாது எனவும் நினைக்கின்றான். மேலும் தனக்கு உழையாயினானுக்குத் தன் கனவை வெளிப்படுத்தித் தலைவியின் இன்றியமையாமையை உணர்த்தியவன். தலைவியின் தோழியை மறைத்துத் துய்க்க முடியாது என்பதனையும் தெளிவாகவே உணர்ந்துள்ளான். பாங்கிமதியை உடன்படுத்துவது, தொடர்ந்து பெறக் கருதும் இன்பத்திற்குத் துணையாகும் என்பதை, தனக்குப் பாங்காயினன் தெளிந்தவாறு தன் இன்றியமையாமையைத் தலைவியின் பாங்காயினளும் தெளிய வேண்டும் என்பதும், தலைவனின் நோக்கமாகலாம். எனவே தலைவன் பின்னர்த் தோழியின் துணையை நாடுகின்றான்; அவள் முன் குறையிரந்து நிற்கின்றான்.[27] தலைவனின் காதலை ஆராய்ந்தறிவதற்காகத் தோழி முதலில் மறுக்கிறாள்; அவனுடைய உண்மைக் காதலின் ஆழத்தை அறிந்த பின்னர், உடன்படுகின்றாள்.

பகற்குறி, இரவுக்குறி, வரைவு வேட்கை, வரைவுகடாவுதல், முன்னிலைப் புறமொழியாகக் கூறல், ஒருவழித் தணத்தல், வரைவிடை வைத்துப் பொருள் வயிற்பிரியத் தூண்டுதல், உடன்போக்கு, அறத்தோடு நிற்றல், இல்லறம் பூண்டொழுகுங்கால் தலைவன் பிரிவுகளில் தலைவியை ஆற்றியிருத்தல் முதலிய அனைத்து வாழ்க்கைக் கூறுகளிலும் தோழி இடம் பெறுகின்றாள். தலைவனுந் தலைவியும் கூடுவதற்குத் துணைநின்று, அவர்களை இல்லறத்திலுய்ப்பதைக் குறிக்கோளாகக் கொண்டு தோழி செயல் படுவதைக் காண்கிறோம். இவ்வகையினால் அகப்பொருள் வாழ்வில் தோழி இடம்பெறுவகையினால் தலைவனின் பண்புகளாகிய விடா முயற்சியுடைய உயர்குடிப்பிறப்பு, நாவினால் கெட்டவற்றைப் பேசாமை, அடக்கமுடைமை, ஈகைக்குணமுடைமை, வன்மையுடைமை முதலியன தெரியப்படுகின்றன.[28]

### *2:8* தலைவி கூற்று வழிஉறவு

இயற்கைப் புணர்ச்சியின் காட்சியில் முதன்முதல் தலைவி தோன்றுகிறாள். பின்னர் இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம், பகற்குறி, இரவுக்குறி, ஒருவழித்தணத்தல் முதலிய அனைத்து வாழ்க்கைக் கூறுகளிலும் தலைவி இடம் பெறுகின்றாள். அவள் தலைவன் வரைவுக்காகவும் வரவுக்காகவும் ஏங்குபவளாகத் தோற்றமளிக்கிறாள். கற்பில் புறத்தொழுக்கம் புரிந்து திரும்பிய தலைவனிடம் ஊடுவதும், பின் ஊடல் தீர்ந்து கூடுவதும் வழக்கமாகிறது. காமந்தோன்றித் தலைவனைக் காணல் முதலாக அது தீர்த்தபின் மேற்கொள்ளும் அருள் புணர் வாழ்வாகிய துறவறத்திலும் அவ்வாழ்க்கைத் துணையாகத் தலைவி இடம் பெறுகின்றாள்.

### *2:9* பாணன் கூற்றுவழி உறவு

பாணன் தலைவனைப் பரத்தைமாட்டுக் கொண்டு சென்று சேர்ப்பவனாகவும், பரத்தையிற் பிரிவில் ஊடிய தலைவனுக்கு அறிவுரை கூறு பவனாகவும். ஊடல் தீர்க்கும் வாயிலாகவும் இடம் பெறுகின்றான்.

### *2:10* அறிவர் கூற்றுவழி உறவு

அறிவர் தலைவன் தலைவி ஆகியோர்க்கு உறுதிமொழி கூறி நெறிப்படுத்தும் குரவர்களாவர் என்பர்.[29] இவர்கள் துறவுள்ளமும் முக்காலத்தையும் அறியும் ஆற்றல் கொண்டவர்.

"மறுவில் செய்தி மூவகைக் காலமும்
நெறியின் ஆற்றிய அறிவன்"[30]

எனத் தொல்காப்பியர் அறிவனைப் பற்றிக் கூறுகின்றார். அறிவனென்றது கணியனை, மூவகைக் காலமும் நெறியினால் ஆற்றுதலாவது. பகலும் இரவும் இடைவிடாமல் ஆகாயத்தைப் பார்த்து, ஆண்டு நிகழும் வில்லும், மின்னலும் ஊர்கோளும் தூமமும், மீன் வீழ்வும், கோள்நிலையும், மழைநிலையும் பிறவும் பார்த்துப் பயன் கூறல் ஆதலான் மூவகைக் காலமும் நெறியின் ஆற்றிய அறிவன்" என்றார்[31] என, இளம்பூரணர் இதற்கெழுதிய உரையில் விளக்கிக் கூறுகின்றார். கற்பு முதலிய நல்லவற்றைக் கற்பித்தலும், தீயவற்றைக் கடிதலுமாகிய செயலையுடையார் இவர்.[32] தலைவனும் தலைவியும் இவரது ஏவலைச் செய்து நிற்பர். அவர்களை இடித்துரைத்து நல்வழியிலே நிறுத்துதல் இவர்தம் இயல்பு.[33] தலைவன் தலைவியர் கற்பு நெறியில் ஒழுகுங்கால் இவர் வாயிலாக அமைவர்;[34] இவர் கூற்றை யாவரும் கேட்டு அதன்வழி ஒழுகுவர்;[35] இவ்வகையில் அகவாழ்வில் அறிவர் இடம்பெறுகின்றமை குறுந்தொகைப் பாக்களால் அறிகிறோம்.[36]

### 2:11 கண்டோர் கூற்றுவழி உறவு

உடன்போக்கு மேற்கொண்ட தலைவனையும் தலைவியையும் வழியில் கண்டோரே இங்குக் கண்டோர் எனச் சுட்டப்படுவர். இடைச் சுரத்தில் தலைவன் தலைவியரைக் கண்டோர் அவர் பற்றிக் கூற்று நிகழ்த்துகின்றனர். கற்போடு புணர்ந்தயைத் தாயார் புலம்புமிடத்தும் இரங்கி, இவர்கள் கூற்றுநிகழ்த்துகின்றனர், என்பதனை இலக்கியச் சான்றுகளால் ஆராயப்படுகின்றன.

### 2:12 பிறர் கூற்றுவழி உறவு

நற்றாயும் செவிலித்தாயும் கற்பொடு புணர்ந்த நிலையை எண்ணி புலம்புகின்றனர். தாயார் தலைவியை இற்செறிப்பதைத் தோழி உரையால் அறிகிறோம். தந்தைத் தாயார் தன் மகள் வெளியிற் செல்லாமற் கண்காணிப்பதைக் காண்கிறோம். தந்தை வரைவு நேர்தலையும், உடன்போக்கில் இடைச்சுரம் சென்று தடுப்பதையும், மகளைத் திரும்ப அழைத்து வந்து மண முடிப்பதையும் காண்கிறோம். முக்கோற்பவர் கற்போடு புணர்ந்த கவ்வையில் கலங்குத் தாயாருக்கு இரங்கிக் கூறுகின்றனர். வினைமுற்றி மீளுந் தலைவன் காதலியை நினைத்து கவன்றதைக் கண்ட தேர்ப்பாகன், அவனிடம் வருந்தாதே எனக் கூறித் தான் தேரை விரைந்து செலுத்துவதாகவும் கூறுகின்றான்.[37] விறல்பட ஆகும் பெண்டிராம் விறலியர் செலவில் தேற்றுவதற்கும் புலவி தணித்தற்கும் வருகின்றனர். அவர்கள் வாயில் வேண்டுதலும் வாயில் நேர்வித்தலும் செய்வர். இதனைச்

"செலவில் தோற்றலும் புலவியல் தணித்தலும்
"வாயில் வேண்டலும் வாயில் நேர்தலும்
"தெரியிழை விறலிக் குரியதாகும்[38]

எனத் தொல்காப்பியர் கூறுகிறார்.

"பாணன் கூடத்தர் விறலியற் என்றிவர்
பேணிச் சொல்லிய குறையினை எதிரும்"[39]

என்னும் நூற்பாவில் விறலியர் பற்றிக் கூறுகிறார். தோழிவிறலிக்கு வாயில் மறுத்ததை நற்றிணைப் பாடல் ஒன்றால் அறிகிறோம்.[40]

தலைவன் தலைவியரை விட்டுப் பிரியாது அவர்களுடன் இருந்து அவர்கட்குக் குற்றேவல் செய்யும் ஏவலர் இளையராவார். இளையோர் கூற்றுகள் பற்றித் தொல்காப்பியர்,

"ஆற்றது பண்பும் கருமத்து வினையும்
ஏவன் முடியும் வினாவும் செப்பும்
ஆற்றிடைக் கண்ட பொருளும் இறைச்சியும்
தோற்றம் சான்ற அன்னவை பிறவும்
இளையோர்க்குரிய கிளவி என்ப"[41]

என்றும் நூற்பாவில் கூறுகின்றார்.

"உழைக்குறுந்தொழிலும் காப்பும் உயர்ந்தோர்
நடக்கை யெல்லாம் அவர்கட் படுமே"[42]

என அவர் மேலும் இளையோர் செயல்களைக் குறிப்பிடுவர். நம்பியகப்பொருளும் அவர்கட்குரிய செயல்களைத் தொகுத்துக் கூறியுள்ளது.[43] வினைமுற்றி மீளுந் தலைவனுடன் அவனுக்குக் குற்றேவேல் புரியும் இளையர் கூறுகின்றதைக் காண்கிறோம்.[44] பாடினி, கூத்தர், விருந்தினர் ஆகியோர் ஊடல் தீர்க்க வருகின்றமை அறிகிறோம். எனினும் இவர்கள் கூற்று நிகழ்த்தியதற்குச் சங்க இலக்கியங்களிற் சான்றில்லை, என ஆராயப்படுகின்றது.

## *2:13* கூற்றிற்குரியோர் உறவு நிலைகள்

### பாங்கன்

இயற்கைப் புணர்ச்சிக்குப் பின், காமத்தைக் கட்டுப்படுத்த இயலாது உடல் மெலிந்து வந்த தலைவனிடம் பாங்கன் கூறும் கூற்றுகள் அவனுக்கு அறிவுரை கூறுவனவாகவும், அவன் காமத்தைக் கட்டுப்படுத்தும் பாங்கிலும், கடந்து கழறியுரைப்பனவாகவும் அமைந்துள்ளன. தன்னுணர்வைப் பங்கு கொள்ளாது மறுத்துரைக்கும் பாங்கன் முன் தலைவன் கூற விரும்பாமல் நெஞ்சிற்குக் கூறுகின்றதைக் காண்கிறோம். கழறியுரைக்கும் பாங்கன், தன் கூற்றில் தலைவனியல்புகளை எடுத்து முதலிற்கூறிப்பின் அவன் தகுதிக்கு அவன் ஒரு பெண்ணால் உடல்மெலிந்து துன்புறுதல் தகாதெனக் கூறுவதால் தலைவனின் நிலைமாறாப் பண்பியல்புகளை நாம் அறிகிறோம்.[45]

## *2:14* தோழி கூற்றுவழி உறவில் சொல்லாடற் திறன்

களவு கற்பு ஆகியவற்றில் கூற்று நிகழ்த்துந்தோழி சொல்லாடுந்திறன் வியக்கத்தக்கதாய் அமைந்துள்ளது. இயற்கைப் புணர்ச்சிக்கண் தலைவியின் மெய் வேறுபாட்டை உணர்ந்த தோழி, நாண நாட்டத்தாலும் நடுங்க நாட்டத்தாலும் சிலகூறித்தலைவி தலைவனுடன் கொண்ட உறவை அறிய முனையும்போது தோழியின் சொல்லாடுந்திறன் மிளிர்கின்றமை காண்கிறோம். குறையிரக்குந் தலைவனைக் கண்ட தோழி, தலைவிக்கும் அவனுக்கும் தொடர்புள்ளதை

ஊகமாயறிந்தாலும், அதனைத் தலைவி சொல்லவில்லையே என எண்ணி, அதனை ஆராயுமுகத்தான் அவளிடம் கேட்கும் முறையே இதனை விளக்கப்போதுமானதாகும். இங்கே, தலைவன் தன் காதலைக் குறிப்பாக உணர்த்துந்திறன் வெளிப்படுத்தப்படுகிறது.

"கயமலர் வண்காணாய்! காணாய், ஒருவன்
-----------------------------------------
நோயுரைக் கல்லான் பெயரும்மன் பல்நாளும்"[46]

எனத் தோழி கூறுவதால் இது புலனாகிறது. தான் கேட்பதால் தலைவிக்கு எத்தீங்கும் வரக் கூடாதென வெளிப்படையாக விசாரிக்காது தோழி மறைமுகமாக வினாவுகின்றாள். பொய்யும் மெய்யுங்கலந்து பேசுகிறாள். தலைவனிடம் தனக்குத் தலைவியைத் தெரியாது என்பதுபோலப்பேசித் தலைவனின் களவை அறிகிறாள். தலைவி மிகுந்த இளையள் எனக் கூறியும் தலைவன் உயர்குடியினன் எனவுரைத்தும்; கையுறை மறுத்தும் அவன் வரவால் வரும் ஏதம் காட்டியும் தலைவனின் காதலினையும், அதன் ஆழத்தையும் சோதிக்கின்றாள். இவற்றால் தலைவனின் உண்மை அன்பானது வெளிப்படுவதைக் காண்கிறோம்.

தலைவி, தலைவனின் பிரிவால் கொண்டுள்ள ஏக்கத்தைத் தான் உணர்ந்து கொண்டுள்ளமையினைத் தலைவிக்குக் காட்டுவதற்காகத் தோழி, தான் தலைவனுடன் தொடர்பு கொண்டதாகவும், அவன் பிரிவால் ஏங்குவதாகவும் கூறுகின்றாள். தலைவன் தோற்றப்பொலிவைக் கண்டு, தன் தொடி நெகிழ்ந்ததாகவும், நெஞ்சம் நெகிழ்ந்த நினைவுடையவளாகத்தான் ஆனதாகவும், அவன் அணைப்பு மீண்டும் கிடைக்குமாவென ஏங்குவதாகவும், தன் நெஞ்சம் அவன் அணைப்பை நினைத்து அவனிடம் சென்றுவிட்டதாகவும் தோழி பொய்யாகக் கூறுவன தலைவியின் மனநிலையை அவளுக்கு எடுத்துரைப்பதற்காகவாம்.[47] அதேபோழ்து அவளால் தலைவனின் தோற்றப்பொலிவு, அன்பு செலுத்தும் இயல்பு முதலியனவும் வெளியாக்கப்படுதல் காணத்தக்கது. தலைவிகொண்ட நாணத்தைப் போக்குவதற்கு முயல்கின்ற தோழி, தன்னை அணைத்துச் சென்ற தலைவனின் செயலை நகைத்துவர உடன் அழைப்பதனால் தலைவன் குறையை தேர்தற்கான துணிவைத் தலைவிக்கு உண்டாக்குகின்றாள். தலைவன் தன் முன்கையைப் பற்றியதாக மீண்டும் பொய்யாகக் கூறித் தலைவி என்ன நினைக்கின்றாள். என்பதை, அவள்மாட்டுத் தோன்றும் மெய்ப்பாடுகளின் வழியே ஆராய்கின்றாள்.[48] இவ்வாறு தோழி ஆராய்வதைத் தொல்காப்பியர்

"மெய்யினும் பொய்யினும் வழிவழி பிழையாது
பல்வேறு கவர்பொருள் நாட்டத்தான்"[49]

என்னும் பகுதியில் கூறுகின்றார்.

அக நிகழ்ச்சிகள் முழுவதிலும் சிறப்பான வகையில் தோழியின் சொல்லாடுந்திறம் அமைந்து கிடப்பதைக் காணாலாம். "பெருங்கல் வேலிச் சிறு குடி யாது? செய்புனங் காவலும் நுமதோ?" என வினாவிக் குறை வேண்டுந் தலைவனை ஆராய்வதிலும் களவொழுக்கத்தைத் தலைவி தனக்கு வெளிப்படுத்து முகத்தான் ஆராய்வதிலும் அவளுக்கிருந்த சொல்லாடுந் திறனை மேலே காண்டோம். மேலும் தலைவனுக்குக் குறை நயப்பித்தலிலும், தலைவன் களவு நீட்டிக்கும் போது வரைவு கடாதலிலும், அறத்தோடு நிற்றலில், உடன்போக்கிலும், தலைவியைப்பிரிய விரும்புந் தலைவனைச் செல வழுங்குவித்தலிலும், தலைவன் பிரிந்த நிலையில் வாழுந் தலைவியை ஆற்றுவித்தலிலும் போற்றாவொழுக்கம் புரிந்து திரும்பிய தலைவனுக்கு வாயில் நேர்தலிலும், மறுத்தலிலும் அவருடைய சொல்லாடுந் திறமை ஒளிர்கின்றது. தோழியின் சொல்லாடுந்திறன் தனியே ஆராயத் தக்கதொன்று. ஆதலின் அது, தலைவனின் இயல்புகளைப் புலப்படுத்தும் வகையை உணர்த்த, ஓரளவே சுருக்கமாக இங்கு ஆய்ந்துரைக்கப்படுகிறது.

> "நன்றல் காலையும் நட்பிற் கோடார்'
> சென்று வழிபடூஉம் திரியில் சூழ்ச்சி"[50]

என்னும் தோழி கூற்றுத் தலைவனின் முயற்சியை எடுத்துக்காட்டுவதுடன் அவன் சூழ்ச்சித் திறனையும் புலப்படுத்துகிறது.

தலைவி தலைவனுக்குக் குறைநயக்க வேண்டுமெனத் தோழி, மென்மையாக வற்புறுத்தலும், தலைவன் மடலேறத் துணிந்தபோது அவள் வன்மையாக வற்புறுத்துதலும் காண்கிறோம். களவைக் கற்பாக்க விரும்புந் தோழி அதன் முன்னேற்பாடாக ஏற்படுத்திச் சொல்லாடுவதும், கையுறை மறுத்துச் சொல்லாடுவதும். வரைவு கடாவிச் சொல்லாடுதலும் மிகச் சிறந்த முறையில் அமைந்துள்ளன. தலைவன் புணர்வு, வேட்கை காரணமாக, அவன் மேற்கொள்ளும் இயக்கங்களால் அலர் தோன்றுகிறது. அவன் பிரிந்திருந்தால் தலைவிக்கு ஆற்றாமை தோன்றுகிறது. இவ்விரு வகையிலிந் தலைவியுறுந் துயர்முடிக்க வரைதல் ஒன்றே வழியென உணர்ந்து தோழி மிக மிகத் திறம் படச் சொல்லாடி வரைவு கடாவுகின்றாள்.

தலைவியின் மெய் வேறுபாட்டையும், உண்ணாமை, உறங்காமை, பயிலாமைகளையும் கண்ணுற்ற செவிலியோ நற்றாயோ உற்றதென் என வினாவுங் காலத்து அறத்தோடு நிற்குந்தோழி ஏதீடுகள் வைத்துக் கூறுகின்றபோதும் அவள் சொல்லாடுந் திறம் சிறந்துள்ளது.

நொதுமலர் வரைவு வந்து, கற்புக்குச் சிதைவு உருஞ்சூழலில் தற்காப்பு உணர்வடிப்படையிலும் வெறியாட்டுச் சூழலில் தாயை ஏளனமாகத் தாக்கி உரைக்கும் பாங்கிலும் தோழி சொல்லாடுகின்றாள். உடன் போக்கில் தலைவியைத் தலைவனிடம் ஒப்படைத்து, ஓம்படைகூறுமிடத்துத் தோழியின் சொல்லாடுந் திறமையைக்

காண்கிறோம். தலைவன் கடமைக்காகப் பொருளீட்டச் செல்லப்போவதை உணர்த்தியபோது, அவனைப் பிரிந்தால் தலைவியின் உயிர் நீங்கிப்போகுமென்பதைத் திறமையாக வெளிப்படுத்தி அவன் பிரிவைத்தவிர்க்குமாறு செய்கிறாள். தலைவன் பொருள் தேடப் பிரிந்தபோது ஆற்றாது புலம்பிய தலைவியிடம், பருவ வரவைக் காட்டித் தலைவன் வருவான் எனக் கூறியும், பருவம் இயல்புக்கு மாறாக வந்ததெனக்கூறியும், பொருள்தேடச் செல்வது அவன் தவிர்க்க முடியாத கடமையெனவும் திறம்படக்கூறித் தலைவியைத் தேற்றுகின்றாள்.

"வினையே ஆடவர்க்கு உயிரே"[51]
"கழியக் காதல ராயினும் சான்றோர்
பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார்"[52]

என்பன தலைவன் இயல்புகளை வெளிப்படுத்துதலைக் காணலாம். தலைவன் பொருள் தேடப் பிரிவது பற்றித் தோழி கூறுவன அவனுடைய கடமையுணர்ச்சியையும் முயற்சியுடைமையும் வெளிப்படுத்துவன.

## *2:15* தலைவி கூற்றுவழி உறவில் சொல்லாடல் திறன்

அகவாழ்வு வட்டத்தின் மையமான தலைவி, புணர்ச்சிக்கு முன் சொல்லாடலைக் காணோம். அவள் களவில் அருகியும், கற்பில் பெருகியும் சொல்லாடுகிறாள். அவளுடைய கூற்றாக உள்ள *559* பாடல்களுள் *358* பாடல்கள், அவள் தோழிக்குரைப்பன.[53] அவள் கூற்றுக்கள் பெரும்பான்மையும் தன் வரைவு நோக்கியனவாகவும் பிரிந்து தலைவன் வரவு நோக்கியனவாகவும் பிரிந்த தலைவன் வரவு நோக்கியனவாகவும் அமைந்துள்ளன. களவிற்குப் புணர்தல் ஒன்றே உரிப்பொருள். கற்பிற்கு இருத்தல், இரங்கல், பிரிதல், ஊடல் என்பன உரிப்பொருள்கள். களவில் தலைவி புணர்ந்து பிரிந்த தலைவன் வரவை எதிர்பார்த்தும், அப்புணர்வைத் தடையின்றிப் பெறத்துணையால், வரைவு நோக்கியும் சொல்லாடுகின்றாள். அவ்வளவு அமைக்கும் கடமையைத் தோழி மேற்கொள்வதால் களவில் தலைவி மிகுதியும் பேசுவதில்லை. எனினும் புணர்ந்து பிரிந்த தலைவன் வரவுக்காக அவள் ஏங்கும் ஏக்கத்தையும், வரைவிடை வைத்துப் பிரிந்த தலைவன் வரவு காணாது அவளுறுந் துயரையும் அவள் கூற்றில் காண முடிகிறது.

கற்புக் காலத்தில் தலைவி தன் உணர்வுகளை மறைக்காமல் வெளிப்படையாக உரைக்கின்றாள். தலைவன் தலைவியின் உணர்வுகளைப் புறக்கணித்து விட்டுப் பொருள்வயிற் பிரிந்து காலம் நீட்டிக்கின்றான் என்றும், புறத்தொழுக்கம் மேற்கொள்கின்றான் என்றும் எண்ணிய தலைவி, தன் பிரிவுத்துயரை வெளியிடுகிறாள். தலைவனின் பரத்தைமையைச் சாடுகிறாள். தன்னை நொந்துரைக்கிறாள். தலைவியின் கூற்றால் தலைவனின் இயல்புகள் பல அறியக் கிடக்கின்றன. தலைவன், காண்பதற்கினியன்.[54] என்றுகூறி, அவனைக் காணாது போயின் தன்னுயிர் நீங்குமெனத் தலைவி கூறுவதால் தலைவனின் இனிய

தோற்றத்தை வெளிப்படுத்துகிறாள். தலைவியின் சொல்லாடலால் அவன் தலைவிமாட்டுப் பேரன்புடையவன் என்பது வெளிப்படுத்துகிறாள்.[55]

தலைவியின் சொல்லாடலால் அவன் தலைவிமாட்டுப் பேரன்புடையவன் என்பது புலப்படுகிறது.[56] அவனுடைய அன்பு,

"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரள ன்றே"[57]

எனத் தலைவி கூறுவது கொண்டறியலாம். தலைவன் நற்குடியினன், கூடியவரைப் பிரியாதவன், பொய்பேசாதவன், அன்புடையவன் எனத்தோழி கூறியவற்றை எடுத்துக் காட்டித் தலைவியும் அவன் "வதுவை நாளினும் இனியன்" எனமேலும் கூறுவதைக் காண்கிறோம்.[58] தலைவன் சொன்ன சொல் தவறாதவன் என்பதை,

"-----------------------காதலர்
நிலம்புடை பெயர்வ தாயினும் கூறிய
சொற்புடை பெயர்தலோ இலரே"[59]

என்னும் தலைவி கூற்றால் அறிய முடிகிறது.

தலைவனின் புறத்தொழுக்கம் காரணமாகத் தலைவி அவன் மீது கொண்ட கோபத்தால் சொல்லாடும்போது தலைவனை,

"வல்லை மன்ற பொய்த்தல்
வல்லாய் மன்றநீ யல்லது செயலே"[60]

எனக் கூறுதலையும் "அறனிலா அன்பிலி"[61] எனச் சாடுதலையும் காண்கிறோம்.

### *2.16* பரத்தை கூற்றுவழி உறவில் சொல்லாடல் திறன்

தலைவன் தன்னுடன் இருக்கும்போதும், அவன் தன்னைப் பிரிந்து தலைவியுடன் இருக்கும்போதும், பரத்தை கூறும் கூற்றுகள் அவளுடைய சொல்லாடுந்திறமையை வெளிப்படுத்தும்.

"தலைவன், வஞ்சியன்ன தன் நலத்து"[62]

என்னும் செய்திப்படி, இளமை அழகை விரும்பித் தன்னிடம் வந்து உறவுகொண்டான் என எண்ணும் பரத்தை, தலைவி தன்னை இகழ்ந்தாள் எனக் கேட்டபோது, தலைவியின் முதுமையை எள்ளிப்பேசுகின்றாள். அப்போது அவள், 'தலைவியைப்

புதல்வன் தாய்[63] எனக் கூறி, அவள் புதல்வனைப் பெற்றமையால் அழகுகுன்றி முதுமையளாயுள்ளாள் என எள்ளிச் சொல்லாடுகிறாள். தலைவியின் புறக்கோல எழில் புதல்வனைப் பெற்றமையால் குன்றிருப்பினும் அவளடைந்த தாய்மை எழில் நலத்தைத் தலைவன் பெரிதும் விரும்பித் தலைவியைக் கண்டபோது ஆடிப் பாவையென ஆடுகின்றான் என்று தலைவனையும் சாடுகின்றாள். இதிலிருந்து உறவின் கசப்பான செய்தி தெரிகின்றது. தலைவன் தன்மீது கொண்ட அன்பினால் தன்னிடம் வந்தான் எனக் கூறித் தலைவி பெருமிதங்கொண்டதை அறிந்த பரத்தை. தன்னால் நுகர்ந்து கழிக்கப்பட்ட மார்பையே தலைவி தான் நுகர்தற்காகக் காவல் செய்கிறாள் எனச் சாடியுரைக்கிறாள்.

தலைவி தன்னைப் பற்றிப் புறங்கூறுவன அறிந்த பரத்தை. தலைவனைக் கவருவேன் எனக் கூறுகிறாள். அவனுடன் புதுப்புனல் ஆடச் செல்கின்றேன்; முடிந்தால் தலைவி அவனை மீட்கட்டும் என்று, கூறுவதுடன் அவனைத் தன் விருப்பம்போல ஆட்டிவைக்க முடியுமெனும் நம்பிக்கை தெரியுமாறு கூறி, அது நிறைவேறாது போயின் தன் நலன் அழிக எனவும் பரத்தை வஞ்சினம் கூறுகின்றாள். தன்னை விட்டுச் சென்ற தலைவனுக்குத் தலைவியும் கிடைக்கக் கூடாதென்று பொறாமையுடன் பரத்தை, தலைவியின் பாங்காயினார் கேட்குமாறு தலைவனுக்கும் தமக்குமுள்ள நெருக்கமான தொடர்பைக் கூறித் தலைவிக்கு வெறுப்புண்டாக்கும் வகையில் சொல்லாடுகின்றாள். தனக்குக் கிடைக்காத தலைவனை அலர்ப் பொருளாக்கி இழிவு செய்து உரைப்பதுங் நிகழ்த்துகிறது.

பரத்தை அறியாது இரவில், அவளை விட்டுப்பிரிந்து தன் புதல்வனையும், அவனை ஈன்ற மனைவியையும் பார்க்கத் தலைவன் செல்கிறான். இதனையறிந்த பரத்தை அவனைக் கள்வனுக்கு ஒப்பிடுகிறாள் என்பதை இப்பாடல் இதனைக் காட்டும்.[64] அதுவரை தலைவன் மனந்தன்னையே நாடி நிற்பதாக நினைத்த பரத்தை, அப்போதுதான் அது, தலைவியின் பக்கம் கவிந்துள்ளது என்பதை உணர்கிறது. அதனால் கொண்ட மனக் காழ்ப்புக் காரணமாகத் தலைவனை அவள் கள்வன் எனக் கூறுகின்றாள்.

## *2.17* செவிலி நற்றாய் கூற்றுவழி உறவில் சொல்லாடல் திறன்.

களவில் நற்றாய் கூற்று நிகழ்வதாகத் தொல்காப்பியர் சுட்டவில்லை. செவிலி கூற்று முதல் மூன்று இடங்களில் நிகழும் என்று அவர் கூறுகிறாள்.[65] ஆனால் அவள் தொல்காப்பியர் குறித்தவாறு சொல்லாடியதற்குச் சான்றில்லை. ஆனாலும், தோழி செவிலி கூற்றாகக் கொண்டெடுத்து மொழிவதை இலக்கியங்களிற் காண்கிறோம். தலைவி உடன்போக்கில், தாயின் கூற்றைக் காண்கிறோம். களவு கற்பு ஆகிய இரண்டையும் பொதுப்பட இணைத்தும் பேசும் அகத்திணையில் தாயின் கூற்று இடம் பெற்றுள்ளது.

தாய் மனையின் கண்ணிருந்தும், தலைவியின் பின் சென்றும் வருந்திக் கூற்று நிகழ்த்துகிறாள். செவிலியும் அவ்வாறே கூற்று நிகழ்த்தக் காணலாம். ஆனால் களவில் அவர்கள் கூற்று நிகழ்த்தியதாகப் பாடல் ஒன்றும் இல்லை. ஆனால் களாவில் வெளிப்பாடாய் கற்பாகிற, உடன்போக்கில் அவர்கள் கூற்று நிகழ்த்துவதைக் காண்கிறோம். ஊர் அலர் தூற்றியபோது, தான் அறிந்தும் அறியாதது போலப் பாசம் காரணமாகப் பிரிவு காட்டியிருந்ததால், தம்மகளை இழந்து துயருறுவதாகத் தாய் உணர்கின்றமைத் தெரிகிறது என்பதனை இப்பாடல் காட்டும்.[66] தலைவியைப் பிரிந்த தாய் அளவில்லாத் துயருறுகின்றாள்; அவள் பந்தும் பாவையும் ஆயத்தாருடன் சேர்ந்தாடிய சூழலை எண்ணிப் புலம்புகின்றாள் என்பது இப்பாடலால் புலனாகும்.[67]

தாய், தான் பேணி வளர்த்தமையையும் உணராது தன் மகள் போனதை எண்ணி வருந்துகின்றாள்.

"ஈன்று புறந்தந்த எம்மும் உள்ளாது[68]

என்பதனைக் காட்டும்.

தலைவியை உடன் அழைத்துச் சென்ற தலைவனைச் சாடி உரைப்பதையுங் காண்கிறோம்.

"எஞ்சா வஞ்சினம் நெஞ்சுணக் கூறி"[69]
நெஞ்சுணத் தேற்றிய வஞ்சின காளை[70]
கூர் வேல் விடலை பொய்ப்பாகிப் போகி[71]
ஏதிலன் பொய்மொழி நம்பி[72]
நாடன் கற்பா ராட்ட________ பொய் மருண்டு[73]
வன்க ணாளன் இன்சொல் பணிப்ப நம்பி[74]
"மையணல் காளை பொய்புக லாக
அருஞ்சுரம் இறைந்தனள்"[75]

என்பன தாய், தலைவன் மீது கொண்ட சினத்தால் கூறியன மகட்போக்கிய தாய், தலைவனையே யன்றி, அவன் துன்பம் போலத் தலைவன் தாயும் துன்பப் படவேண்டுமென்கிறாள் என்பதனை இப்பாடல்களால் தெளியலாம். உடன் போக்கை அறிந்து தலைவனையும், அவன் தாயையும் சாடிய தலைவியின் தாய், உடன்போக்கு, அறன் என்பதை அறிந்து மகிழுங்காட்சிகளும் சங்க இலக்கியத்துள் காணப்படுகின்றன. தலைவனுந் தலைவியுந் செல்லும் வழி இனியதாகுக எனத் தாய் கூறுகிறாள் என்பதை இப்பாடல் அவர்கள் எடுத்த காரியம் இனிது நிறைவேற வேண்டும் என்னும் எண்ணத்தால், அவர்களுக்குத் துன்பம் வரலாகாது எனத் தாய் விரும்பியுரைக்கின்றதைக் காண்கிறோம்.[76]

வரைவிடை வைத்துப் பொருள் வயிற் பிரிந்த தலைவன் காலம் நீட்டித்தபோது, அவன் களவைத் தோழி அறத்தோடு நின்றமையால் அறிந்த செவிலி அவன் கால நீட்டிப்பை ஐயுற்று, அவன் தலைவியைக் கைவிட்டுவிட்டால் என் செய்வதென அஞ்சி அதனைக் குறிப்பாக வெளிப்படுத்துகின்றாள். இதை அறிந்ததோழி, செவிலியின் ஐயத்தைப் போக்கியுரைக்கிறாள் என்பதனை இப்பாடல் இதனை உணர்த்தும்.[77] தலைவன் தன் மகளைக் கைவிட்டு விடாமல் மணந்து இல்லறம் புகவேண்டும் என்னும் வேட்கையே நற்றாய், செவிலித்தாய்க் கூற்றால் புலப்படுகிறது.

## *2.18* பிறமாந்தர் கூற்றுவழி உறவில் சொல்லாடல் திறன்

பாடினி, விருந்தினர், விறலியர், அறிவர், கூத்தர், இளையோர் ஆகியோரின் கூற்றுக்கள் இலக்கியங்களில் இடம் பெறவில்லை. அந்தணர் மகட் போக்கிய தாயைத் தேற்றியுரைத்தல் என்பதனை இப்பாடலால் உணர்த்தப்படுகிறது.[78]

பாணன் தலைவியோடு தலைவனை இணைக்கவும் பரத்தையோடு தலைவனை உறவு கொள்ளச் செய்யவும் சொல்லாடுதலைக் காண்கிறோம். அவன் தனக்கென அறக்கட்டுப்பாடொன்றும் கொள்ளாததால் தலைவியாலுந் தோழியாலும் பெரிதும் சாடப்படுகின்றான்.

கண்டோர், உடன்போக்கில், இடைச்சுரத்தில் பேசுவதைக் காண்கிறோம். உடன்போக்கு மேற்கொண்ட தலைவன் தலைவியர்க்கு இரங்கியும்,[79] பின்சென்று தேடும் தாயை ஆற்றுப் படுத்தியும் காரணங் காட்டி அமைதிப்படுத்தியும்[80] உரைக்கின்றனர். தலைவனும் தலைவியும் பகலில் இளைப்பாறத் தங்கிய சிற்றூரில் அவர்கள் மனமின்றி உடன் இருந்த காட்சி கண்டு, கல்லென ஆரவாரம் எழும்போது, பெண்களைப் பெற்ற தாயார்க்கெல்லாம் பெரிய துன்பத்தை அளித்ததாகக் கண்டோர் கூறுவதைக் காண்கிறோம்.[81]

## *2:19* தலைவி கூற்றுவழி உறவுகள்

சங்க இலக்கியத்தில் தலைவி என்ற அகமாந்தர் படைப்பு மிகப் பெரும் முக்கிய இடத்தைப் பெற்றுள்ளது. பிற பாத்திரங்கள் எல்லாம் இத்தலைவியைச் சுற்றியே அமைந்துள்ளன. சுருங்கக்கூறின் பிற அகமாந்தர் பாத்திரங்கள் தலைவிக்காகப் படைக்கப்பட்டவை எனலாம். இத்தலைவியை மையமாகக் கொண்டு பிறபாத்திரங்கள் இயங்குகின்றன.

தலைவி என்ற சொல்லுக்குக் கழகத் தமிழகராதி, 'எப்பொருட்கும் இறைவி, மனைவி, தலைமைப்பெண், அரசி, அகப்பொருட் கிழத்தி, கதாநாயகி'[82] என்று

'தலைமகள்' என்பதற்குத் 'தலைவி', மனைவி, முதற்பெண்',[83] என்னும் பொருள் கூறுகின்றது.

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழகராதி, தலைவி, தலைமகள் எனும் சொற்களுக்குத் தலைமைப் பெண் lady mistress, matron, மனைவி அகப்பொருள் கிழத்தி,- Heroin of a love-poem, கதாநாயகி[84]- Heroin of a story என்று பொருள் கூறுகின்றது.

தலைவி பற்றிய ஆய்வறிஞர் கூற்றுகள் இங்கு எண்ணிப் பார்க்கத்தக்கன. அகத்திணை மாந்தர்களை இணைத்து நிற்கும் இணைப்பு பாலம் தோழி எனில், அகத்திணைக்கு அமைந்த மையப் புள்ளி தலைவி எனலாம். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐந்திணைகளின் உரிப்பொருள்களாகிய புணர்தல், இருத்தல், ஊடல், இரங்கல், பிரிதல் ஆகிய ஐவகை உணர்வுகளும். தலைவியை மையமாகக் கொண்டவையே.

"அகத்திணையில் வரும் பிற படைப்புக்கள், தலைவியின் கருத்தைப் பிர திபலிப்பவை அல்லது தலைவியின் படைப்பில் ஒளி ஊட்டுபவை. அம்மாந்தர்களுக்கு அமைந்த பின்புலங்கள் தலைவியின் மன உணர்வுகளை விளக்க முனைபவை,"[85] என்கிறார் ஆ.இராமகிருட்டினன். "காதலன் காதலி இருவரும் தலைவன் தலைவி என்று பெயர் பெற்றாலும், அகத்தலைமை பெண்ணுக்கே உரியது. புறத்தலைமையுடைய ஆடவன் இல்லத் தலைமையையும் உடன் கொள்வது ஒத்துவராது. மகவைப் பொறுக்கும் பெண்ணினத்துக்கே குடும்பத்தைச் சுமக்கும் பொறுப்பு உரியதும் எளியதும் நல்லதும் ஆம். ஆதலின் தலைவன், தோழி, செவிலி, அன்னை முதலான அகமாந்தர்கள் எல்லோரும் தலைவியின் தலைமை நோக்கி இயங்குபவர்கள்."[8] என்கிறார் வ.சுப.மாணிக்கம்.

அகப் பாடல்களில் தலைவியைப் பற்றி எண்ணும் பொழுது அவள் ஒரு குறிக்கோள் பெண் எனலாம். மனதளவிலும், உடலளவிலும், ஊர் அளவிலும், உலகத்தளவிலும் அனுபவசாலியாகத் திகழ்கிறாள். ஒவ்வொரு உணர்வுகளிலும் அவளுடைய பண்பின் சாயல் சிறந்தோங்கி நிற்கிறது[87] என் ஈ.கோ.பாஸ்கரதாஸ் கூறுகிறார்.

இவ்வாய்வறிஞர் கூற்றுகள் வழி அகமாந்தர்களுள் மிகமுக்கிய சிறப்பிடம் பெறும் தலைவியின் இன்றியமையாமையும் இத்தலைவி வழி பிற மாந்தர்கள் விளக்கப் படுவதையும் உணரமுடிகிறது.

தலைவி கூற்றில் நற்றிணையில் *85* பாடல்களும், குறுந்தொகையில் *180* பாடல்களும், ஐங்குறுநூற்றில் *148* பாடல்களும், கலித்தொகையில் *46* பாடல்களும், அகநானூற்றில் *101* பாடல்களும், பரிபாடலில் *2* பாடல்களும் என மொத்தம் *562*

பாடல்கள் உள்ளன.[88] இவற்றுள் நற்றிணையில் ஒரு பாடலும்[89] அகநானூற்றில் *10* பாடல்களும்[90], உரையாசிரியர்களின் துறைவிளக்கத்தில் தலைவி தோழி ஆகிய இருவர் கூற்றாகவும் கூறக்காணாலாம். இவ்வாய்வில் இப்பாடல்கள் மட்டும் முதலில் கூறப்பட்ட துறை விளக்கம் குறிப்புவழி தலைவி கூற்றாகவே கொண்டு ஆராயப்படுகின்றன.

கலித்தொகையில் *6* பாடல்கள்[91] தலைவனும், தலைவியும் உரையாடும் நிலையில் அமைந்துள்ளன. எஞ்சிய பாடல்கள் தலைவியின் கூற்றாகவே அமைந்துள்ளன. இவ்வாய்வில் தலைவி, தோழி, தலைவன், பாணன், விறலி, அந்தணர், கண்டோர், காமம் மிக்க கழிபடர் கிளவி, தன் நெஞ்சு ஆகிய நிலைகளில் அமைந்த கூற்றுகளின் வழி ஆராயப்படுகின்றன. கலித்தொகையில் வருகின்ற, பெருந்திணை தலைவியரின் கூற்றுகள் ஆராயப்பெறவில்லை. ஐந்திணை அன்புறவு மட்டுமே ஆராயப்பட்டுள்ளன.

**களவு நெறி**

**_2:20_ தலைவி தோழியிடம் நிகழ்த்தும் கூற்றுவழி உறவு.**

தலைவி கூற்றுப் பாடல்களில் *412* பாடல்கள்[92] தோழியிடம் கூறுவதாக அமைந்துள்ளன. தலைவன் கூற்றுப் பாடல்களில் மிக அதிகமாக நெஞ்சிடம் கூற்று நிகழ்த்தும் பாடல்கள் இடம் பெறுகின்றன. இவ்வாறு தலைவன், தலைவி பாடல்கள் அமையக் காரணம் தம் உள்ளக்கிடக்கையை வெளிக்காட்ட முனைவதே ஆகும்.

ஒன்று பட்ட தலைவன் தலைவி உள்ளக்குறிப்பை அவர்தம் பார்வை காட்டும் என்பதைத் தொல்காப்பியர்,

"நாட்டம் இரண்டும் அறிவுடன் படுவதற்குக்
கூட்டி யுரைக்கும் குறிப்புரை யாகும்"[93]

என்கிறார்.

இத்தகைய, ஒன்றுபட்டுக் கலந்த உள்ளத்தவராய் தலைவன் தலைவியர்க்கு உறவுப் பாலமாகத் திகழ்பவள் தலைவியின் தோழி ஆவாள். அவளிடம் தலைவி நிகழ்த்தும் கூற்றுகளால் தலைவி தலைவனுக்கான உறவுத்திறம் வெளிப்படுகின்றது.

**_2:21_ இரவுக் குறியில்**

இரவுக்குறி குறித்த தலைவியின் கூற்றுக்கள், குறுந்தொகையில் மட்டும் காணப்படுகின்றன. குறிஞ்சித் திணையில் கபிலரும் மாடலூர்கிழாரும் முறையே ஒரு பாடலும்[94] நெய்தல் திணையில் அம்மூவன் ஒரு பாடலும்[95] பாடியுள்ளனர்.

தோழி தலைவியிடத்து இரவுக்குறி பற்றி உணர்த்துகிறாள். அப்போது தலைவி, என்னுடைய நெஞ்சம் அவர் திறந்து யாம் வருந்துகின்ற போது உடன் இருந்து வருந்தி நின்றது என்று கூறி தலைவன் இரவுக் குறி வரும் விதம் அஞ்சி அதனை மறுத்துரைக்கிறாள்.[96]

தலைவனுக்கு இரவுக்குறி நேர்ந்ததைத் தோழி தலைவிக்கு அதனைக் கூறுமிடத்து அதனைக் கேட்ட தலைவி, தலைவர் மார்பை நினைக்கும் பொழுது காமநோய் மிகுகின்றது; அந்நோய் தலைவனைத் தழுவினால் நீங்கும்[97] என்று கூறி இரவு குறித்து உடன்படுகிறாள்.

தலைவன் செய்த இரவுக்குறியை மாறாக உணர்ந்து சென்று தலைவனைக் காணாது மீண்ட தலைவி, பின்னொரு நாள் அவன் வரவு உணர்த்திய தோழிக்கு நீ உரைப்பது மெய்யோ?[98] என ஐயுற்று வினவுகிறாள்.

### *2:22* காப்பு மிகுதியில்

காப்பு மிகுதிக் கண் ஆற்றாத தலைவி கூறும் கூற்று குறுந்தொகை நெய்தல் திணையில் சிறைக்குடி ஆந்தையார் பாடிய பாடலில் மட்டும் காணப்படுகிறது.[99] இற்செறிப்பு பற்றிய ஆய்வாளர் கருத்து ஈண்டு. நோக்கத்தக்கன. .

இற்செறிப்பு இயற்கையின் நிகழ்ச்சியாலும், ஐயத்தின் விளைவாலும் நிகழும். திணை முதிர்ச்சியின் காரணமாகத் தலைவி இயல்பாக இற்செறிக்கப்படுவாள். ஊரவரின் அலர், தலைவனின் வருகை, அவன் உறவால் தலைவியின் உள்ளத்திலும், உடலிலும் ஆற்றாமையால் ஏற்பட்ட ஐயத்தின் விளைவாகும்."[100] என்றுரைக்கிறார் சரளா இராசகோபாலன்.

"இற்செறிப்பு என்னும் குறியீட்டுச் சொல் பெண்களை வீட்டுக்குள் கட்டுப்படுத்திய நிலையைக் காட்டுவதாகும்"[101] என்கிறார். ச.மெய்யப்பன்.

"பருவம் வாய்க்கப் பெற்ற பெண், செல்வத்தகுதி மிக்க குடியினள் கடுமையாகப் பாதுகாக்கப்பட்டிருக்கிறாள் என்பது உண்மையே"[102] என்கிறார் கு.வெபாலசுப்பிரமணியன்.

மகளின் களவுப் புணர்ச்சியை உணர்ந்தவராகிய தாயார் தம் பெண்டிரை இற்செறிப்புக்குள்ளாக்கி, காப்பு மிகுதி செய்யும் வழக்கம் சங்க காலத்தில் இருந்தமை புலனாகின்றது. களவொழுக்கம் கொண்ட தலைவி காப்புக்குட் படுத்தப்பட்டபோது, பிரிவுதனித்தவராகிப் பெறுகின்ற துன்பத்திநின்றும் நீங்கித் தப்புவதற்குப் பூவிடைப் பட்டாலும் பல்லாண்டு பிரிந்ததைப் போன்ற துன்பமுறும் அன்றில் பறவையைப் போலப்

பிரிவதற்கு அருமையான காமத்துடன் தன்னுயிர் போகவேண்டும்[103] எனத்தோழியிடம் கூறுகின்றாள்.

### *2:23* சிறைப்புறத்தில்

தலைவன் சிறைப்புறமாக இருக்க தலைவி தோழியிடம் கூறும் கூற்றுகளாக நற்றிணையில் *9* பாடல்களும், குறுந்தொகையில் *16* பாடல்களும்; ஐங்குறுநூற்றில் *15* பாடல்களும், அகநானூற்றில் *14* பாடல்களும் என மொத்தம் *54* பாடல்கள்[104] உள்ளன.

திணை முறையில் குறிஞ்சித்திணையில் *29* பாடல்களும்,[105] நெய்தல் திணையில் *25* பாடல்களும்[106] இடம் பெற்றுள்ளன.

அம்மூவனார் *12* பாடல்களும்[107], கபிலர் *9* பாடல்களும்[108], நக்கீரனார் *3* பாடல்களும்[109], மதுரை இளம்பாலாசிரியன் சேந்தன் கூத்தனார் *2* பாடல்களும்[110], நொச்சிநியமங்கிழார், பேராலவாயர், இளந்திரையனார், நற்றங்கொற்றனார், கச்சிப் பேட்டுப் பெருந்தச்சனார், நம்பி குட்டுவனார், மதுரை மருதங்கிழார் மகனார் பெருங்கண்ணனார், மதுரைப் பெருங்கொல்லன், ஔவையார், வெள்ளூர்கிழார் மகனார் வெண் பூதியார், ஆசிரியன் பெருங்கண்ணன், கழார்க்கீரன் எயிற்றி, கல்லாடனார், பெரும்பாக்கன், வெண்மணிப்பூதி, சேந்தன் கீரன், தும்பிசேர் கீரன், மதுரை ஈழத்துப் பூதன் தேவன், பெருங்குன்றூர் கிழார், எருமை வெளியனார் மகனார் கடலனார், பரணர், எழூஉப்பன்றி நாகன்குமரனார், நக்கண்ணையார், மோசிக்கரையனார், மதுரை பண்ட வாணிகன் இளந் தேவனார், காவட்டனார், ஊட்டியார் ஆகிய *27* புலவர்களும் முறையே ஒரு பாடலும்[111] பெயர் தெரியாத புலவர் ஒரு பாடலும்[112] பாடியுள்ளனர்.

பகற்குறியில் தலைவன் வந்து மறைவாக இருந்தபோது தலைவி தோழியிடம் அருவியைக் கண்ட நான், முதன் முதலில் அவரைச் சந்தித்த இடம் அதுதான் என நினைத்தவுடன் என் கண்களிலிருந்து கண்ணீர் வந்தது. அதைக் கண்ட என் தாய், "என்ன செய்தாய்? அழாதே! உனக்கு முத்தம் தருகிறேன்" என்று இன்சொல் கூறினாள். அப்போது யான் உயிரினும் சிறந்த நாணினை மிக மறந்து உண்மையைச் சொல்ல இருந்தேன். அவ்வாறோ சொல்லாமல் தவிர்த்துப் பிழைத்தேன்[113] என்று கூறுகிறாள். இக் கூற்றில் தாய் மகளைக் கவனிப்பதும். தலைவியின் காதல் உள்ளமும் நாணுடைமையும் அதனைத் தோழியிடம் வெளிப் படக் கூறுவதையும் காண முடிகிறது.

தலைவன் இடையீடு இட்டு தலைவியைச் சந்திப்பதற்காகச் சிறைப் புறத்து இருந்த நிலையில் அவன் கேட்கும்படி தலைவி தோழியிடம், நாமோ அவன் நாட்டிற்குச் சென்று அடைவதற்கு நமக்கு உரிமை இல்லை என்பதை 'நேரம் ஆயினும்' என்ற குறியீட்டுச் சொல்லால் குறிப்பிட்டு, எனினும் அவன் நாட்டுக்குப்

### 2:110 தலைவன் மடல் ஏற-தமர் மகட்கொடுத்திட கண்டோர் கூற்று

கலித்தொகையில் நல்லந்துவனார் பாடல் ஒன்றில், தலைவியின் அருமையைக் கூறி மடல்மா ஊர்ந்து புலம்பிய தலைவனுக்குத் தலைவியின் தமர் அவளை மகட்கொடையாக அளித்த காட்சியைக் கண்டோர் வியந்துரைக்கின்றனர்.[597]

### 2:111 தலைவன் தலைவி உடன்போக்கில் கண்டோர் கூற்று

இத்துறையில் நற்றிணை 2 பாடல்களும் குறுந்தொகையிலும், ஐங்குறுநூற்றிலும் முறையே 3 பாடல்களும்,[598] பாலைத்திணையில் 6 பாடல்களும்[599] உள்ளன.

கொடிய பாலைவழியில் தலைவியை உடன்போக்கில் கொண்டு செல்லும் தலைவனைக் கண்டோர் அவனுள்ளம் மலையைப் புரட்டித் தள்ளுகின்ற இடியைக் காட்டிலும் கடினமானது எனக் குற்றம் சாட்டுவர்.[600] வில்லுடைய இவ்வாடவனது காலில் வீரக்கழலும், தோள் வளை அணிந்த இம்மகளின் மெல்லடியில் சிலம்புகளும் உள்ளனவே! இந்நல்லோர் யாரோ? மணம் புரியாது செல்லும் இவர்கள் நிலை இரங்கத்தக்கது[601] என்றுரைக்கின்றனர். தலைவியைத் தேடிச் செல்லும் தாயின் அன்பையும், தலைவியின் மெல்லடித் தன்மையையும் வியந்துரைக்கின்றனர்.[602] ஊழின் வலிமையால் அவர்கள் கூடினமையால் அவ்வூழை வியந்து போற்றுகின்றனர்.[603] வழியில் ஆறலைக் கள்வரின் இடர்பாடு உண்டாதலால் இரவுப் பொழுதில் மேலும் செல்லுவதைத் தவிர்க்க வேண்டுமென அறிவுறுத்துகின்றனர்.[604] தலைவன் தலைவியின் அன்பை ஒன்றை ஒன்று பிரிந்தால் உயிர்வாழாத அன்றில் பறவையுடன் ஒப்பிட்டு வியப்படைகின்றனர்.[605] ஊரிடைத் தங்கும்போது தலைவியைக் கண்டு வருந்தும் பெண்டிரையும் கண்டு வருந்துகின்றனர்.[606] தலைவன் வளைத்த வெண்கடம்பின் பூவைப் பறித்துத் தலைவி தானும் சூடிப் பஞ்சாய்ப் பாவைக்கும் சூட்டுவதைக் கண்டு தலைவன் மகிழ்வதைக் கண்டோர் தாமும் மகிழ்கின்றனர்.[607]

### 2:112 கண்டோர் தலைவி தாயிடம் கூறும் கூற்று

தலைமகள் புணர்ந்துடன் போவதை இடைச்சுரத்துக் கண்டோர் அவள் தாயிடம் சென்று 'முதற்சூலில் பிறந்த தலைவி தலைவனுடன் காட்டைக் கடந்து சென்றாள். ஆதலால் நீ வருந்தாதே[608] எனக் கூறி ஆற்றுவிக்கின்றனர்.

மகட்போக்கிய நற்றாயது நிலையைக் கண்டோர், 'என் உயிர்கெடுக' என வருந்துவதுடன் மகள் விட்டுச் சென்ற மணல் மீதுள்ள பாவையை எடுத்து அதன் கண்ணையும் நெற்றியையும் தடவி, நொச்சிச் செடியின் வரி நிழலில் கிடத்தித் தாழியிலுள்ள வாடிய குவளை மலரைப் பறித்து அப்பாவைக்குச் சூட்டி என் அரிய மகளே! உன்னை ஈன்ற என் மகளை எனக்குக் கொணர்ந்து காட்டுவாயாக' எனக்

கூறி அழுதனளே என இரங்கிக் கூறுகின்றனர். இதிலிருந்து ஈன்றதாயின் அன்பு புலானாகின்றது.

### *2:113* இடைச் சுரத்துத் தாயைக் கண்டோர் கூற்று

தலைவன் தலைவி உடன்போக்கு சென்ற வழியே பின் சென்ற செவிலி பலரையும் வினவுதலைக் கண்டோர், 'நின் மகள் காளை போன்றவனுடன் செல்வதை யாம் இடைச்சுரத்துக் கண்டோம்[609] என்றும், கரிய அடியுடைய யா என்னும் மரத்தின் செறிவற்ற நிழலில் தங்கிச் சிறு மலைகளைக் கடந்து சென்றால் காணலாம்[610] என்றும் கூறுகின்றனர்.

இடைச்சுரத்து அந்தணரான கண்டோர் தாயிடம் 'பேதையம் பெண்டே' நின் மகள் தலைவன் பாராட்ட குன்றுகள் மிக்க உயர்ந்த மலைகளைக் கடந்து சென்றுவிட்டாள். ஆதலால் அவளைப் பின் தொடர்ந்து சென்று தேடித் துன்புற வேண்டாம்[611] என்று கூறுவன தாயின் அறியாமையையும், அவள் திரும்பிச் செல்லுதலே நலம் என்பதையும் உணர்த்துகிறது.

### *2:114* உடன் போக்கு மீட்சியில் கண்டோர் தாயிடம் கூறும் கூற்று

உடன் சென்ற தலைவி மீண்டு வருதலை அயலோர் *(கண்டோர்)* அத்தாய்க்குக் கூறும் துறையில் ஐங்குறுநூற்று ஒரு பாடலில் அயலோர், துன்புற்று அற நூல்களைச் சினந்து பழிக்கும் அன்னையிடம் விடலை முன்வர அவன் பின் நின் மகள் வந்தாள்[612] என்ற செய்தியைக் கூறுவதன் வாயிலாக, களவு ஒழுக்கத்தில் ஒழுகுதல், உடன்போக்கு செல்லல் ஆகியவை அறநூலுக்கு உடன்பாடே என்பதையும் அவற்றைத் தாய் பழிப்பது அவள் மகளின் பிரிவுத் துயரைத் தாங்காமையே என்பதையும் அறியலாம்.

### *2:115* பிற வாயில்களின் கூற்றுவழி உறவு

நற்றிணையின் ஒரு பாடலில் தேர்ப்பாகன் வாயிலாக இருந்து போர்க்கள வேலை முடிந்து திரும்பிச் செல்லும் தலைவனுக்கு, 'நேற்று இரவுதான் வேந்தன் வினையினின்று விட்டான் என்று வருந்தாதே, பகல் விருந்தோம்பும் உன் மனைவியின் தோளில் துயில விரும்புவனே*!* யான் விரைவில் கொண்டு சேர்ப்பேன் என்று கூறுகிறான்.

உழையர் வாயிலாக இருந்து கூறுவதனை முல்லைத் திணையிலுள்ளா *3* அகநானூற்றுப் பாடல்களில் மட்டும் காணமுடிகின்றது.[613]

போர்க்கள வினை கொண்டு பிரிந்த தலைவனின் அருகில் உள்ள உழையர், வினை முடித்த தலைவனின் தேர் விரைந்து மாலைக் காலத்தில் நகரில் புகுவதனால் தலைவி விருந்து பெறுவாள் போலும்[614] என்றும், வெற்றியுடைய மகிழ்ச்சியுடன் புகவேண்டின் தலைவியின் நெற்றியிலுள்ள பசலை எங்குத் தங்கும்[615] என்றும் கூறுகின்றனர்.

மேலும் வினைமுடிந்து விரைந்து வந்த தலைவன் விரைந்து கொண்டு வந்த தேர்ப்பாகனைப் பாராட்டிப் பாகனைத் தழுவி வீட்டில் அழைத்துக் கொண்டு போயினான் என்பதையும் அவன் வரவால் தலைவி மகிழ்ந்தாள் எனபதையும் கண்ட உழையர் தமக்குள் மகிழ்ந்து உரைக்கின்றனர்.[616]

சான்றோர் வாயிலாக கூறுவதனை மருதத் திணையிலுள்ள *2* கலித்தொகை பாடல்களில் மட்டும் காணமுடிகின்றது.[617]

தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்திருக்கின்றான். அதனால் தலைவி புலவி கொண்டு ஆற்றாதவள் ஆயினாள். அது போழ்து அவளுக்கு உண்டான காமநோயைச் சான்றோர் அவனுக்கு எடுத்துக் கூறுகின்றனர். அதன் மூலம் அவன் தலைவிக்கு அருள வேண்டும் என்று உணர்த்துகின்றனர்.

தலைவனான குறளனும் தலைவியாகிய கூனியும் தாங்களே வாயில்களாக இருந்து தாங்கள் கொண்ட காதலை வெளிப்படுத்துவது கலித்தொகையில், ஒரு பாடல் மட்டுமே காணப்படுகிறது.[618]

கலித்தொகைப் பாடல் ஒன்றில், ' காளை ஒருவன் முரட்டுக் காளையைத் தழுவி அடக்கினான்; அதனால் அவன் மணப்பதற்குரிய மங்கையையும் அவனது அரிய செயலையும் யாரும் பாராட்டுகின்றனர்[619] எனச் சுற்றத்தார் கூற்றாக' கூறப்படுகிறது. இதன் வழித் தலைவன் தலைவியின் திருமணம் அறிவிக்கப்படுவதுடன் ஏற்றுக் கொள்ளப் பட்டமையும் அறிய முடிகிறது.

ஆய்ச்சியர் மகிழ்வை' கூறும் கலித்தொகையின் ஒரு பாடல் ஆயர் தம் எருமை முதலிய இனங்களைத் தகுந்தவாறு இருப்பிடங்களுக்குச் செலுத்தினர்; அவர் செயல் கண்டு மகிழ்ந்த ஆய்ச்சியர் அவர்களுடன் கை' கோத்து' குரவை' கூத்தாடி மகிழ்ந்தனர்.[620]

## அடிக்குறிப்புகள்

1. தொ.பொ.செய்நூ.*181,182,183,* நம்பி.அக.அக.ஒழிநூ.*213,214,215.*
2. அகம்,*26;* கலி.*86.*
3. தொ.பொ.கற். நூ.*52.*
4. தொ.பொ.கற். நூ.*10.*
5. நம்.அக. நூ.*68.*
6. தொ.பொ.செநூ.*181*,நம்.அக.ஒழி,நூ.*213.*
7. தலைவன் கூற்று, குறுந்.*280*,தலைவி கூற்று-அகம்.*58.*
   பார்ப்பன் கூற்று-கலி.*9,* பாங்கன் கூற்று-குறுந்-*204.*
   தோழி கூற்று-குறுந்.*26,* செவிலி கூற்று.-குறுந்.*84,* அகம்.*48.*
8. தொ.பொ.செய்.*182*
9. நம்.அக.ஒழிநூ.*214*
10. தலைவன் கூற்று குறுந்.*19,40,56,99,101,196.*
    அகம்.*9,29,34,44,86,121,123,374,384*.கலி.*5,15,31,39,73,81,89,92,95*
    நற்.*40,42,103,113,370,374*,ஐங்.*329,360.*
    தலைவிகூற்று ஐங்.*6,27,55,56,57,59,104,148,294,309,362,324,472,*
    அகம்.*36,284,314,316,346,385*.நற்.*35,212,310,395*,கலி.*5,26,87* பரத்தை
    கூற்று.அகம்*76,96,166,276,336,396*.குறுந்.*8,80*,கலி.*82,84,90*.நற்.*100,270,*
    *315,390.* செவிலி கூற்று.குறுந்.*242*,ஐங்.*401,404*,நற்.*110*,அறிவர் கூற்று-
    குறள்.*51,55,56*.நாலடி.*363*.கூத்தர்கூற்று-குறள்.*914.* பாணர் கூற்று.
    அகம்.*14*,பார்ப்பார் கூற்று. கலி.*66.*
11. தொ.பொ.செய்நூ.*19*
12. தொ.பொ.செய்நூ.*19.*
13. குறுந் *196,262*,அகம்.*12,15* கலி.*39:20-25*
14. குறுந்.*95.*
15. குறுந்.*129.*
16. குறுந்.*280.*
17. நற்.*201.*
18. ஐங்குறு.*172.*
19. அகம்.*390.*
20. ஐங்குறு*191,255.*
21. நற்.*95.*
22. தொ.பொ.கள.*11:9*(இளம்பூர.).
23. தொ.பொ.கள.*41.*(இளாம்.).

24. தொ.பொ.கற் 42.(இளம்.).

25. தொ.பொ.களநூ.102.(நச்சி). உரை மேற்கோள் ப'கம் 25-26

26. ஐங்குறு.173.

27. இறைய.அகநூ.5.

28. அகம்.113,338,352,கலி.11.

29. நம்.அகநூ,16,(இளம்.).

30. தொ.பொ.புறநூ.16.(இளம்).

31. தொ.பொ.புறநூ16.(இளம்.)உரை ப.114.

32. தொ.பொ.கற்நூ.13.(இளம்உரை).

33. தொ.பொ.கற்நூ.13.(இளம்).

34. தொ.பொ.கற்நூ.52.(இளம்.).

35. தொ.பொ.செய்நூ.189.(இளம்.).

36. குறு.277.

37. நற்.121

38. நம்.அக.96

39. தொ.பொ.கற்நூ.9.

40. நற்.170.

41. தொ.பொ.கற்.29

42. தொ.பொ.கற்நூ.30

43. நம்.அக.98.

44. அகம்.324

45. தொ.பொ.களநூ.102. (நச்சி)உரைமேற்கோள் பக்.25-26.

46. கலி.37

47. நற்25,128,குறுந்.176ல்;குறிஞ்.கலி.1.

48. அகம்.356

49. தொ.பொ.களநூ.24:5-6

50. அகம்.113

51. குறுந்.135.

52. அகம்.112.

53. டாக்டர் இராமகிருஷ்ணன்.ஆ.அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வுபக்108

54. குறுந்.290.

55. குறுந்.60.

56. நெய்தற் கலி.13.

57. குறுந்.3.

58. அகம்.352.
59. ஐங்குறு.287.
60. ஐங்குறு.287.
61. கலித்.86.
62. அகம்.206.396.
63. ஐங்குறு,.90.குறுந்.8.
64. நற்.40.
65. தொபொ.களநூ.25.
66. அகம்.248.
67. ஐங்குறு.377.
68. அகம்.35:1
69. நற்.214.
70. ஐங்குறு.372.
71. அகம்.315.
72. அகம்.117.
73. அகம்.105.
74. அகம்.153.
75. நற்.179.
76. ஐங்குறு.371.
77. ஐங்குறு108.
78. ஐங்குறு.387.
79. குறுந்.7.
80. ஐங்குறு.386
81. ஐங்குறு.382.
82. கழகத் தமிழ் அகராதி, ப'.474
83. கழகத் தமிழ் அகராதி, ப'.4743
84. Tamil lexicon vo III PP.1782-1783, pa1788
85. ஆ.இராமகிருட்டிணன். 'அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு,'ப'.107
86. வ.சுப.மணி'கம், 'தமிழ்' காதல்,' ம'461
87. ஈ.கோ.பாஸ்கரதாஸ், எட்டுத்தொகையில் தலைவி, ப'.11
88. பின்னிணைப்பு-தலை கூற்றுகள் அட்டவணை காண்க.
89. நற்.128
90. அகம்.37,101,119,264,293,305,329,352,388.
91. கலி.62,64,110,112,113,116.

92. பின்னிணைப்பு-தலைவி தோழிகூற்றுகள்.அட்டவணையில் காண்க.

93. தொல்-பொருள்-களவு.*93*

94. குறு.*121,150*

95. குறு.*340*

96. குறு.*340*

97. குறு.*150*

98. குறு.*121.*

99. குறு.*57.*

100. சரளா இராசகோபாலன், 'சங்க இலககியத்தில் தோழி.' ப'*93*

101. ச.மெய்யப்பன்,' 'சங்க இலக்கியத்தில்' பெண்கள்,' பக்.*5.*

102. கு.வெபாலசுப்பிரமணியன்,'சங்க இலக்கியத்தில் புறப்பொருள்'பக்.*207.*

103. குறு.*57.*

104. நற்.*17,51,136,144,236,275,388*,குறு.*125,158,219,239,261,296,299,318*,ஐங். *111-117,119,204,221,272*,அகம்,*8,72,102,138,260,290,292,328,-348,378,388.*

105. நற்.*17,51,136,144,236*,குறு.*141,158,161,239,261,360*,ஐங்.*204,215,221,224,272, 278*.அகம்.*8,72,102,122,228,138,252,292,328,348,378,388.*

106. நற்.*31,94,275,388*,குறு.*125,219,246,269,296,299,311,318,320,326*,ஐங்.*111, 117,119,120.* அகம்.*260,290.*

107. நற்.*275*,குறு.*125,318*,ஐங்.*111,117,119,120.*

108. குறு.*246,* ஐங்.*204,215,221,224,* அகம்

109. நற்.*31*,குறு.*161*,அகம்.*290.*

110. அகம்.*102,348.*

111. நற்.*17,51,94,136,144,236,388*,குறு.*141,158,219,239,261,269,296,299,311, 320,360.* அகம்.*8,72,222,138,252,260,328,388.*

112. குறு.*326.*

113. நற்.*17*

114. ஐங்.*114.*

115. குறு.*141.*

116. குறு.*161.*

117. ஐங்.*272*

118. அகம்.*252.*

119. அகம்*72:18-22*

120. அகம்.*102*

121.. அகம்.378.

122. நற்.94.

123. நற்.136

124. நற்.236

125. குறு.269.

126. குறு.296.

127. குறு.318.

128. நற்.388.

129. குறு.219.

130. குறு.246,311.

131. குறு.326

132. ஐங்.111.

133. ஐங்.112.

134. ஐங்.113.

135. ஐங்.117.

136. ஐங்.119.

137. ஐங்.204.

138. ஐங்.221.

139. ஐங்.278.

140. அகம்.292; குறு.360.

141. நற்.14,குறு,3,96,187,313,322,கலி.42.அகம்.22,332.

142. குறு.3,96,187,322, கலி.42,அகம்.22,332.

143. குறு.313,நற்.14.

144. குறு.187,கலி.42,அகம்.332.

145. நற்.14,குறு. 3,96,322. அகம்.22.

146. குறு.313.

147. நற்.128,244,குறு.31,ஐங்.201,கலி.54,111, அகம்.52,82.

148. நற்.128.

149. குறு.31.

150. ஐங்.201.

151. அகம்.82.

152. அகம்.58,298.

153. அகம்.58.

154. அகம்.298.

155. ஐங்.385.

156. ஐங்.385.

157. ஐங்.397.

158. ஐங்.397.

159. ஐங்.384.

160. ஐங்.384.

161. நற்.187.

162. நற்.17,73,79,177,224,296 ,குறு.20,76,174,207,398,அகம்.147,157,187, 217,293,305,355.

163. நற்.17, குறு76.

164. நற்.73,117,224,292.குறு.20,174,207,398,அகம்.147,157,187,217,305,355.

165. நற்.17,73,79,296,குறு.20,76,174,207,அகம்.147,157,187,217,293,305,355.

166. நற்.224. குறு.398.

167. நற்.177.

168. நற்.1.

169. நற்.79.

170. நற்.224.

171. நற்.296.

172. குறு.20, 174.

173. குறு.398.

174. அகம்.147.

175. அகம்.157.

176. அகம்.187.

177. அகம்.355.

178. கலி.6,20,23.

179. கலி.6:8-10.

180. கலி. 23,

181. கலி.20.

182. கலி.80,82,85.

183. ஐங்.80.

184. ஐங்.82.

185. ஐங்.85.

186. ஐங்.473,476.

187. ஐங்.473.

188. ஐங்.476.
189. ஐங்.82.
190. குறு.75
191. நற்.74, ஐங்.41,131-138,140,அகம்.146.
192. நற்.74.
193. அகம்.146.
194. ஐங்.41.
195. ஐங்.131.
196. ஐங்.131.
197. ஐங்.133.
198. ஐங்.134.
199. ஐங்.136.
200. ஐங்.137.
201. ஐங்.138.
202. குறு.50, ஐங்.13,18,95,184,265.
203. குறு.50.
204. ஐங்.13.
205. ஐங்.18.
206. ஐங்.95.
207. ஐங்.184.
208. ஐங்.265.
209. நற். 153,314, குறு.68.
210. நற்.314.
211. குறு.68.
212. தொல்.பொருள். செய்.192.
213. நம்பி.223.
214. நற்.54,70,102,193,196,277,343,335,குறு.87,92,107,122,163,327, ஐங்.183,312, அகம். 170,398.
215. நற்.102,குறு.87,327,அகம்.398
216. நற்.70, குறு.107.
217. நற்.54,196,335, குறு.92,122,165, ஐங்.183, அகம்.170.
218. நற்.193277,343, ஐங்.183.
219. குறு.163,327, ஐங்.183.
220. நற்.54,102,196,227,343, குறு.87,92,107,122.

221. ஐங்.312,அகம்.170,398.
222. நற்.193.
223. குறு.327.
224. குறு.87.
225. அகம்.398.
226. தொல்.பொருள்.களவு.123
227. அகம். 58,298
228. Tamil Lexion vol. IV pa.2115
229. நற்.25,32,220,245,359, குறு. 74,176,298,346, ஐங்.206,207,211, கலி.60,61,63, அகம்.32,180,250,268,330,356,380,392.
230. நற்.25,32,220,359, குறு.74,176,298,346, ஐங்.206,207,211, கலி.60,61,63,அகம்.32,180,250,268,330,356,380,392.
231. அகம்.356.
232. நற்.245, குறு.212,230, அகம்.180,250,330,380.
233. நற்.32,359,ஐங்.206,207,211, கலி.60,61,63
234. குறு.298, அகம்.356.
235. நற்.25,32,220,245,குறு.74,176,212,230,346, அகம்.32,180,250,268,330,380,392.
236. நற்.25.
237. நற்.32:3-7
238. நற்.245:6-12
239. நற்.359.
240. குறு.74.
241. குறு.176.
242. குறு.212.
243. குறு.230.
244. குறு.298.
245. குறு.346.
246. அகம்.330.
247. அகம்.356.
248. அகம்.392.
249. கலி.61:16-17.
250. நற்.4,63,135,138,285,குறு.109.
251. நற்.285.

252. நற்.4,63,135,138, குறு.109.

253. நற்.4,138.

254. நற்.63,135,285, குறு.109.

255. நற்.4.

256. நற்.138.

257. குறு.109.

258. நற்.63.

259. குறு.294,அகம்.20,302,358,368,370.

260. அகம்.302,358,368, குறு.294. அகம்.20,370.

261. அகம்.358,368.

262. குறு.294, அகம்.20,302,370.

263. குறு.294.

264. அகம்.20.

265. அகம்.302.

266. அகம்.358.

267. நற்.36,145,151,154,261, குறு.138,292,372,375, அகம். 68,88,188,248,278, 282, 362, 382, கலி.65

268. நற்.36,151,154,261, குறு.138,292,372,375, அகம்.68,88,188,248,278,282,362,382,கலி.65

269. நற். 145, குறு.372.

270. அகம். 248, 278, 382, கலி.65.

271. நற்.36,145,151,154,261, குறு.138,292,372, அகம்.68,88,188,248,278,282,362,

272. குறு.375.

273. நற்.145.

274. நற்.154.

275. கலி.65.

276. புலவர் குழந்தை, 'தொல்காப்பிய காலத் தமிழர்' பக்.130

277. குறு.292.

278. அகம்.248:14-16

279. அகம்.282:10-19

280. அகம்.382

281. நற்.11,27,68,119,178,191,194,267,306,313,குறு.159

282. நற்.68,119,194,306,313, குறு.159.

**283.** நற்.11,27,178,191,267

**284.** நற்.11,191

**285.** நற்.27,68,119,194,267,306,313 குறு.159

**286.** நற்.178

**287.** நற்.27

**288.** நற்.68

**289.** நற்.191

**290.** நற்.306,313

**291.** ஐங்.269

**292.** நற்.53,233,குறு.332,ஐங்216,246

**293.** நற்.53.

**294.** குறு.332

**295.** நற்.61,85,222

**296.** நற்.64

**297.** நற்.365

**298.** நற்.72,88,96,122,123,147,175,203,206,228,231,239,263,297,299,339,344,372,378,399, குறு.55,227,268,357,அகம்.28,98,108,210,228,312,ஐங்.268

**299.** நற்.88,122,147,206,228,297,339,344,399, குறு.55,227, அகம்.210

**300.** நற்.72,96,123,175,203,231,239,263,299,372,378,குறு.55,227, அகம்.210

**301.** நற்.203,372,அகம்.210

**302.** நற்.299,378,குறு.357 ஐங்.268.

**303.** நற்.72,88,96,122,123,147,206,228,231,239,263,297,339,344, 399,குறு.55,227,268 அகம்.28,98,108,228,312

**304.** நற்.175

**305.** நற்.72

**306.** நற்.88

**307.** நற்.122

**308.** நற்.147

**309.** நற்.206

**310.** நற்.297

**311.** நற்.339

312. அகம்.28.
313. நற்.47,173,268,282,288,322,குறு.111,248,263அகம்.232,242,272, ஐங்244,247
314. நற்.மேற்படி, குறு.111, 263,அகம். மேற்படி, ஐங்.மேற்படி
315. குறு.248
316. குறு.248,ஐங்.244,247
317. நற்.47,268,282,288,322, குறு.111,263,அகம்.232,242,272
318. நற்.173
319. நற்.173:5-9
320. நற்.288
321. குறு.111
322. குறு.248
323. அகம்.272
324. ஐங்.244
325. புலவர் வேதா, 'வாராய் தோழி' ப'.132
326. நற்.13,குறு.259,321,333,374,379,ஐங்.228,241,242,249, கலி.37.
327. நற்.13,ஐங்.228,241,242,249 கலி.37
328. குறு.259,333,374
329. குறு.321,379
330. குறு.321:7-8
331. குறு.374
332. குறு.379.
333. ஐங்.228
334. ஐங்.241
335. குறு.259:5-8
336. குறு.333
337. ஐங்.242
338. கா.கோவிந்தன் 'நற்றிணை' ப'.221
339. நற்.149,குறு.217,262,343,369,383 ஐங்.200,235,254,அகம்.65,221,285
340. குறு.217,ஐங்.235,254
341. நற்.149,ஐங்.200
342. குறு.262,343,369,383,அகம்.65,221,285
343. ஐங்.235,254

344. நற்.149,குறு.217,262,343,369,383,ஐங்.200, அகம்.65,221,285

345. அகம்.65

346. நற்.149:18-10

347. குறு.343

348. குறு.369

349. குறு.383

350. ஐங்.200

351. ஐங்.235

352. ஐங்.254

353. ந.சுப்பு ரெட்டியார்,'அகப் பொருளில் தோழி' ப'.62

354. நற்.7,111,125,284,308,328,367,373,ஐங்.219,225,226,கலி.131

355. நற்.125,134,328,குறு.90,143,247,265,284,308,373,ஐங்.219,225,226

356. குறு.367

357. நற்.111,132,குறு.117,166,கலி.131

358. நற்.7,197

359. ஐங்.219,225,226

360. நற்.7,197,328,குறு.90,117,143,166,247,265,284,308,328,373, கலி.131

361. நற்.111,125,134

362. குறு.247

363. குறு.373

364. ஐங்.219

365. ஐங்.225

366. ஐங்.226

367. நற்.22,78,91,163,235,278,393,குறு.34,51,52,146,297,351,389,கலி.38, 39,40,41,45,107,115,ஐங்.147,189,202,218,300,அகம்.42,70,160,178

368. நற்.22,393,குறு.52,146,297,389,கலி.38-41,45,ஐங்.202,218,300, அகம்.42,178.

369. கலி.107,115.

370. குறு.34

371. நற்.78,91,163,235,குறு.51,351,ஐங்.147,189,அகம்.70,160

372. ஐங்.202,218,300 கலி.38-41,45,அகம்.42

373. குறு.351; ஐங்.147,189

374. கலி.107,115

375. நற்.78,91,278,393,குறு.34,51,52,146,297,389,அகம்.70,160,178

376. நற்.22,163,235

377. குறு.51

378. குறு.351

379. ஐங்.300

380. குறு.52

381. குறு.146

382. குறு.389

383. ஐங்.147

384. கலி.39:20-25

385. கலி.40

386. கலி.41:40-44

387. கலி.107:30-34

388. கலி.115:17-18

389. குறு.1,ஐங்.177,187,196

390. ஐங்.177

391. குறு.1

392. ஐங்.187

393. ஐங்.196

394. அகம்.200,310

395. அகம்.200

396. அகம்.310

397. ச.வே.சுப்பிரமணியன், 'குறுந்தொகையில் உள்ளுறை,'ஒன்று நன்று பக்-95

398. நற்.45,379,ஐங்.91

399. நற்.45:1-5

400. நற்.379

401. ஐங்.91

402. நற்.323,331, குறு.113, அகம்.38

403. குறு.113

404. அகம்.38:15-18

405. நற்.323

406. நற்.331

407. நற்.19,67,215,276,363,398,குறு.81,ஐங்.179,186,194,282, கலி.50,132,அகம்.2,10,90,92,150,202,220,270,300,350

408. குறு.81,ஐங்.282,கலி.50,அகம்.2,92,202

409. நற்.19,67,215,276,363,398 ஐங்.179,186,194,கலி,132,அகம்.10,90,150,220,270,300,350.

410. நற்.19

411. நற்.67,215

412. நற்.276

413. நற்.363

414. ஐங்.282

415. அகம்.202

416. அகம்.92

417. அகம்.10

418. அகம்.220

419. நற்.172,283,குறு.114,355,ஐங்.260 அகம்.30,120,132,156,172,218,288, 320 340,394

420. நற்.232,குறு.179,198,345,கலி.49,அகம்.12,18,80,148,182,240,308,360

421. நற்.156,168,188,292,குறு.42,69,335,336,ஐங்.60,279,296,362,அகம் .118,,168,192,318,கலி.52

422. செ.வெங்கட்ராமர் செந்தமிழ்செல்வி, சிலம்பு 5, பரல்9, பக்.438

423. நற்.98,108,195,227,247,375,குறு.18,53,244,ஐங்.180,193,234,238,251, 264,275,276,277,கலி.44,48,135,149, அகம்.112,238,

424. நற்.98,108,195,247,குறு.18,244,ஐங்.234,238,251,264,275,276,277,கலி.48, அகம்.112,238

425. குறு.53

426. நற்.227,375,ஐங்.180,193,கலி.135,149

427. ஔவை. சு.துரைசாமிப்பிள்ளை, ஐங்குறுன்நூறு முன்னுரை பக்.149

428. நற்.23,159,ஐங்.231,232, கலி.46,53,அகம்.78

429. நற்.23,ஐங்.231,232, கலி.46,53,அகம்.78

430. நற்.159,கலி.124-127, 129,136

431. நற்.257,336,353,383

432. மேற்படி

433. நற்.57,253,258,295,354,368,குறு.303,324,342,கலி.133, அகம்.60

434. நற்.15,55,93,254,317,328,355,395,396,ஐங்.236,266,273,285,287,289, கலி.121,அகம்.100

**435.** இரா.தண்டாயுதம், 'சங்க இலக்கியம்'. பக்.*106*

**436.** நற்.*12*

**437.** அகம்.*107*

**438.** அகம்.*283*

**439.** நற்.*10,* குறு.*115,988,*ஐங்.*364*

**440.** நற்.*10*

**441.** குறு.*115*

**442.** ஐங்.*364*

**443.** குறு.*388*

**444.** த.சாம்பசிவன். 'தமிழ் இலக்கியத்தில் நெய்தல் திணை' பக்.*108*

**445.** நற்.*37,183,345,*குறு.*124,225,236,365,397,*ஐங்.*233,239,257,297,*அகம்.*286,*

**446.** குறு.*325,365,*ஐங்.*233,239,257,297*

**447.** அகம்.*286*

**448.** நற்.*183,345,*குறு.*236,397*

**449.** நற்.*37,*குறு.*124*

**450.** குறு.*225,*ஐங்.*223,239,257,297*

**451.** நற்.*37,345,*குறு.*124,236,365,397,*அகம்.*286,*நற்.*183*

**452.** நற்.*37*

**453.** குறு.*124*

**454.** குறு.*236*

**455.** குறு.*397:4-8*

**456.** ஐங்.*297*

**457.** அகம்.*286*

**458.** குறு.*225*

**459.** ஐங்.*93,*அகம்.*158*

**460.** ஐங்.*93*

**461.** அகம்.*158*

**462.** கலி.*39:20-25*

**463.** குறிபா*30-31*

**464.** குறிபா.*19-22*

**465.** குறிபா.*1,34*

**466.** குறிபா.*27-29*

**467.** தொல்.பொருள்.பொருளியல்*204*

**468.** தொல்.பொருள்களவு. ப-ள் *231-234*

469. நற்.207,351,குறு.214,366,ஐங்.28,29,30,107,110,168,190,205,210,212,220,243,248,271,366,367,அகம்.48,110,190

470. நற்.351,குறு.366,ஐங்.366

471. குறு.214,ஐங்.28,210,243,248

472. ஐங்.29,30,212,271

473. நற்.207,ஐங்.110,168,205,220,367

474. ஐங்.107,190,அகம்.48,110,190

475. ஐங்.182

476. ஐங்.258

477. கா.பொ.இரத்தினம், 'அகநானூற்றுச் சொற்பொழிவுகள்' பக்.54

478. குறு.23,26

479. குறு.23

480. குறு.26

481. குறு.34

482. குறு.362

483. ஐங்.250

484. நற்.342 கலி.47

485. மேற்படி

486. நற்.211,குறு.89, கலி.43

487. நற்.376

488. ஐங்.284

489. ஐங்.290

490. குறு.251,392

491. நற்.83,குறு.47

492. அகம்.188

493. நற்.58

494. ஐங்.398

495. நற்.294, அகம்.400

496. கலி.2,13,16,17

497. நற்.129,148,171,208,252,குறு.22,135,273,331,348, அகம்.27,137

498. நற்.18,28,92,189,237,246,274,286,316,329,33,387,குறு.16,37,59,130,180,211,213,215,232,253,260,282,287,317,338,350,358,ஐங்.315,316,431440,461,அகம்.61,69,71,85,91,111,127,129,159,171,173,177,197,201,211,213,223,227,231,233,237,251,269,295,311,313,357,359,393,399

**499.** நற்.*99,112*,குறு.*66,251,275,380,382*,ஐங்.*462-464, 465-470*,கலி.*26,27*,அகம்.*4,25,59,73*

**500.** நற்.*86,89,164,212,367*,குறு.*177*,ஐங்.*351-354,357,358,496-499*,அகம்.*125,317*,கலி.*29,31-36*

**501.** அகம்.*316*

**502.** ஐங்.*250*

**503.** நற்.*35,131*,ஐங்.*294*

**504.** நற்.*26,33,43,46,48,71,124,318,325,337*,குறு.*363*, ஐங்.*301-310,368,423,424*,கலி.*3,4,5,7,8,12,14,15,18,19,21,22,25*,அகம்.*13,81,143,161,179,215,271,307,319,387*

**505.** நற்.*229,266*

**506.** ஐங்.*500*,அகம்.*104,184,314*

**507.** நற்.*30,230,269,330,360*,குறு.*127,139,196,238,258,295,354,384*, ஐங்.*51,54,75,76,84,158,159*,அகம்.*46,96,116,176,226,246,256,296,306,326,346,366,386*

**508.** நற்.*30,230,330,360*,குறு. மேற்பதி, ஐங்.*51,54,756,76,84*,அகம். மேற்படி

**509.** ஐங்.*158,159*

**510.** நற்.*269*

**511.** நற்.*210,270*,ஐங்.*100,143*,குறு.*9,10,309*,கலி.*70*

**512.** ஐங்.*1-10,44-46,50,52,55,56,57,58,59,98,240*

**513.** ஐங்.*1-10,44-46,50,52,55-59,98*

**514.** ஐங்.*240*

**515.** ஐங்.*104,208*

**516.** ஐங்.*208*

**517.** ஐங்.*104*

**518.** நற்.*127,167,291,380*,குறு.*85,359*,ஐங்.*471,472*,அகம்.*50*

**519.** நற்.*170,310*

**520.** நற்.*170*

**521.** நற்.*310*

**522.** குறு.*61*,ஐங்.*16,153,156*

**523.** குறு.*61*

**524.** ஐங்.*16*

**525.** ஐங்.*153*

**526.** ஐங்.*156*

527. குறு.45
528. குறு.277
529. நற்.200
530. நற்.180
531. நற்.361
532. நற்.40
533. அகம்.145:22, குறு.15:8
534. தொல்.பொருள். களவு.122
535. நற்.29,66,143,179,184,271,279,293,305,ஐங்.313,371,379,391,394, அகம்.15,35,105,195,275,315,383
536. மேற்படி
537. நற்.29,279ஐங்.371-379,அகம்.15,35,105,195,275,383
538. நற்.66,143,179,184,271,293
539. நற்.305
540. அகம்.55
541. ஐங்.313
542. தொல்.பொருள்.அகம்.39
543. தொல்.பொருள்.அகம்.39,இளம்.உரை.பக்.37
544. நற்.110,198,குறு.15,44,84,144,167,242,356,378,396.ஐங்.380,389,400, 410,கலி9,அகம்.7,17,49,63,89,117,145,153,189,203,207,219,263,321, 369,385,397.
545. நற்.167,242,ஐங்.401-410
546. (102-ல் உள்ள அடிகுறிப்புகள்)
547. குறு.84,144,356,378,396,அகம்.7,17,89,117,145,153,189,203,207, 219,263,321,369,385,397
548. அகம்.63
549. அகம்.49
550. நற்.198,குறு.44,ஐங்.389, கலி.9
551. குறு.15
552. ஐங்.38
553. ஐங்.400
554. நற்,110
555. குறு.167,242,ஐங்.401-410

556. நற்.100,150,176,216,225,290,310,315,320,390,400, குறு.80,370, ஐங்.38,3977,78,79,81,86,88,121-128,அகம்.76,106,166,216,276

557. நற்.176,225

558. நற்.100,150,216,290,310,320,390,400,குறு.80,370,ஐங்.38,39,77, 78,79,81,86,88,அகம்.76,106,166,216,276

559. நற்.315,ஐங்.121-128

560. நற்.315

561. நற்.400

562. ஐங்.81

563. ஐங்.77

564. ஐங்.78

565. ஐங்.86

566. ஐங்.121-128

567. நற்.225

568. குறு.80

569. ஐங்.370

570. ஐங்.88

571. அகம்.76

572. அகம்.106

573. அகம்.276

574. அகம்.216

575. நற்.320

576. அகம்.166

577. ஐங்.38

578. ஐங்.39

579. ஐங்.79

580. நற்.390

581. நற்.100

582. நற்.172

583. நற்.290

584. நற்.150

585. நற்.290

586. குறு.78,204

587. ஐங்.173

**588.** குறு.*78*

**589.** குறு.*204*

**590.** ஐங்.*173*

**591.** ஐங்.*480*,கலி.*30* அகம்.*14*,பரி.*10,20*

**592.** தொல்.பொருள்.கற்பு.*167*

**593.** ஐங்.*480*

**594.** கலி.*30*

**595.** பரி.*10,20*

**596.** நற்,*2, 324,394,* குறு.*7,229,230*,ஐங்.*381-383,386,387,388,390,393,421*,கலி.*120,141-148*,அகம்.*165*

**597.** கலி.*141*

**598.** நற்,*2, 324,394,* குறு.*7,229,230*,ஐங்.*381-383*

**599.** நற்,*2, 324,394,* குறு.*7,229,230*,ஐங்.*381-383*

**600.** நற்.*2*

**601.** குறு.*7*

**602.** நற்.*324*

**603.** குறு.*229*

**604.** குறு.*390*

**605.** ஐங்.*381*

**606.** ஐங்.*382*

**607.** ஐங்.*383*

**608.** ஐங்.*386*

**609.** ஐங்.*390*

**610.** ஐங்.*388*

**611.** ஐங்.*387*

**612.** ஐங்.*393*

**613.** அகம்.*324,354,384*

**614.** அகம்.*324*

**615.** அகம்.*354*

**616.** அகம்.*384*

**617.** கலி.*99,100*

**618.** கலி.*94*

**619.** கலி.*102*

**620.** கலி.*106*

# தமிழரின் நம்பிக்கையும் சடங்குகளும்

3.1. தொல்காப்பியர் கண்ட உண்மை

3.2. கடவுள் நம்பிக்கை

3.3. தெய்வம் ஏறி ஆடல்

3.4. உலக அமைப்பு முறையில் நம்பிக்கை

3,5. வாழ்வில் நம்பிக்கை

3.6. வாழ்வில் சான்றோர் மறுப்பு

3.7. வாழ்க்கையில் நிலையானது புகழ்

3.8. வாழ்வில் இன்பமும் துன்பமும் இயற்கையின் வழிப்படியே,

என நம்புதல்

3.9. வாழ்வில் துறவு

3.10. வாழ்வில் செல்வத்தை நுகர்தல்

3.11. இயற்கையின் வலிமை

3.12. வாழ்வில் உயர்வு – தாழ்வு

3.13. தமிழர் வாழ்வில் உடலும் உயிரும்

3.14. வாழ்க்கையின் நன்மை தீமைகள்

3.15. தமிழர் சேர்வாரோடு சேர்ந்திருத்தல்

3.16. வல்லாண்மைக் கோட்பாடு

3.17. தமிழரின் பொது நல வாழ்வு

3.18. தமிழர் வாழ்வில் உண்மை நிலை

3.19. பருவமழை தவறாது பெய்வதாக நம்பிக்கை

3.61. தீர்த்தமாடுதல்

3.62. பூக்கட்டிப் பார்த்தல்

3.63. நோன்பிருத்தல்

3.64. தெய்வ பிரசாதங்களை அணிதல்

3.65. குாந்தை பிறப்பு சடங்குகள் – பெயர் சூட்டல்

3.66. காதுகுத்தல்

3.67. தொட்டில் இடுதர்

3.68. பெண்கள் சடங்குகள் – பூப்பு அடைதல்

3.69. சீமந்தம்

3.70. இறப்புச் சடங்குகள்

3.71. பால் சடங்கு

3.72. நீர் மாலை

3.73. கோடிக்கட்டல்

3.74. வாய்க்கரசி போடுதல்

3.75. பாடை கட்டுதல்

3.76. இசை முழக்கம்

3.77. ஊர்வலம்

3.78. சூறையிடுதல்

3.79. கொள்ளி வைத்தல்

3.80. குடமுடைத்தல்

3.81. மொட்டையிடல்

3.82. தாலியறுத்தல்

3.83. கல்லெடுத்தல்

3.84. காடேற்றுதல்

3.85. புதைத்தல்

3.86. கல்லறை

3.87. தானமிடல்

3.88. விருந்து

3.89. இழவு கேட்டல்

## இயல் – 3

# தமிழரின் நம்பிக்கையும் சடங்குகளும்

பொருள் தன்மைகளை ஆராய்ந்து உண்மையினை உணர்ந்த வல்லவரை உண்மைப் பொருளறிஞர் என்றனர். உலகப் பொருள்களின் உண்மைகள் எவையாயினும் அவை அழியக் கூடியவையே எனனும் நிலை மக்கள் மனத்திலே தோன்றிய பின் அழியாத உண்மைப்பாதையாதென உசாவி அது ஆண்மாவோடு தொடர்புடைய சமயமே எனக் கண்டனர். சமயப் பொருளின் உண்மைகளைக் கண்டுரைக்க வல்லாரைச் சமயக் கணக்கர்[1] என்றனர். உலகியல் பொருள்களைக் காணுந்தோறும் சமயத்தின் உண்மையினையே உணர்தல் வேண்டும் என்னும் உண்மைப்பொருள் தாகம் மக்களிடையே வளர்ந்தது. இதனால்தான் தமிழ் மறையாம் திருக்குறளிலும் வள்ளுவர் பெருந்தகையால் மெய்யுணர்தல் என்னும் ஓர் அரிய அதிகாரத்தையே வகுத்து, அதில் உண்மைப் பொருள் காண்பதே வாழ்வின் குறிக்கோள் என வலியுறுத்தியுள்ளார். வள்ளுவர் பெருந்தகை தமக்குப் பல ஆயிரம் ஆண்டுகட்கு முன் தமிழரிடையே நிலவி நின்ற மெய்ப் பொருளியலை மீண்டும் நயம்பட எடுத்துரைத்துள்ளார். இதனால் இத்தகைய உண்மைப் பொருள் காணும் தத்துவம் உலகிலேயே முதன் முதல் தமிழரிடையே தாம் தோன்றியது என்கிறோம்,

மெய்யறிவு பற்றிய உயர் சிந்தனைகளை உலகில் முதலில் மொழிந்தவர் தமிழரே எனக் கூறினோம். இதனைச் சிந்துவெளிச் சின்னங்கள் மெய்ப்பிக்கின்றன. உலகியல் சார்ந்த பொருளியல் கோட்பாடுகள் இந்திய மண்ணில் குறிப்பாக தழிழ் நிலத்தில்தான் அரும்பி மலர்ந்து, உலகெங்கும் மணம் பரப்பின; பரப்பியும் வருகின்றன.

எண்ணத்திற்கும் பொருளுக்குமுள்ள உறவை விளக்குவதே அந்த மெய்யறிவின் அடிப்படையாகும். உலகியல் சார்ந்த உண்மையறிவு கோட்பாட்டை வேறுவகையில் விளக்க முன்வந்தனர் தமிழர். அறிவியல் வளர்ச்சி இல்லாத அக்காலத்திலேயே மாந்தர் வாழும் இஞ்ஞாலத்தைப் பற்றியும், பிற உலகங்களைப் பற்றியும் ஆய்ந்து அறிந்த

அவர்கள், பிறர் கூறிய பிரபஞ்சம் ஒருமாயை முற்பிறவியில் செய்தவினை பிற்பிறவியிலும் தொடர்ந்து துன்பங்களைத் தரும் என்பன போன்ற கோட்பாடுகளைச் சாடினர். இதற்கு அவர்கள் கொண்ட எதிர்ப்புக் கருவி இயற்கையின் இயல்பு நவிற்சியேயாகும். இதனைப் "பொருளியம்" என்றும் கூறலாம். இப் பொருளியமே தமிழரின் உண்மைப் பொருளியல் ஆகும்.

உலக வாழ்வில் செம்மையான பண்புகளைக் கடைப்பிடித்தால் உயிர் தானே அவ்விறைவனை அடையுமென்ற உண்மைப் பொருள் தத்துவத்தைக் கண்டவர் தமிழரே. சங்ககாலத் தமிழரின் சமயக் கோட்பாடுகளையும், அவர்கள் வழிபட்ட கடவுளரையும், வழிபாட்டு முறைகளையும் மட்டும் கூறி அமையாமல், அவர்கள் உலக வாழ்வில் கடைப்பிடித்த மெய்யுணர்வு நெறிமுறைகளையும் கூறினோம்.

### 3.1 தொல்காப்பியர் கண்ட உண்மை

சங்க இலக்கியங்களில் மிகவும் தொன்மையான தொல்காப்பியத்தில் கடவுட் கொள்கையும், வினைப்பயன் கோட்பாடும் தெற்றென விளக்கப் பெற்றுள்ளன. பழந்தமிழர் இத்தகைய கடவுள் கொள்கையினையும் நிலையாமைக் கோட்பாட்டையும், இவற்றின் பல்வேறு திறங்களையும் ஒட்டு மொத்தமாகக் "காஞ்சி" என்றே குறித்தனர். தொல்காப்பியர் கூறும் பொருள் மொழிக் காஞ்சி, வாயுறை வாழ்த்து செவியறிவுறூவ முதலிய துறைகள் பழந்தமிழரின் மெய்ப்பொருள் உணர்விற்கும், ஒழுக்க நெறிக்கும் சான்று கூறுகின்றன. இவற்றை அடிப்படையாகக் கொண்டே மற்றப் புறப்பாடல்களும் அமைந்துள்ளன. செய்வினைக்கேற்ப உயிர்கள் கூடுவிட்டுக் கூடுபாயும் என்பதனைக் கல்லாடனார், "பறவைகள் கூடுவிட்டுக் கூடு சென்று வசிப்பது போல" எனும் எடுத்துக்காட்டால் விளக்குவது[2], தொல்காப்பியரின் இலக்கணத்திற்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டான இலக்கியமாகும்.

இத்தகைய கடவுட் கோட்பாட்டைக் கொண்டு தமிழர் தாம் வேதங்களுக்கும் இதிகாசங்களுக்கும் உயிர் மூச்சான பல அரிய தத்துவங்களைத் தந்தனர் எனலாம்.

வேதப் பண்புகளைப் பிரதி பலிப்பவையே இதிகாசங்கள். இவற்றை ஒட்டு மொத்தமாக இந்து நாகரிகம் என்கிறோம். இதில் உருவ வழிபாடு முழுச் சிறப்பாகக் காணப்படுகிறது. இத்தகைய பண்புகளையும், நாகரிகத்தையும், உருவ வழிப்பாட்டையும் ஆரியருக்கு அளித்தவர் திராவிடரே (தமிழரே) என்பதும், இவற்றில் காணப்பெறும் கிருட்டினன், திருமால், சிவன், காளி வழிபாடுகள் தொடக்க நிலையில் திராவிடருக்கே (தமிழருக்கே) உரியவையென்றும் தத்துவமேதை டாக்டர் இராதாகிருஷ்ணன் கூறுவது ஏற்புடையதேயாகும்[3].

### 3.2 கடவுள் நம்பிக்கை

அவரவர் செய்த வினையை அவரவரே நுகரும் படி செய்வது இறைவனது செயலாகும். இதனைப் "பாலது ஆணை" எனறு தொல்காப்பியர் அழைக்கிறார்[4].

அரசனாகிய இறைவன் நல்லதன் நலனும் தீயதன் தீமையும் செய்தவருக்கே கிட்டச் செய்யப் பல அலுவலர்களைத் தனக்குத் துணையாகக் கொண்டிருப்பது போல, இறைவன் தன் பாலது ஆணையைச் செய்யப் பால்வரை தெய்வங்களைக் கொண்டுள்ளான் என்பது அவர் தரும் விளக்கமாகும்[5].

கடவுள் நல்லன தீயனவற்றைத் தான் விரும்பியோ வெறுத்தோ செய்பவன் அல்லன்; நல்லவைற்றிற்கு நன்மையும் தீயனவற்றிற்குத் தீமையும் விளையும்படி செய்துவிட்டுத் தான் செயலற்று இருப்பவன். இதனை "வினையின் நீங்கினான்"[6] என்றும் "பற்றற்றான்"[7] என்றும் குறிப்பிட்டுள்ளார். இறைவன் எல்லாம் அறிந்தவன் என்பதை "விளங்கிய அறிவின் முனைவன்"[8] என்றும், "வாலறிவன்"[9] என்றும் குறிப்பிட்டுள்ளார். இத்தகைய இறைவனுக்குப் பிறப்பு இல்லை என்றும் கருதினார்[10].

தெய்வங்களுக்கு உருவம் சமைத்து வழிபடும் வழக்கம் கிரேக்கர்கள் இந் நாட்டிற்கு வந்த பின்தான் வழக் காற்றில் வந்தது என வரலாற்று ஆசிரியர்கள் கூறுவர். ஆனால், கிரேக்கத் தொடர்பு இல்லாத காலத்திலேயே தெய்வங்களுக்குக் கோயில்கள் எடுத்தும்,

உருவங்களைச் சமைத்தும் தமிழர்கள் வழிபட்டதைச் சங்க இலக்கியங்களால் அறிகிறோம்.

இத்தகைய உருவ வழிபாடும் இயற்கை வழிபாட்டின் வழியேதான் தோன்றியது. முல்லை நில மக்கள் தம்மைச் சூழ்ந்த இயற்கை எழிலையும், அதன் பின்னே அடர்ந்து காணும் கருநிறப் பண்பையும், காட்டிடை மலர்ந்த காயாம் பூவினையும் கடவுளுக்கு ஏற்றித் திருமாலாக வழிபட்டனர். இதனைத் தொல்காப்பியர் "பூவைநிலை" என்பார்[11]. பூவை என்பது காயாம் பூவைக் குறித்தது. அதனை உருவகமாக்கித் திருமாலை இப்பாடல் உணர்த்துகிறது.

இதனைப் போலவே தொல்காப்பியம் கடவுளைக் கருப்பொருளாக வைத்து ஐவகை நிலங்களிலும் வணங்கப் பெற்றுத் தெய்வங்களை அவற்றின் நிறத்திற்கேற்ப மாயோன், சேயோன் என்றும், இடத்திற்கேற்ப வேந்தன், வருணன் என்றும் குறித்ததைக் காணலாம்[12]. இதனால் உருவ வழிபாடு தமிழரிடையே தொன்று தொட்டே இருந்தமை புலனாகிறது.

தெய்வத்திற்குத் தனி உருவம் அமைத்து அவ்வுருவத்தின் முன்னின்று வழிபடுதல் தமிழர் மரபு[13]. தெய்வத்தின் முன்னின்று சூளுரை செய்யும் வழக்கமும் தமிழரிடம் உண்டு[14]. சூளுரையிலிருந்து தவறினால் தீமை விளையும் என்றும் நம்பினர்[15].

ஒருவனும் ஒருத்தியும் ஒன்று சேர்ந்து நடத்தும் திருமண நிகழ்ச்சி தெய்வத்தால்தான் நிகழ்கிறது என்று தமிழர் கருதினர்[16].

தெய்வம் தமக்குச் செய்யும் நன்மைக்காகத் தெய்வத்திற்குக் கைம்மாறாக ஏதாவது செய்ய வேண்டும் என்று விரும்பினர். இதனைத் தெய்வம் ஏற்றுக் கொள்கிறதா என்று பார்ப்பது அவர்கள் நோக்கம் அன்று. தம் நன்றி உணர்வைச் செயலால் வெளிப்படுத்தத் துடித்த தமிழரது உணர்வே அது ஆகும்[17].

அரசன் பகைவனை வெல்லல், பகைவனின் வலிமையை அழித்தல், எல்லோருக்கும்

கொடை வழங்குதல் ஆகிய செயல்கள் எல்லாம் இறைவன் திருவருளால் தான் நிகழ்கின்றன என்று கருதினர்[18].

".காமப் பகுதி கடவுளும் வரையார் ஏனோர் பாங்கினும் என்மனார் புலவர்" கடவுளைக் கணவனாகவும் தன்னை மனைவியாகவும் எண்ணிப் போற்றுவது பழந்தமிழருடைய மரபாகும்[19].

மக்கள் அடையும் உறுதிப் பொருள்கள் மூன்றே வேட்கை முறையில் இன்பம், பொருள், அறம் என்றும் செய்கைமுறையில் அறம், பொருள், இன்பம் என்றும் அவை வரிசைப்படுத்திக் கூறப்படும். இவை மூன்றுமே வாழ்க்கையின் பகுதிகள்[20].

### 3.3 தெய்வம் ஏறி ஆடல்

மக்கள் மேல் நின்று தெய்வம் அவர் வாழவழி உரைப்பதாகத் தமிழர் எண்ணினர்[21]. தொடர்பின்றி அறியாமல் பிறர் வாயிலிருந்து வெளிவரும் விரிச்சிச் சொல்லையும் அவ்வாறு நம்பினர். புள்நிமித்தம், கழற்சிக் காய் விழுதலின் பயன்[22], பல்லி ஒலி முதலான பல்வேறு வகைகளில் தெய்வத் திருவாக்குக் கிடைப்பதாகக் கருதினர்.

அறிநெறியில் வழுவாமை "கட்டமை ஒழுக்கம்"[23] எனப்பட்டது. அந்தணர், சான்றோர், மற்றையோர் முதலான எல்லாரிடத்திலும் ஒழுக்க நெறி தவறாது நடந்து கொள்ள வேண்டும்[24]. பெரியோர்களின் ஒழுக்கம் மிகவும் பெரிதாகப் போற்றப்பட்டது[25]. ஒழுக்கம் உயிரைக் காட்டிலும் சிறந்தது[26]. ஒழுக்கத்திலிருந்து தவறுதல் கொடுமை எனவும், இவ்வொழுக்கக் கேடே அவனைத் தாக்கும் என்பதும் பண்டைய தமிழரின் நம்பிக்கை[27].

ஐம்புல நுகர்ச்சியில் தமக்குள்ள பற்றினைத் துறப்பது துறவு[28]. இத் துறவினர் உலகிலுள்ள உயிர்களிடத்திலுள்ள அருளுடைமையைத் துறந்தவர்கள் அல்லர்[29]. குணக்குன்றாய் விளங்கும் இவர்கள் சினம் கொள்ளின், அதனை யாராலும் மாற்றவோ

தாங்கிக் கொள்ளவோ முடியாது[30]. இவர்கள் எண்வகை இயல்புகளை உடையவர்[31].

தமிழரின் இந்தத் துறவுக் கோட்பாடு இளமைத் துறவை அடிப்டையாகக் கொண்டது அன்று (பிரம்மசரியத் தத்துவம் இளமைத் துறவின் பாற்படும்). இல்லற வாழ்வில் எல்லா இன்பங்களையும் துய்த்து, பின்பு துய்க்கும் நாள்களைத் தம் மக்களுக்கு விட்டுவிட்டு முதுமையில் துறக்கும் துறவே தமிழரின் துறவித் தத்துவமாகும்[32].

"சிறந்தது" என்று அவர்கள் கடவுளைக் கொண்டனர். "மெய்ப்பொருள்" என்றும் அதனைக் கூறினர்[33]. பிறவா நெறி வேண்டியே இவர்கள் துறவு பூண்டனர் எனலாம்[34]. இத்தகைய துறவு, உலகைத் துறப்பதன்று; மனத்தால் தன்னலத்தைத் துறப்பதாகும்.

### 3.4 உலக அமைப்பு முறையில் நம்பிக்கை

மக்கள் வாழும் இப் பெரிய பூவுலகம் கடலால் சூழப் பெற்ற தென்பதும், அக் கடல் ஆலிலை போன்ற தென்பதும் சங்கத் தமிழர்கள் கொண்டிருந்த இவ்வுலக அமைப்புப் பற்றிய கருத்து ஆகும்[35].

இவ்வுலகத்திற்கு மேலே கோள்களுடன் புலப்படும் விண்வெளியை "ஆனிலை உலகம்" என்றும், கீழே உயிரினங்கள் வாழும் ஆழ்கடலை "நீர் நிலை நிவப்பின் கீழ்" என்றும்[36], "ஆங்கு நிறையும் உலகம்" என்றும் அழைத்தனர். கோள்களுடன் தோற்றமளிக்கும் விண்வெளியை மேலுலகமென்றும், நீருடன் கூடி ஆழ் கடலை அளறு அல்லது கீழுலுலகமென்றும் அழைத்தனர். இயற்கைத் தோற்றத்தைக் கொண்டே இத்தகைய பாகுபாடுகளைக் கண்டனர்.

### 3.5 வாழ்வில் நம்பிக்கை

இவ்வாறு, இயற்கையினடிப் படையில் மேலுலகு, கீழுலகு எனக் கண்ட தமிழர் காலப்

போக்கில் மேலுலகத்தை நல்லுலகமாகவும், கீழுலகத்தைத் தீய உலகமாகவும் கற்பித்துக் கொண்டனர்.

ஒருவன் செய்யும் நல்வினை, தீவினைக்கேற்ப நன்மை தீமையை அடைவான் என்ற கோட்பாடு காலப் போக்கில் ஊழ்வினையால் ஒருவன் மோட்சத்தையோ நரகத்தையோ அடைவானென்றும், மோட்சம் இன்பமயமானதென்றும், நரகம் மீளாத் துன்பமுடைய தென்றும் கொள்ளப் பெற்றன.

இந்த உலகத்தில் புகழைத் தேடிக் கொண்டவர்கள் மேல் உலகை, அடைவார்கள்[37]. இவர்கள் ஆள் இருந்து ஒட்டாத "வான ஊர்தி"யின் வழியே மேலுலகம் செல்வர்[38]. போரில் மாண்டவர் மேலுலகிலுள்ள குற்றமற்ற மகளிரை மணந்து மகிழலாம்[39]. அன்பும் அருளும் இல்லாது உயிர்களைத் துன்புறுத்துவோர் கீழுலகமாகிய நிரயத்தில் நீங்காத துன்பத்தை அடைவர்[40] என்றெல்லாம் கொண்டனர்.

ஊன்றி நோக்கும் போது நல்ல செயல்களைச் செய்து புகழ் அடைவோர் வானத்து மீன்களைப் போல் புகழால் ஒளி பெற்றுத் திகழ்வாரென்றும், தீய செயல் செய்து மடிவோர் இருண்டு கிடக்கும் நீருள் வாழும் உயிரினங்களைப் போல் ஒளியற்றுக்கிடப்பா ரென்றும் கொண்ட கோட்பாடே பின்னர் மோட்சம் நரகமாகின எனலாம். மனிதன் சோம்பித்திரிதல் கூடாது; செயற்கரிய செயல்களைச் செய்தல் வேண்டும். அச் செயலும் பிறருக்கு நன்மை பயக்கக்கூடிய தாயிருத்தல் வேண்டுமென்னும் கருத்தை வலியுறுத்தவே எல்லோரும் நல்ல செயல்களையே செய்ய வேண்டும்; அவ்வாறு செய்யாதிருந்தால் மறுபிறவியில் தாழ்ந்த மக்களாகவோ, இழிந்த உயிராகவோ பிறந்து துன்புற வேண்டிவரும்[41] என்றனர்.

செய்ய வேண்டுவதற்கென செயல்களைத் தேர்ந்தெடுக்கும் போது உயர்ந்த செயல்களையே தேர்ந்தெடுக்க வேண்டும்[42]. அற்பமான எளியவரும் செய்யக் கூடிய செயலில் வெற்றி பெறுவதைக் காட்டிலும் செயற்கரிய செயலைச் செய்ய எண்ணி

முயன்று, அம் முயற்சியில் தோல்வி கண்டாலும் அதுவே மிகவும் நல்லது. முயல் வேட்டையில் வெற்றி காண்பதை விட யானை வேட்டையில் தோல்வியுற்றாலும் யானை வேட்டையே சிறந்தது[43]. யானை வேட்டைக்குச் சென்றவன் தோல்வியுற்றுத்தான் திரும்புவான் என்பதில்லை. அவன் யானையை வீழ்த்தி வெற்றியடையவும் முடியும். அதே நேரத்தில் காடை போன்ற சிறு பறவையை வேட்டையாடச் சென்று வெறுங்கையுடன் வருபவர்களும் உண்டு.

எனவே, உயர்ந்ததைச் செய்து உயர வேண்டும். இவ்வாறு உயர்ந்தவர்களுக்கு மேலுலக இன்பம் கிடைக்கும். அவ்வாறன்றி மறுபிறவி அவர்களுக்கு வாய்க்காமல் போய்விடுமாயினும் பரவாயில்லை. இந்த உலகில் அவர்களது புகழ் என்றும் நின்று நிலவும்[44]. சிலர், மறுபிறவி உண்டென்று நம்பினர். சிலர், மறுபிறவி இல்லை என்று கூறினர். எப்படியாயினும் நல்வினையாலும், உயர்ந்த செயலாலும் இந்த உலகத்தில் புகழ் நிலைபெறும், புகழே இல்லாமல் போனாலும் நற்செயல் புரிவோரின் யாக்கைக்குத் திண்மை உறுதியாகும். தீதற்ற வாழ்க்கை வாழ்வதே மிக உயர்ந்தது என்பது தமிழரின் எண்ணங்கள் ஆகும்.

தனது செயல் சிறந்ததாகவும், பிறருக்கு நன்மை பயக்கக் கூடியதாகவும், அதனால் தனக்கு அழியாத ஒளிதரும் புகழைச் சேர்க்கக் கூடியதாகவுமிருத்தல் வேண்டும். இத்தகைய குறிக்கோள் இல்லாதவனுடைய உடம்பு அற்பத்தனமாய் வாடி இருந்த இடம் தெரியாமல் அழியுமாம்[45]. ஒருவனை நன்னிலையில் வாழச் செய்வது அவன் செய்த நல்வினையே. அந்த நல்வினை என்னும் தெப்பம் ஒன்று தான் அவன் இறக்கும்போது உதவி, மறுபிறவியில் நலமடையச் செய்யும். இறைவனது திருவடியாகிய தெப்பம் பிறவிக் கடலைக் கடக்க உதவி, பிறவா நெறியை உண்டாக்கும்[46] என்று கடவுளின் அடியார்கள் நம்பியது போலவே, நற் செயல்கள் புரிவதால் அடையும் விளைவு நற்செயல் செய்பவன் இறந்த பின்பும் நன்னிலை அடையச் செய்யும் என்றும் கருதினர்.

## 3.6 வாழ்வில் சான்றோர் மறுப்பு

நல்லன செய்வோர் நன்மை அடைவர் என்றும், தீயன செய்வோர் தீமை அடைவர் என்றும் தமிழர்களுள் பெரும்பாலோர் நம்பினர். அதே நேரத்தில் நல்லன செய்து செம்மையுடன் வாழ்பவர்களும் வாழ்க்கை நிலையில் கெட்டுச் சீரழிந்து துன்பமுடன் வாழ்ந்து கொண்டிருந்த நிலையும் உண்டு[47]. இதனை எண்ணிப் பார்த்த சிலர் நல்லனவற்றால் நன்மையடைதலோ தீயனவற்றால் தீமையடைதலோ உறுதியாக நிகழும் செயல் அன்று என்று மறுத்தனர்[48]. எனினும், இவர்களைச் சான்றோர்கள் மதிக்கவோ நண்பர்களாக ஏற்கவோ இல்லை. செயல் திட்டம் உடையவராய்ச் செயலாற்றின் எண்ணிய ஒன்றே எண்ணியவாறே அடையலாம் என்று தமிழர் நம்பினர்[49] எனினும், யாரரலும் முடியாத செயல் ஒன்றைச் செய்ய முடியும் என்று சொல்லிப் பிறரைக் கெடுக்கும் மக்களும் இருந்தனர். இவர்களைப் போலவே தங்களால் செய்ய முடியும் ஒன்றைச் செய்ய இயலாது என்று கூறுபவர்களும் இருந்தனர். இவர்களது செயலால் மற்றவர்கள் துன்புற்றனர்[50].

## 3.7 வாழ்க்கையில் நிலையானது புகழ்

இந்த உலக வாழ்வு நிலையில்லாதது[51]. உலகம் ஒரு நாடக மேடை. உலகிலுள்ள மக்களெல்லாம் அதில் ஆடும் ஆட்டக்காரர்கள். இவர்கள் தத்தம் நாடகம் முடிந்தவுடன் போய் விடுவார்கள். எனவே இந்த உலகில் வாழும் பொழுதே இன்பமுடன் வாழ்ந்து மகிழ வேண்டும்[52].

நாடாண்ட மன்னர்கள் ஆனாலும் காடு செல்வது உறுதி[53]. இந்த நிலையில் ஈசல் போல் ஒரு நாள் வாழ்க்கைக்காக உல்லாசமாகத் திரியும் மக்களும் உள்ளனர். அவர்கள் நிலைமை மிகவும் வருந்தத்தக்கது[54]. வாழ்வோடு, உடலிலுள்ள இளமை கூட நிலையில்லாதது; ஆண்டுகள் மாண்டு கொண்டேயிருப்பதால் இது நிகழ்கிறது[55]. செல்வமும் எப்பொழுதும் ஒருவனுக்கே துணையாக இருப்பதில்லை. துணை

செய்யாவிட்டாலும் ஒருவனிடம் அது நிலைத்தாவது நிற்குமா என்றால் நிலைத்தும் நிற்பதில்லை அச் செல்வம்[56]. உலகத்தில் முன்பு பிறந்தவர்கள் செத்துவிட்டனர். பின்பு பிறந்து வாழ்பவர்கள் சாகப் போகிறார்கள். தான் உயிர் வாழ்வதை எண்ணி நிலம் என்னும் வெண்ணும் அழுவதாக உலகியலை நன்கு எண்ணிப் பார்த்தனர்[57]. உலக வாழ்வு நிலையில்லை. வாழுங்கால் இளமை நிலையில்லை. வாழ்வுக்குத் துணையாகும் செல்வம் நிலையில்லாதது. இவ்வாறு எல்லாமே நிலையில்லாத போது இருக்கும் வரை இன்பமாக வாழ்ந்து மகிழ வேண்டுமெனக் கொண்ட தமிழர் நிலையானது என்று கருதிய ஒன்று உண்டு. அதுதான் புகழ் அல்லது இகழ்[58].

### 3.8 வாழ்வில் இன்பமும் துன்பமும் இயற்கையின் வழிப்படியே, என நம்புதல்

ஒரே நேரத்தில் ஒரு வீட்டில் அழுகை ஒலி; மற்றொரு வீட்டில் மண முழக்கம். இதனை எண்ணும் மற்றையோருக்கு உலக வாழ்வின் கொடுமை புரியும். அவ்வாறு புரியும் போது என்ன செய்ய வேண்டும்? துன்ப நிகழ்ச்சிகளையும் இன்ப உணர்ச்சிகளாகக் கொள்ளும் மனப்பக்குவத்தை வளர்த்துக் கொள்ள வேண்டும்[59].

சாவு என்பது இந்த உலக மக்களுக்குப் புதியது அன்று. அதற்காக வாழ்வே வேண்டா என்று கூற முடியாது. பிறந்து விட்டோம் வாழ்ந்து தான் ஆக வேண்டும். இந்த வாழ்வு இன்பமும் துன்பமும் நிறைந்தது. மகிழ்வு வரும் போது உலக வாழ்வைப் போற்றுவதோ, துன்பம் வரும் போது பழிப்பதோ கூடாது. இன்பமோ, துன்பமோ பிறரால் நமக்கு வருவதில்லை. இயற்கையின் நியதிப் படியே இன்பமும் துன்படும் வருகின்றன. நமக்குத் துன்பம் வருவதும், அந்தத் துன்பம் நீங்குவதும் மலையருவியில் மிதந்துவரும் தெப்பக்கட்டைபோல அதன் போக்கில் போய்க் கொண்டிருக்கும். இதனை மெய்யுணர்வுக் காட்சியால் தெளிந்து வாழ்வாங்கு வாழ்ந்து இன்புற்றிருக்க வேண்டும்[60].

இந்த உண்மையை உயர்ந்த தமிழர்கள் வாழ்க்கையில் எந்த அளவுக்கு எந்த வகையில் இதனைக் கடைப்பிடித்தனர். உலகில் எந்த இடமானாலும் அது தாம் வாழும்

ஊர்தான் எங்கு வாழ்ந்தாலும், எப்படி வாழ்ந்தாலும், உலகில் வாழும் மக்கள் அனைவரும் உறவினர்கள் தாம் என்று கொண்டனர்[61].

உலகில் சிலர் தம் மாட்சிமை மிக்க செயலால் பெரியோராக விளங்கலாம். அவர்களைக் கண்டு வியப்படையும் செயல் பெரிது அன்று. சிலர் சிறியோராய்த் தாழ்வுற்றிருக்கலாம். அவர்களை இகழ்வதென்பது அறவே கூடாது. பெரியோரை வியந்து பாராட்டும் போது கூடச் சிறியோரை இகழ்ந்துரைத்தல் வேண்டாம்[62]. இது தமிழர் கடைப்பிடித்த தலையாய உண்மைகளில் ஒன்று.

### 3.9 வாழ்வில் துறவு

துறவு என்பது பற்றற்ற வாழ்க்கை. அந்த வாழ்க்கை தவம் என்று கூறப்படும். ஒருவரது தவத்தின் மதிப்பையும் இவ்வுலகிலுள்ள செல்வங்கள் எல்லாவற்றின் மதிப்பையும் சீர் தூக்கிப் பார்த்தால் தவத்தின் மதிப்பே மேலானது. திருமகள் பற்றற்ற தவ முடையாரிடம் சென்று அவரை விடாது வாழ்கிறாள். பிறரோ செல்வத்திடம் பற்றுக் கொண்டு அவளை அழைக்கின்றனர். அவளோ அவர்களை விட்டு விட்டுச் சென்றுவிடுகிறாள். தமிழரின் துறவு, மக்களையோ செல்வத்தையோ புறத்து ஒதுக்கி விட்டுக் காட்டிற்குச் சென்று தவம் செய்வது அன்று. மக்களோடு மக்களாய், செல்வ நலங்களுடன் வாழும்போது அவற்றின் மீது பற்றில்லாமல், அதாவது மக்களும் செல்வமும் தமக்கே உரியன என்று கொள்ளாமல் எல்லாருக்கும், எல்லா உயிர்களுக்கும் உதவும் வகையில் தம் மக்களையும் செல்வத்தையும் வழங்கி வாழ்வதாகும்.

### 3.10 வாழ்வில் செல்வத்தை நுகர்தல்

எல்லாரும் உண்டும், தின்றும் இன்பமுடன் வாழவே விரும்புகின்றனர். தாமும் உண்டு பிறருக்கும் உண்ணக் கொடுத்து அவர் மகிழ்வதைக் கண்டு தாமும் மகிழ்தல் வேண்டும். இவ்வாறு மகிழ்வதற்கே செல்வம் நம்மிடையே ஒப்படைக்கப் பெற்றது என்பதே தமிழரின்

கோட்பாடாகும்[63].

அரசரானாலும், கல்லாதவரானாலும் உண்பவை நாழி அளவே, உடுப்பவை உடை, மேலாடை என்னும் இரண்டே. எனவே, மிகுதியாகச் செல்வம் இருந்தாலும் அச் செல்வம் முழுவதையும் ஒருவனே துய்க்க முடியாது. துய்ப்பதற்க்குக் காலமும் போதாது. எனவே, செல்வம் பெற்றதன் பயன் பிறருக்குக் கொடுத்துத் துய்க்கும்படி செய்தல் வேண்டும்[64].

இத்தகைய செல்வமும் செல்வத்தாலும் பிறவற்றாலும் பெறும் இன்பமும் ஒருவருக்கு அறவழியில் கிடைக்கின்றன என்றும் அவ்வழியில்தான் அவற்றைப் பெற முயலவேண்டும் என்றும், தமிழர் விரும்பினர்[65]. இந்த வகையில் அறம், பொருள், இன்பம் என்னும் பேறுகளில் அறப்பேறே தமிழர் தத்துவத்தில் தலைமையிடம் பெறுகிறது.

### 3.11 இயற்கையின் வலிமை

உலகில் இயற்கையாக அமைந்துள்ள நீர், நெருப்பு, காற்று முதலான பொருள்கள் வலிமைமிக்கவை. அவற்றை வெல்லும் ஆற்றலை மனிதன் பெற்றிருக்கவில்லை என்பது தமிழர்களுடைய கோட்பாடு[66].

### 3.12 வாழ்வில் உயர்வு – தாழ்வு

ஒருவர் வெற்றி அடைந்தால் யாராவது ஒருவர் தோல்வி அடைந்தே தீர வேண்டும். ஒருவர் உயர்ந்தவராய் இருந்தால் மற்றொருவர் தாழ்ந்தவராய் இருந்தாக வேண்டும். இரு தரப்பினரும் வெற்றி பெற்றுவிடுவதோ, எல்லோரும் உயர்ந்தவராய் இருப்பதோ உலக வாழ்வில் முடியாத செயலாகும்[67]. எனவே, உயர்வு – தாழ்வு பற்றியும் வெற்றி – தோல்வி பற்றியும் கவலைப் படாது நல்லனவற்றைத் தொடர்ந்து செய்து கொண்டே இருக்க வேண்டும். சிறந்த அறிவு நலமுடையவர்கள் தம் வாழ்க்கையைச் செம்மையாக அமைத்துக் கொண்டு செல்வச் செழிப்போடு வாழ்வார்கள் என நாம் எதிர்ப்பார்க்கலாம் என்றாலும் இது எல்லாநிலையிலும் பயன்படுவது இல்லை. சிலர் வறுமையில்

வாடத்தான் செய்கின்றனர். இதற்காக காரணத்தையும் நம்மால் அறிந்து கொள்ள முடியவில்லை; மேலும் மேலும் எண்ணிப் பார்க்கக் கூடிய ஒன்றாக உள்ளது[68].

### 3.13 தமிழர் வாழ்வில் உடலும் உயிரும்

மனிதனின் உடல், உணவு உண்டு வளர்வதால் அதனை உணவின் பிண்டம் எனக் கூறலாம். உடம்பு இருந்தால் தான் உயிர் அதில் இருக்க முடியும். உயிரே மேலானது என்றாலும் உடம்பைப் பாதுகாத்தல் இன்றியமையாதது. எனவே, ஒருவருடைய உயிரைப் பாதுகாக்க விரும்பினால் வேண்டிய உணவை அவருக்குக் கொடுத்து அவரது உடலைப் பேணினாலே போதும். இவ்வாறு தமிழர், உணவுக் கொடை உயிர் கொடையாகக் கருதப் பட்டது[69].

### 3.14 வாழ்க்கையின் நன்மைத் தீமைகள்

எல்லோருக்கும் நன்மை பயக்கக் கூடியவற்றைச் செய்ய வேண்டியது ஒவ்வொருடைய கடமையாகும். சில வேளை நல்லது செய்ய முடியாவிட்டால் அவருக்குத் தீமையாவது செய்யாதிருக்க வேண்டும்[70]. இத்தகைய நல்லவர் நாட்டிலும் காட்டிலும் எங்கு வாழ்ந்தாலும் அவர்கள் வாழும் இடம் சிறந்த இடமாக எல்லோராலும் கருதப்படும்[71].

### 3.15 தமிழர் சேர்வாரோடு சேர்ந்திருத்தல்

உலகில் நல்லவர்கள் நல்ல வர்களையே சார்ந்து வாழ்வார்கள் தீயவர்கள் தீயவர்களையே சார்ந்து வாழ்வார்கள். நல்லவர்களைத் தீயவர்கள் சார்ந்து வாழ்வார்களேயானால் அந்த வாழ்வில் நோக்கம் நன்னோக்கமாய் இருக்க முடியாது. நல்லவர்கள் தீயவர்களைச் சார்ந்து வாழ்வார்களேயானால்; தாம் நல்ல பெயரை இழப்பதோடு மட்டுமன்றி அந்தத் தீயவர்களைக் கெடுக்கக் கூடிய தோல்வியையே தாமும் காண வேண்டிவரும்[72].

## 3.16 வல்லாண்மைக் கோட்பாடு

ஒருவனை ஒருவன் அடித்துத் தாக்குவதும் அப்போரில் ஒருவனோ இருவருமோ தொலைதலும் இந்த உலகத்தில் புதிதாக நடக்கும் செயல் அன்று. என்றென்றும் நிகழ்ந்து கொண்டுதான் இருக்கிறது[73]. இதனை நீக்க முடியாதென்றாலும் சிறிது மாற்றம் செய்ய முயலலாம்.

## 3.17 தமிழரின் பொது நல வாழ்வு

முன்பு அறிமுகமான ஒருவர் மீது இயல்பாகத் தோன்றும் மன ஈடுபாடு கண்ணோட்டம் எனப்படும். இந்தக் கண்ணோட்டம் மக்களிடத்தில் இருப்பதால் தான் உலகம் இன்றும் இருந்து கொண்டிருக்கிறது[74]. அன்புடையவர்கள் இந்த உலகத்தில் இருப்பதால் தான் இந்த் உலகம் இன்று இயங்கிக் கொண்டிருக்கிறது. இல்லாவிட்டால் மண்ணோடு மண்ணாகப் போய்விடும்[75].

உலகில் நிலைபேற்றுக்கான தத்துவங்களை இந்த வகையில் கண்ட தமிழர்கள் பிறருக்காகவே உலகில் வாழும் நல்லவர்கள் வாழ்வதால் தான் உலகம் நிலைபெற்று இருக்கிறது என்றும் கண்டனர். அந்த நல்லவர் சோர்வின்றி உழைப்பவர்கள் என்றும், புகழுக்காக உயிரையே கொடுப்பவர்கள் என்றும், பழி என்றால் உலகையே பரிசாகத் தந்தாலும் ஏற்க மாட்டார்கள் என்றும் இவர்களது முயற்சி தன்னலம் கருதி என்றுமே இராது என்றும், பிறரது நலன் கருதியே அமைந்திருக்கும் என்றும், இவர்கள் கொடையாளர்கள் என்றும் சிறப்பித்துப் போற்றப்படுகிறார்கள்[76].

## 3.18 தமிழர் வாழ்வில் உண்மை நிலை

முயற்சி, தன்னலம் நோக்கியே அமைந்திருக்கக் கூடாது; பிறரது நலன் நோக்கியே அமைந்திருக்க வேண்டும் என்பது தமிழர்களின் கோட்பாடு என்பதை மேலே கண்டோம். இந்த முயற்சி எலிகள் போல் பதுக்குவதாக இருக்கக் கூடாது என்றும், தான் வேட்டையாடிய உணவு இடப்பக்கம் வீழ்ந்தால் உண்ணாது பசியோடுஇருந்து மறுநாள்

மீண்டும் முயலும் புலி போன்றதாக இருக்க வேண்டுமென்றும் கருதினர்[77]. இத்துணைப் பெருமிதத்தோடு கூடிய முயற்சியைத் தமிழர் விரும்பினர் என்பது இதனால் பெறப்படும்.

### 3.19 பருவ மழை தவறாது பெய்வதாக நம்பிக்கை

"மாரிபொய்ப்பினும் வாரி குன்றினும் இயற்கையிலென செயற்கையில் தோன்றினும் காவலர்ப் பழிக்கும் இக் கண்ணகன் ஞாலம்". நாட்டில் அரசன் நீதி தவறாதவனாகச் செங்கோல் செலுத்தி வந்தால் அந்த நாட்டில் பருவ மழை தவறாது பெய்யும் என்று தமிழர் நம்பினர்[78].

### 3.20 உறவு செழிக்க தெய்வ வழிபாடு

தமிழர் தங்களின் உறவுகளில் அடங்கும் உறவுமுறைகள் அறநெறிப்பாதையிலும், ஒழுக்க நெறியிலும், அன்பு முதிர்வுக் குரிய நிலையில் ஆன்மாவை நாட ஆரம்பித்தனர். பின்பு அவை தெய்வ வழிபாடாக நிலவியது. பண்டைத் தமிழர்கள் உறைவிடம் அமைத்த போதும் கூட நிலத்திற்கு ஏற்ப தெய்வங்களை வழிபட நம் முன்னோர்கள் முற்பட்டனர். அப்போதுதான் அவர்கள் எடுத்துக் கொண்ட வாழ்வியல் செயல் இனிதே நடை பெறுவதற்காக தெய்வ வழிபாட்டினை மேற்கொண்டனர் என்பதற்கு இலக்கியச் சான்றுகள் அதிகம் உள்ளன. எனவே உற்றார் உறவினர்கள் மகிழ்ச்சியுடனும் செழித்து வாழ கடவுள் வழிபாடு நடத்தினர். அவ்வாறு நடத்துகின்ற போதும் தெய்வம் உறையும் உறைவிடங்களுக்கும் சென்று வருகின்றபோது மனம் அமைதியாக இருப்பதோடு மட்டும் அல்லாமல் உறவுகள் செழித்து வளர்வதர்க்கு உறுதுணையாக இறை வழிபாடு அமைந்திருக்கிறது. எனவே, மக்கள் கூடி வாழும் இடத்திற்கு ஏற்றவாறு அவர்களுக்குரிய தெய்வழிபாடு இருந்ததாக இலக்கியங்கள் சான்று தருகின்றன.

சிவன் தமிழரின் கடவுள்; சைவம் தமிழரின் மெய்ப் பொருள் நெறி. இதனைச் சிவன் என்னும் சொல்லே மெய்ப்பிக்கிறது. "சிவன்" என்னும் சொல் "சிவப்பு" என்னும் பண்பின் அடியாகப் பிறந்தது. "சிவப்பு" என்பது தமிழ்ச்சொல்[79]. எனவே தான் சங்கப் பாக்களில்

சிவன் தெளிவாக அறியப்படுகிறார்.

### 3.21 புறநானூற்றில் தெய்வம் (சிவன்)

சங்ககாலப் பாண்டிய மன்னன் பெருவழுதியை சிவநெறிச் செம்மலென வாழ்த்த முற்பட்டகாரிக்கிழார் என்னும் புலவர் பணியியர் அத்தை நின் குடையே முனிவர் முக்கட் செல்வர் நகர் வலம் செயற்கே[80] என வாழ்த்துகிறார். நீண்ட நாள் உயிர் வாழவைக்கும் நெல்லிக் கனியைத் தான் உண்ணாமல் தமிழைப் பரவிய அதியமான் தமிழ் வாழ ஔவையாருக்கு அளித்தான். அதனைப் பெற்ற ஔவையார் திருபாற்கடலைக் கடைந்து அமிழ்தம் பெற்றபோது அதனைத் தான் உண்ணாது அமரர்க்கு ஈந்து அவர்களின் சாவை ஒழித்த சிவனைப் போல நிலைபெற்று நற்புகழுடன் வாழுமாறு வாழ்த்துகிறார்[81]. சிவனுக்கு மூன்று கண்களிருப்பதைப் போலவே தமிழ்க் காவலர்கள் மூவர். அவர்கள் சேர, சோழ, பாண்டியராவர். மூன்று கண்களில் நெற்றிக் கண்ணே மெய்ஞ்ஞானக் கண்ணாகத் திகழ்வதைப் போல் பாண்டியன் தமிழின் புரவலனாகத் திகழ்ந்தான்[82] என்று மதுரை மருதனிளநாகனார் பாண்டியனைப் புகழ்ந்துரைக்கிறார்.

### 3.22 பிற சங்க இலக்கியங்களில் தெய்வம் (சிவன்)

வள்ளல் ஆய் அண்டிரன் கொடைக் குணம், சைவநெறியும் உடையவன். தான் அரிதில் பெற்ற கலிங்க ஆடையை ஆலமர் செல்வனுக்குப் படைத்தான்[83] என்று சிறுபாணாற்றுப்படை கூறுகிறது.

சிலப்பதிகாரமும் மணிமேகலையும் புத்த, சமண சமயங்களைக் கருப் பொருளாகக் கொண்டவையாயினும் சிவனே அவற்றிலும் முழு முதற் கடவுளாக ஏற்றப்படுகிறார்.

"பிறவா யாக்கைப் பெரியோன் கோயில்"[84]
"நுதல் விழி நாட்டத் திறையோன் கோயில்"

எனச் சிவனுடைய திருக்கோயில்கள் பற்றிச் சிலப்பதிகாரம் பேசுகிறது.

சைவசித்தாந்தம் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டுக்குப் பின்னரே தெளிவாக அறியப்படுகிறது. ஆயினும், இதனைச் சங்க காலக் கருப் பொருளில் முளைத்ததெனக் கொள்ள வேண்டும்.

### 3.23 முழுமுதல் கடவுள் (திருமால்)

பரிபாடலில் நாம் சந்திக்கும் முதன்மைத் தெய்வம் திருமால். பத்துப் பாட்டு, எட்டுத் தொகை ஆகிய எல்லாச் சங்க இலக்கியங்களிலும் திருமால் அறியப்படுகிறார். மால், மாயோன், நெடியோன் என்னும் பெயர்களால் சங்க இலக்கியங்களில் அறியப் பெறும் இவர் பரிபாடலிலும் அவ்வாறே அறியப் படுகிறார். "மால்" என்னும் சொல்லுக்குக் "கருமை" என்பது பொருள். "திரு" என்பது அடைமொழி. பசும்புல்வெளியும், கரிய அடவியும் மிக்க முல்லைத் திணைக்குக் கருநிறக் கடவுள் இயற்கைவழி உருவான தோற்றமாயிற்று.

பரிபாடலில் கூறப் படும் குளவாய்ப் பதி மதுரைக் கண்மையிலுள்ளது. இது "மாடக் குளக் கீழ் மதுரை எனவும்" அழைக்கப் பெறும். இங்கு ஆதிசேடனுக்கும் தனிக் கோயிலிருந்ததைப் பரிபாடல் சிறப்பித்துக் கூறுசிறது. தமிழர்களின் செல்வாக்கினால் வேத நாகரிகம் இதிகாசங்களில், இந்து நாகரிகமாகவே உரு மாற்றம் அடைந்துள்ளது; தமிழருக்கே உரிய உருவ வழிபாட்டினை ஆரியர் ஏற்றனர். தமிழர்க்குரிய ஆகம மரபுகள் வேத மரபுகளை ஆதிக்கம் செய்தன என்கிறார்.

பொதுவாக நோக்குமிடத்து சங்க இலக்கியங்களில் மிகுதியாகப் பேசப்படும் கடவுள் திருமாலே. அவரை முழுமுதற் கடவுளாகவே தமிழர் கண்டனர். தொல்காப்பியர் திருமாலை முல்லைத் திணைக் குரிய கடவுளாகக் கொண்டாலும் காக்கும் கடவுளாகவும், முழுமுதற் கடவுளாகவும் அவரைக் காட்டுகிறார்.

### 3.24 மலைக் கடவுள் (செவ்வேள்)

சங்க இலக்கியங்களில் அறியப்பெறும் கடவுள்களில் "செவ்வேள்" சிறப்பானவர். தமிழர் இயற்கையை வழிபட்டனர் என்பதற்குச் செவ்வேள் வழிபாடு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும். "கல் தோன்றி மண் தோன்றாக் காலம்" பற்றித் தமிழர் அறிவர். உலகில் மண்தோன்றுவதற்கு முன் கல் தானிருந்ததென்பது இன்றைய அறிவியலாரும் காணும் முடிபாகும். இதனை மதுரைக் காஞ்சி[85], புறப் பொருள் வெண்பா மாலை[86] முதலிய நூல்கள் தெளிவுபடுத்துகின்றன.

உலகில் முதன் முதல் தோன்றிய மனிதன் இப் பாறையைக் கண்டான். அதனையே பின்னர் வழிபட்டான். தொல்காப்பியரும் மலைவாழ் மக்கள் சேயோனை வழிபட்டதாகக் கூறுகிறார்[87]. மலைமீது உறைந்த மக்கள் கடலினின்று எழும் காலைக் கதிரவன் காட்சியையும், மாலையில் மறையும் காட்சியையும் கண்டு உள்ளத்தைப் பறிகொடுத்தனர். இக் காட்சிகளே அவர்களின் மனத்தில் நின்று இறைவனாகிவிட்டது. இக் காட்சியினூடே நீலமயில் மீது அமர்ந்து வரும் செவ்வேளைக் கண்டனர். எனவே, சேயோன் முருகன் எனவும் போற்றப்பட்டான். முருகன் என்னும் சொல் மணம், அழகு, இளமை, இறைமை என்றெல்லாம் பொருள்படும்[88].

முருகன் மலையும் மலைச் சார்ந்த நிலமுமான குறிஞ்சி நில மக்களுக்கு மட்டும் கடவுள் என்ற நிலை சங்க இலக்கியங்களை ஆராய்ந்து நோக்கும் போது இல்லை. இயற்கையின் அழகில் உருவான செவ்வேளைச் சங்க கால மக்கள் அனைவரும் நில வேறுபாடின்றிப் போற்றுவதைக் காண்கிறோம். திருமுருகாற்றுப்படையிலேயே இதற்கான சான்றுகளைக் காணலாம்[89].

### 3.25 பாலை நிலக் கடவுள் (கொற்றவை)

பாலை நில மக்கள் தங்கள் தொழில் வழிக் கடவுளாகக் கொற்றவையை வழிபட்டனர். இதுவும் பண்பின் அடிப்படையில் தோன்றிய கடவுளே. தொல்காப்பியரும்

கொற்றவையைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்[90]. பிரிந்தவர் மீண்டும் வந்து கூடிய பின், மீண்டும் பிரியாதிருக்க வேண்டுமெனக் கொற்றவையை வேண்டுவரெனக் குறுந்தொகையால் அறிகிறோம்[91]. இதற்கு அவர்கள் கையில் காப்பு நூல் கட்டி நோன்பு நோற்பர். கொற்றவையைப் பற்றிய பல செய்திகளைக் கலித்தொகை விவரிக்கிறது. அவள் எல்லாம் உணர்ந்தவளென்றும், பேய்க்கணங்கள் சூழக் காட்டிடையே வாழ்பவளென்றும், 'கொற்றி' எனும் பெயருடையவளென்றும் கலித்தொகை[92] கூறுகிறது.

சிலப்பதிகாரத்தில் 'கொற்றவை' தமிழ்ச் சமுதாயத்தில் பெற்றிருந்த முதன்மைநிலை தெளிவாகிறது. காட்டில் வாழ்ந்த வேடர்களின் தெய்வமாகத் திகழ்ந்த கொற்றவையை அவ் வேடர்கள் பலவாறு தொழுதேத்துவதைச் சிலப்பதிகாரம் சிறப்பித்துக் கூறுகிறது. அவள் கவுரி, சமரி, சூலி, நீலி, மாலின் தங்கை, நெற்றிக் கண்ணை உடையவள் என்பனவாகப் பலபடப் பாராட்டப் படுகிறாள். அவள் நஞ்சுண்டும் சாகாதவள் என்றும் சிலப்பதிகாரம் செப்புகிறது[93].

### 3.26 சங்க இலக்கியத்தில் பிற சமயத்தவர் சான்றுகள்

சங்க இலக்கியங்களில் கோயில் எடுத்துப் பரவும் பழக்கமும் இருந்துள்ளது. புறச் சமயத்தினரான சமணரும் பௌத் தரும் தமிழர் வாழ்ந்த ஊர்களுக்கு வெளியில் தத்தம் கோயில்களை அமைத்தனர். அவை 'புறநிலைக் கோட்டம்' எனப்பட்டன. அவற்றில் சமயம் பரப்பும் அறவோராகிய துறவிகள் இருக்குமிடமும், சமயப் பரப்பு சொற் பொழிவு மண்டபங்களுமிருந்தன. தமிழ் வேந்தர் பலர் இத்தகைய சமணத் துறவிகளுக்குக் கற்படுக்கைகளையும் குகைகளையும் அமைத்து அளித்ததையும் பள்ளிகளுக்குச் சந்தம் அளித்ததையும் காண்கிறோம். காவிரியின் இருமருங்கிலும் இத்தகைய நிலைக் கோட்டங்கள் பல இருந்ததைச் சிலம்பும் மேகலையும் விவரிக்கின்றன. அவற்றுள் திருவரங்கம், உறையூர், மதுரை முதலிய இடங்களிலிருந்து பள்ளிகள் சிறப்பாகப் பேசப் படுகின்றன.

சங்க இலக்கியங்களில் பல்வேறு கோயில்களைக் காண்கிறோம். அவை 'கோட்டம்'

என்னும் சொல்லாலேயே குறிப்பிடப் படுகின்றன. முருகன் கோயிலை "அணங்குடை முருகன் கோட்டம்" எனப் புறநானூறு[94] குறிப்பிடுகிறது. இதனடியொற்றித் தான் சிலப்பதிகாரமும் அமரர் தருக் கோட்டம், வெள்யானைக் கோட்டம், புகர் வெள்ளை நாகர் தங் கோட்டம், பகல் வாயில் உச்சிக் கிழான் கோட்டம், ஊர்க் கோட்டம், வேற் கோட்டம், வச்சிரக் கோட்டம், புறம் பணையான் வாழ் கோட்டம், நிக்கந்தக் கோட்டம், நிலாக் கோட்டம், எனப் பல்வேறு கோயில்களைக் குறிப்பிடுகிறது[95]. பொதுவாகச் சமணர் வழிபடும் அருகன் கோயிலை நிக் கந்தக் கோட்டம் என்பர். இவ்வாறு சமணரும் பௌத்தரும் தமிழர் வாழ்ந்த ஊருக்கு வெளியில் கோட்டம் அமைத்து வழிபட்டு வந்ததைச் சங்க இலக்கியமும் சிலப்பதிகாரமும் தக்கச் சான்றுகளுடன் குறிப்பிடுகின்றன.

சங்ககால உண்மைப் பொருளை நாம் தெளிவாகவும் திட்டமாகவும் அறிவதற்குச் சங்க இலக்கியங்களே தக்க சான்றுகளாய் உள்ளன. பழம் பெரும் இலக்கண நூலாகிய தொல்காப்பியம் முதல், காப்பிய நூல்கள் ஈறாக உள்ள சங்க நூல்கள் காணும் உண்மைப் பொருளின் இயல்புகளை ஆராய்ந்தோம். தொல்காப்பியத்திலேயே வேதப் பண்புகள் தோய்ந்திருப்பதையும், பிற சங்க இலக்கியங்களில் வேதப் பண்புகளோடு இதிகாசங்களில் வரும் பல்வேறு கதைகளும் விரவி வருவதையும் கண்டோம். அவை இயற்கை வழிப் பட்டனவாகவே உள்ளதைக் காண்கிறோம். ஆயினும், திருமாலும் விஷ்ணுவும், செவ்வேளும் கந்தனும், சிவனும் உருத்திரனும், கொற்றவையும் சக்தியும் ஒன்றுபட்ட கடவுள் தன்மைகளைச் சங்க இலக்கியங்கள் விளக்கி நிற்பதை நாம் மறுக்க முடிய வில்லை. அதனோடு இக் கலப்புக் பண்பில் வேறுபாடு காண முடியவில்லை.

வேதவிதிகள் வேள்வி முறைகள், குல தருமங்கள் முதலியன சங்க இலக்கியங்களில் காண்கிறோம். வேள்விகளைச் செய்து புகழ்பெற்ற வேந்தர்களையும், அந்தணரை ஓம்பிய மன்னர்களையும் பார்க்கிறோம். தூய வைதிக நெறிகளையும் அறிவியலுக்கும் அளவை இயலுக்கும் ஒத்த இயற்கை நெறிகளையும் காண்கிறோம். காட்டு நில மக்கள் வழிபட்ட திருமாலும், மலைநாட்டவர் வழிபட்ட செவ்வேளுமாகத் தொடங்கும் கடவுளர்கள்

தொல்காப்பியருக்குப் பின் தொல்கதை (புராணம்), இதிகாசக் கடவுள்களாகக் காட்சியளிக்கின்றனர். தொல்காப்பியத்தில் நானிலக் கடவுளரும் கொற்றவையும் அறிமுகமாகின்றனர். சிவனைப் பற்றிய குறிப்புகள் வெளிப்படையாக இல்லை. மக்கள் கோயிலெடுத்துப் பூசனை புரிந்த செய்திகளும், விழாக்கள் எடுத்தது பற்றியும் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது.

தொகை நூல்களிலும் சிவன் என்னும் பெயர் காணப்படவில்லை. ஆயினும் தாழ் சடை பொலிந்த அருந்தவத்தோன், முக்கட் செல்வன், கறைமிடற்று அண்ணல், பைங்கட் பார்ப்பன் முதலிய பெயர்களால் சிவன் சுட்டப் பெறுகிறான். ஆல முண்ட நீலகண்டன் முதலியனவாகப் பல்வேறு சம்பவங்கள் தொகை நூல்களில் சிவனைப் பற்றிய குறிப்புகள் உள்ளன. இவற்றை ஊன்றி நோக்கும் போது சிவனோடு தொடர்புடைய பல கதைகளும், இதிகாசக் கதைகளும் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன. இவ்வாறு சைவமும் வைணவமும், சமணமும் பௌத்தமும் போன்ற சமயக் கோட்பாடுகளில் சங்கத் தமிழர்கள் வழிப்பட்டதை நம்மால் இலக்கியச் சான்றுகள் மூலமாக அறிய முடிகிறது.

### 3.27 தமிழரின் பழக்கவழக்கங்கள்

சங்க காலத் தமிழ் மக்களுக்கேயுரிய சிறப்புமிகு பழக்கவழக்கங்கள் நம் கருத்தைக் கவருகின்றன. அவற்றுள் சில, இன்று வரையில் தமிழரிடையே வழக்கில் இருந்து வருகின்றன. அவை, பிற இந்திய மக்கள் இடையே காணப் பெறாதனவாக உள்ளன அல்லது தமிழ் மக்களிடம் இருந்து, பிற இந்திய மக்கள் கற்றுக் கொண்டனவாகத் தோன்றுகின்றன. அவற்றுள் முதன்மையான சிலவற்றை இவ்வியல் ஆராய்கிறது.

### 3.28 சிலம்புகழி நோன்பு

திருமணம் ஆவதற்கு முன்பு, இளம் பெண்கள் ஒருவகைச் சிலம்பு “அணிந்து

இருப்பர்". திருமணம் முடிவான பிறகும், திருமண விழாவிற்கு முன்னரும் ஒரு நன்னாளில் "அச் சிறு சிலம்பினை நீக்கும் விழா" மணமகள் இல்லத்தில் நடைபெறும். அதனைச் "சிலம்புகழி நோன்பு" என்பர். இவ் விழா வயது முதிர்ந்த இல்லத்தரசியர் சிலர் ஒன்றாகக் கூடிச் செய்த சடங்காகும். இச் சடங்கின் மூலம், பெற்றோர் தம் மகள் மணவாழ்விற்குரிய தகுதியைப் பெற்று விட்டனள் என்பதை உலகிற்கு உணர்த்தினர்[96].

இந்தச் சிறு சிலம்பு நீக்கு விழாவிற்குப் பிறகு, வாழ்வரசியரான மகளிர் சிலம்பு அணிவது இல்லையா? என்னும் ஐயம் எழலாம். திருமணத்திற்குப் பிறகு வேறு வகையான சிலம்புகள் அணிவது வழக்கம். கண்ணகியின் காற்சிலம்பும் பாண்டிமா தேவியின் பொற்சிலம்பும் இதற்குச் சிறப்புமிகு சான்றுகளாகும்.

### 3.29 திருவிளக்கு வழிபாடு

இன்றைய தமிழர் வாழ்வில் "திருவிளக்கு" ஏற்றி வழிபாடு செய்தல் ஒருவகைப் பண்பாடாக இருந்து வருகிறது. விழாக்களைத் தொடங்குகின்ற பொழுதும், நற்செயல்களைச் செய்கின்ற பொழுதும் குத்து விளக் கேற்றுதல் சிறப்புமிகு வழக்கமாகும். நாள் தோறும் மாலை வேளையில், கதிரவன் மறையும் அந்தி நேரத்தில், வீட்டு முற்றத்தில் மணிவிளக்கு ஏற்றி, நெல்லும் மலரும் தூவி வழிபாடு செய்வது பண்டைத் தமிழ்மக்களின் பழக்கமாகும். தெருவாசற்படியில் நெல்லும் மலரும் இட்டு விளக்கேற்றி அந்நேரத்தில் வழிபடுவதும், வீட்டின் உள்ளே திருவிளக்கு ஏற்றி வழிபாடு செய்வதும் மனையுறை தெய்வத்தை – குல தெய்வத்தை – வழிபாடு செய்வதும் ஒருவகை முறையாகவும் மேற்கொள்ளப்பட்டது[97].

### 3.30 பிறை தொழுதல்

பொதுவாக திங்களைப் போற்றி வழிபடுவது, பண்டை நாகரிக நாடுகளில் சிற்சில

வேறுபாடுகளுடன் இருந்ததைக் காணுகின்றோம். செழிப்பினையும் வளர்ச்சியினையும் வேண்டிப் பிறை தொழுவது தமிழ்நாட்டின் மரபு. மங்கைப் பருவம் அடைந்த பெண்கள் நல்ல கணவனும் சிறந்த வாழ்க்கையும் வாய்க்க வேண்டும் என்னும் நோக்கத்தோடு பிறையினைப் போற்றி வழிப்பட்டனர். சந்திரனைப் பெண் தெய்வமாகவும் காதல் தெய்வமாகவும் கருதிப் போற்றுவது பண்டைத் தமிழரின் வழக்கமாகும்[98].

## 3.31 பத்தினி வழிபாடு

கற்புடைய மகளிரைப் பெருமையுடன் பாராட்டுவது பண்டைய மரபு. கற்புக்கரசியாகிய கண்ணகிக்குக் கோயில் எடுத்து, திருவிழா நடத்தப்பட்டதைக் சிலப்பதிகாரத்தால் அறிகிறோம். கடல் சூழ் இலங்கைக் கயவாகு வேந்தன், இப்பத்தினித் தெய்வ வழிபாட்டைத் தமிழகத்தில் இருந்து கொண்டு சென்று, இலங்கையில் புகுத்தியதாகத் தெரிகிறது[99]. சேரன் செங்குட்டுவனால் தொடங்கி வைக்கப்பட்ட இப்பத்தினி வழிபாடு, இளங்கோவடிகளால் இலக்கியத்தின் மூலம் போற்றிப் பரப்பப்பட்ட இப்பத்தினி வழிபாடு சங்ககாலத்திற்குப் பிறகு, தமிழகத்தின் ஊர் தோறும் சக்தி வழிபாட்டின் ஒரு பகுதியாகப் பின்பற்றப்பட்டு வருவதைக் காணலாம். இவ்வழிபாட்டு நெறி, இன்றும் இலங்கையில் பெருஞ்சிறப்பு உடையதாக இருந்து வருவது கருதத்தக்கதாகும்[100].

## 3.32 மலரினைப் போற்றுதல்

இயற்கையோடு இயைந்த வாழ்க்கை வாழ்ந்தவர்கள் பண்டைத் தமிழர்கள். அவர்களுடைய உள்ளத்தை வண்ண மலர்கள் பெரிதும் கவர்ந்துள்ளன; அவற்றை அணிந்து மகிழ்ந்தனர்; காதல் வாழ்க்கை, போர், வழிபாடு முதலியவற்றில் ஒருவகைக் குறியீட்டுப் பொருளாகவும், கலையுணர்வை வெளிப்படுத்தும் ஒருவகைச் சின்னமாகவும் மலர்களை அவர்கள் பயன் படுத்தியுள்ளனர்[101].

காதல் வாழ்க்கையில் மட்டும் அல்லாமல், போரின் பல்வேறு நிலைகளைப் புலப்படுத்தவும் வெட்சி, கரந்தை, வஞ்சி, தும்பை, உழிஞை, வாகை போன்ற பூக்கள் பயன்படுத்தப் பட்டுள்ளமை பண்டைத் தமிழருக்கு மலர்களிடத்து ஒருவகை 'மயக்கம்' இருந்ததைத் தெரிவிக்கிறது.

முல்லை மலர் கற்புநெறி பிறழாத காதல் வாழ்க்கைக்குரிய 'முல்லை சான்ற கற்பு' என்று அடையாளச் சின்னமாகப் போற்றப்பட்டது[102]. அதே சமயத்தில் காட்டு நிலப் பெயராகவும் வழங்கப்பட்டது. எல்லா வகையான வழிபாட்டிற்கும் உரிய புனித மலராகவும் முல்லை மலர் பயன்படுத்தப் பட்டது. பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை பூக்கும் குறிஞ்சி மலர், மலையும் மலை சார்ந்த பகுதியையும் சுட்டும் பெயராகவும், ஒருவனும் ஒருத்தியும் காதல் வயப்பட்டு, "இருதலைப் புள்ளின் ஓருயி" ராக விளங்கும் களவு வாழ்க்கையின் சின்னமாகவும் போற்றப் பட்டது. மருதமலர் நகர நாகரிகத்தின் சின்னமாகவும், பரத்தையர் பிரிவினையும் அதனால் உண்டாகும். ஊடலையும் உணர்த்துவதாயிற்று. நெய்தல் மலர், கடற்கரைப் பகுதிக்குரிய பெயராகவும், காதலன் பிரிவினால் உண்டாகும் ஏக்கத்தைப் புலப்படுத்தும் குறியீடாகவும் வழங்கலாயிற்று.

குவளை மலரும், தாமரைப் பூவும் வளமிக்க வாழ்க்கையின் சின்னங்களாகக் கருதப்பட்டன[103]. 'பூப்பலி' செய்து இறை வழிபாடு செய்யும் 'பூசெய்' (பூசை) முறை சங்க காலத்திலேயே தோன்றிவிட்டது.

ஆடவரும் மகளிரும் மலர்களைத் தலைமுடியில் சூடி மகிழ்ந்தனர்;[104] மாலையாக அணிந்து, அழகுமிக்கவர்களாக விளங்க முயன்றனர்; விருந்தினருடைய உள்ளத்தை அனிச்சமலரினும் மென்மையானதாகக் கருதினர்[105]. இந்த அனிச்சமலர் காதலியின் பாதங்களைத் துன்புறுத்தக் கூடிய முட்களாகும் என்று காதலனுடைய உள்ளம் துடித்ததைக் காணுகின்றோம்[106]!

காதல் நோய் காலையில் அரும்பாகத் தோன்றுமாம்; பகற்பொழுதில் மொட்டாகக் காட்சி தருமாம்; மாலையில் மலர்ந்து மணம் பரப்புமாம்! காதல் வாழ்க்கை "மலரினும் மென்மை" யானதாகக் கருதப்பட்டது[107]. மங்கையர் மலர்க்கொடி, பூங்கொடி என்று பலவாறாகப் போற்றப் பட்டனர்.

இவ்வாறு வாழ்க்கையின் ஒவ்வொரு நிலையிலும் மலரினைப் பெரிதும் தமிழர்கள் மதித்துப் போற்றியுள்ளனர். மலரினுடைய மென்மை, எளிமை, தூய்மை, அழகு முதலிய பண்புகளைப் பண்டைத் தமிழர் நன்கு உணர்ந்து இருந்தனர்; மகிழ்ச்சியையும் இன்ப எக்களிப்பையும், தூய்மையையும், குறிக்கோளினையும் புலப்படுத்தும் ஓர் அடையாளச் சின்னமாக மலர்களை அவர்கள் போற்றிப் பயன்படுத்தியுள்ளனர்.

## 3.33 எண்ணெய் தேய்த்துக் குளித்தல்

சங்க காலத் தமிழர் நெய் என்னும் சொல்லாலேயே எண்ணெயைச் (எள்+நெய்) சுட்டினர். வெப்ப மண்டலத்தில் வாழும் மக்கள், கதிரவனின் வெப்பத்தின் தாக்குதலால் உடலின் தோல் நைந்து விடா வண்ணம் காப்பதற்கு, உடல் முழுவதும் எண்ணெய் பூசி, ஊறவைத்துக் குளிப்பது வழக்கம்.

சங்க காலத் தமிழகத்தில், எண்ணெய் தேய்த்துக் குளித்தல் வாழ்க்கையின் முக்கிய நிகழ்ச்சிகளோடு இணைந்த ஒருவகைப் பழக்கமாக இருந்தது; இன்றும் இப்பழக்கம் இருந்துவருவதைக் காணலாம். குழந்தையைப் பெற்றெடுத்த தாய்மார்களுக்குக் குறிப்பிட்ட சில நாள்கள் கழிந்த பிறகு எண்ணெய் நீராட்டுதல் சிறப்புமிக்க பழக்கமாகும். எண்ணெய் தேய்த்துக் குளித்த இளம் தாய்மார்கள் சோர்வினாலும் களைப்பாலும் மயக்க முற்று உறங்குவர். இதனை 'நெய்யணி மயக்கம்[108] என்பர்.

போருக்குப் புறப்படும் பொழுதும், திரும்பி வந்த பிறகும் ஆடவரும், தெய்வ வழிபாட்டில் ஈடுபடுவதற்கு முன்பு ஆடவரும் பெண்டிரும் எண்ணெய் தேய்த்துக் குளித்தல் வழக்கம்

என்பதைச் சங்கப் பாடல்களால் நாம் அறிகிறோம்[109].

பண்டை நாகரிக நாடுகளுள் கிரேக்கர்களும் உரோமானியர்களுமே எண்ணெய் தேய்த்துக் குளிக்கும் பழக்கம் உடையவர்களாக இருந்தனர்.

### 3.34 பிறந்த நாள் விழா

ஐரோப்பியர் வருகைக்குப் பிறகே, இந்தியர்கள் பிறந்த நாள் விழாக் கொண்டாடுவதைக் கற்றதாகச் சிலர் தவறாகக் கூறுகின்றனர். நம் நாட்டில் அரசர்களுடைய பிறந்த நாள் விழா மிகச் சிறப்பாகப் பண்டைக் காலத்தில் கொண்டாடப்பட்டதைச் சங்க இலக்கியத்தால் அறிகிறோம். திருவண்ணாமலைக்கு அருகில், செங்கண்மாவினைச் (செங்கம்) சிறப்பாக நன்னன் என்னும் குறு நில மன்னன் ஆட்சி புரிந்து வந்தான். அவனுடைய பிறந்த நாள் விழா அவனுடைய நாட்டு மக்களால் சிறப்புமிகு பெருவிழாவாகக் கொண்டாடப்பட்டது.

> "பேரிசை நன்னன் பெரும் பெயர் நன்னாள்
> சேர விழவினும் ஆர்ப்பெழுந் தாங்கு"[110]

என்று மாங்குடி மருதனார் குறிப்பிடுகிறார். இந்தப் பிறந்தநாள் விழாவினை, "வெள்ளணி விழா" எனப் போற்றுவதுவழக்கம் என்பது சிலப்பதிகாரத்தால் புலனாகின்றன[111]. இதனால், பிறந்த நாளன்று, தூய வெண்மையான ஆடையை உடுத்தி கொள்ளுவது வழக்கம் என்பதும் தெரிகிறது.

### 3.35 கார்த்திகை விளக்கீடு

சங்க காலம் முதற் கொண்டு இன்று வரை கொண்டாடப்பட்டு வரும் திருவிழா "கார்த்திகை விளக்கீடு" என்பதாகும். கார்த்திகை மாதத்தில், கார்த்திகை நாளன்று முருகனுக்குரிய விழாவாகத் தமிழர்களால் கொண்டாடப்பட்டு வரும் ஒளி வழிபாட்டுத் திருவிழாவே "கார்த்திகை விளக்கீடு" என்பதாகும்.

இந்தத் திருவிழாவில், எண்ணற்ற சிறு விளக்குகளை வரிசை வரிசையாக வீடுகளிலும் வீதிகளிலும் ஏற்றி வைத்து வழிபாடு செய்வது வழக்கம்[112]. அன்று, செல்வர்கள் பல்வேறு பொருள்களைத் தானமாகக் கொடுத்து மகிழ்வது[113] சங்க காலத்திய வழக்கம்.

### 3.36 மார்கழி நோன்பு

இக்காலத்தில் மார்கழி நோன்பும், தை மாதம் முதல் நாளன்று பொங்கல் விழாவும் மிகச் சிறப்பாகத் தமிழ் மக்களால் கொண்டாடப் படுகின்றன. இதனுடைய பழைய வடிவம் "தைந் நீராடல்" என்னும் திருவிழாவாக இருந்திருக்கக் கூடும்.

தை மாதம் முதல் நாள் அன்று மேற்கொள்ளப்பட்ட புனித நீராடல், ஒருவகைத் திருநாளாகக் கொண்டாடப்பட்டது. சங்க காலத்தின் கடைசிப் பகுதியிலேயே இந்த விழா வழுக்கிற்கு வந்ததாகத் தெரிகிறது. மற்றும் இது சமயத் தொடர்பான விழா என்பதும் புலனாகின்றது. திருவாதிரைத் திருநாளோடு தொடர்பு உடைய விழாவாக இதனைப் பரிபாடல் கூறுகிறது[114].

கன்னிப் பெண்கள் இறைவனை வேண்டி, நோன்பு நோற்று நோன்பின் நிறைவு நாளன்று நீராடுவது தைந் நீராடலாகும்[115]. "சிறந்த கணவரைப் பெற வேண்டும்" என்னும் நோக்கத்தோடு இந் நோன்பு மேற் கொள்ளப்பட்டதைச் சங்க இலக்கியப் பாடல்கள் தெரிவிக்கின்றன[116].

இவ்வகையில், பிற்காலத்திய 'மார்கழி நோன்பு' டன் தைந்நீராடல் திருவிழா பெரிதும் தொடர்பு உடையதாகக் காணப்படுகிறது.

## 3.37 மணமகளின் முதற் பணி

திருமணத்திற்குப் பிறகு, முதன் முதல் கணவன் வீட்டிற்கு வரும் மணமகள், மணமகனுக்கும் அவனுடைய உற்றார் உறவினருக்கும் சோறு வட்டிக்கும் (பரிமாறும்) வழக்கம் சங்க காலம் முதல் இன்று வரை இருந்து வருகிறது. இதனைத் தொல்காப்பியர் "அடிசிலும், பூவும் தொடுதல்"[117], என்று கூறுவர். இக் காலத்தில் இதனை நெய் ஊற்றுதல் என்பர்.

## 3.38 சினைக் களைதல்

சங்க காலச் சமுதாயத்தில் கணவன் உள்ள வரையில் சிறப்புடன் மகளிர் போற்றப்பட்டனர். கணவனை இழந்தவுடன், எல்லாவற்றையும் வாழ்வில் இழந்தவர்களாக மகளிர் கருதப்பட்டனர்.

கைம்பெண்டிரின் வாழ்க்கை அன்று அவலம் நிறைந்த வாழ்வாக இருந்தது. அழகூட்டும் அணிகலன்களையும் வளையல்களையும் அவர்கள் அணியவே கூடாது என்னும் காரணத்தால், கணவன் இறந்தவுடன், அவற்றை எல்லாம் கைம்பெண்கள் நீக்கிவிடுவர். எனவே, கணவனை இழந்த மகளிரைக் கழிகல மகளீர் என்று சுட்டுவது வழக்கமாகும்.

அடுத்து அவர்களுடைய அழகிய கூந்தல் களையப்பட்டது.

> "கூந்தல் கொய்து குறுந்தொடி நீக்கி
> அல்லி யுணவின் மனைவி"[118]

> "ஒள்நுதல் மகளிர் கைம்மை கூர
> அவிர் அறல் கடுக்கும் அம் மென்
> குவையிருங் கூந்தல் கொய்தல் கண்டே"[119]

"கொய்ம் மழித் தலையோடு கைம்மையுறக் கலங்கிய
கழிகல மகடூஉ."[120]

எனும் புறப் பாடற் பகுதிகளால், மகளிருடைய கூந்தல், கணவன் இறந்தவுடன் மழிக்கப்பட்டமை புலனாகிறது. அண்மைக் காலம் வரையில், தமிழ்நாட்டுப் பார்ப்பனர் சமூகத்தில் இப்பழக்கம் வழக்கில் இருந்துவந்தது; இன்றும் அருகிய வழக்காக இருந்து வருகிறது. இச் செயலால் மகளிருடைய அழகு குலைக்கப்பட்டது என்பது உண்மை. மானிடவியல் நூலார் இதற்கு வேறு காரணம் கூறுவர். பெண்ணை மனைவியாகப் பெற்றவனுடைய சிறப்பு மிகு ஆற்றல் அனைத்தும், அவளுடைய தலையின் முடியில் குவிந்து கிடக்கும். கணவனுடைய மறைவால், அவள் அந்த ஆற்றல்கள் அனைத்தையும் இழந்துவிட்டாள் என்பதைப் புலப்படுத்தும் அறிகுறியே கைம் பெண்களுக்கு மொட்டை அடித்தலாகும்[121] என்று விளக்கம் தருவர். சமுதாயத்தின் மதிப்பினை இழந்தவள் அழகற்றவள், என்பதை உணர்த்தவே கூந்தலைக் கொய்தனர் எனலாம். எனினும், மகளிர்க்கு வழங்கப் பட்ட மாபெருந் தண்டனையே கூந்தல் கொய்தல் எனக் கூறினால், இது தவறாகாது, என்ற வழக்கம் அன்றைய நாளில் பழக்கத்திலிருந்து அண்மைக் காலமாக பகுத்தறிவாளர்களின் போராட்டங்களுக்குப் பிறகு இவ்வழக்கம் முற்றிலும் ஒழிந்து விட்டது எனலாம்.

கணவனை இழந்த மகளிர்க்கு மறுமணம் செய்து கொள்ளும் உரிமை, சங்க காலத் தமிழ்ச் சமுதாயத்தில் இருந்ததாகத் தெரியவில்லை. கைம்மை நோன்பு கொண்ட ஏழை எளிய மகளிர் நூல் நூற்கும் தொழிலில் ஈடுபட்டு, வாழ்க்கைக்கு வழி தேடிக் கொண்டனர்[122].

### 3.39 வாளால் வெட்டி அடக்கம் செய்தல்

குழந்தைகள் பிறந்தவுடன் இறந்தாலோ, இறந்தே பிறந்தாலோ அவற்றை வாளால்

வெட்டியே புதைப்பது அக்காலத்திய பழக்கமாகும். குழந்தை வடிவம் பெறாமல், குறை வடிவமாக வெறும் சதைப் பிண்டமாக இருந்தாலும் இப் பழக்கத்திலிருந்து தப்ப இயலாது என்பர்.

இவ்வாறு வெட்டிப் புதைக்கும் பழக்கம் இன்னொரு பழக்கத்தை அடிப்படையாகக் கொண்டது. பிறந்தோர் யாவரும் சிறப்பாக ஆடவர் யாவரும் - நாட்டுக்காகப் போர்க்களத்தில் உயிரைவிட வேண்டும் என்று சங்க கால மக்கள் கருதினர். இந்த உணர்வு, உலகின் பல்வேறு நாடுகளிலும் வீரயுகக் காலத்தில் இருந்ததை வரலாறு பேசுகிறது. இவ்வாறு இறந்தால்தான், துறக்க இன்பம் வீர சுவர்க்கம் – கிடைக்கும் என்று அவர்கள் நம்பினர். ஆகவே, போர்க்களத்தில் இறக்கும் வாய்ப்பினைப் பெறாது குழந்தைப் பருவத்தில் இறந்தாலும், முதுமையுற்று இறந்தாலும், இறந்த பின்னர் சங்க காலத் தமிழ் மக்கள் வாளால் வெட்டித்தான் புதைத்தனர். நோயினால் இறந்தோரை, போர்க் களத்தில் உயிரை விடாத குற்றம் நீங்கும் படி, பசும் புல் மீது கிடத்தி, அறநெறியில் வாழும் நான்மறை முதல்வர்கள், வீரமே துணையாகப் போர்க்களத்தில் இறந்தோர் செல்லுமிடம் செல்க எனக் கூறி, வாளால் வெட்டிய பிறகு அடக்கம் செய்வது பண்டைத் தமிழரின் பழக்கமாகும்[123].

இக் காலத்தில், முதியோர் இறந்தால் இவ்வாறு செய்வது இல்லை. ஆனால், குழந்தை இறந்துவிட்டால், இடுகாட்டில் அடக்கம் செய்வதற்கு முன்பு, சிறு கத்தியாலோ, காட்டு முள்ளினாலோ கைவிரல்களில் ஓரிடத்தில் சிறப்பாக நுனி விரலில் கீறி அடக்கம் செய்வதைக் காணலாம். சில சமூகங்களில் காதிலேனும் மூக்கிலேனும் கீறி அடக்கம் செய்யும் வழக்கம் இருந்துவருகிறது. இதனைப் பண்டைக் காலப் பழக்கத்தின் "எச்சமிச்சம்" எனலாம். தற்காலத்தில் மக்கள் பெருக்கம் அதிகமானதால் புதைப்பதற்கு இடமின்றி மின் எரிமேடையில் எரித்து விடுகின்றனர். பெரும்பாலான நகரங்களில் இன்று நிலவிவருவதை அனைவரும் உணர்வர்.

### 3.40 கல் நடுதல்

வீரராக இறந்தோர்க்குக் கல் நடும் வழக்கம் – "நடுகல்" நாட்டும் வழக்கம் அன்று பெருவழக்கமாகும்.

> "காட்சி, கால்கோள், நீர்ப்படை, நடுகல்
> சீர்த்தகு சிறப்பின் பெரும் படை வாழ்த்தல் என்று
> இரு மூன்று வகையின் கல்லொடு புணர"[124]

என்று நடுகல் நாட்டும் பழக்கத்தின் பல்வேறு நிலைகளைத் தொல்காப்பியனார் சுட்டியுள்ளார். கல் நடுதல் தொடர்பாகப் பல்வேறு பழக்க வழக்கங்கள் உருவாகியுள்ளன. கல்லில் இறந்தோர் பெயரைப் பொறித்தலும், அவருடைய அருஞ் செயல்களை எழுதுதலும், பின்னர் அக் கல்லுக்கு மயிலிறகு, மலர்களைச் சூட்டுதலும், கள், பாற் சோறு படைத்தலும், பூவும் நெல்லும் தூவி வழிபடுதலும் நடுகல் வழிபாட்டு முறையாகும். நடுகல்லின் மீது வெண்மையான துணியினால் பந்தல் இடுவதும் உண்டு[125].

இன்றும் ஒருவர் இறந்த பதினாறாம் நாளில் செய்யப்படும் இறுதிச் சடங்கில், "கல் எடுத்து" வழிபாடு செய்து, பிறகு ஆற்று நீரிலோ, குளத்து நீரிலோ அதனை விட்டுவிடுவது வழக்கமாகும். இதனைக் "கல்லினைத் தண்ணீரில் வீழ்த்துதல்" என்பர். பண்டைய நடுகல் வழிபாட்டு முறை, பல்வேறு மாற்றமுற்றும் பெயரளவிற்கு இன்றும் பின் பற்றப் படுவதை அந்த வழக்கம் நினைவு படுத்துகிறது.

இந்த நடுகல் வழிபாடு, பிற் காலச் சோழர் காலத்தில் இறந்தோரை அடக்கம் செய்த விடத்தில் எழுப்பப்பட்ட கோயில் வழிபாடாக மாறியது. இத்தகைய நினைவுச் சின்னக் கோயில்களைப் "பள்ளிப்படை" என்பர்[126]. வடமொழியில் அதிட்டானம் என்பர். சங்க காலத்திற்குப் பிறகு, வீரர்களுக்குச் சிறப்பாகப் போரில் உயிர் நீத்த அரசர்களுக்கும், பொதுவாக அறவாழ்வு நடத்தி மறைந்த சான்றோர்களுக்கும், சித்தர்களுக்கும்,

ஞானிகளுக்கும் அவர்களுடைய உடல் அடக்கம் செய்யப்பட்ட இடங்களில் நினைவுச் சின்னங்களாகக் கோயில்கள் எழுப்பப்பட்டுள்ளன. இன்றைக்கும் புதைக்கும் பழக்கம் உள்ள சமூகத்தினர், புதைத்த இடத்தில் "சமாதி" அமைத்து, அதன் மீது சிவலிங்கத்தை நாட்டி, வழிபாடு செய்கின்றனர்.

இன்று சிறப்புற்று விளங்கும் தமிழகத்தின் சிவனோடு தொடர்புடைய திருக் கோயில்கள் பல, இவ்வாறு அமைந்தனவாகத் தோன்றுகின்றன. தில்லைச் சிற்றம்பலத்தில் நடராசர் திருக்கோயில் திருமூலர் சமாதியை ஒட்டி எழுப் பப்பட்டதாகத் தெரிகிறது. நடராசருடைய திருக்கோயிலின் உள்ளே, இடப்பக்கத்தில் "திருமூலட்டானேசுவரின்" கோயில் ஒன்று உள்ளதையாவரும் அறிவர். அங்குச் சிவலிங்கம் இருப்பதைப் பார்க்கலாம். இதனையே திருமூலர் சமாதியாகக் கூறுவர்.

இன்றைக்குப் பழனியில் உள்ள பழனியாண்டவர் கோயில் உலகப் புகழ் பெற்றுள்ளது. அம் மலையடிவாரத்தில் உள்ள ஊருக்குச் சங்க காலத்தில் "ஆவிநன்குடி" என்பது பெயராகும். அங்கு ஒரு முருகன் கோயில் இருக்கிறது. சங்க காலத்தில் அக் கோயிலே சிறப்புற்று விளங்கியது.

இன்றைய பழனி மலை சங்க காலத்தில் பொதுனி என்றும், இடைக்காலத்தில் "சித்தன் வாழ்வு" என்றும் போற்றப்பட்டது. இன்றைய தண்டபாணி சாமித் திருக்கோயில், ஒரு சித்தருடைய சமாதியின் மீது எழுப்பட்டதாகும். இங்கு வழிபாடு செய்யப்படும் "பழனியப்பன்" ஒரு மாபெரும் துறவிக் கோலத்தில் காட்சி தருவதும் இதை உறுதிப் படுத்துகிறது. மற்றும் இக் கோயிலுக்குச் சிறிது தொலைவில், போகர் என்னும் சித்தரின் சமாதி செய்யப் படும் இடமாக உள்ளதை இன்றும் காணலாம்.

இவற்றால், பதினைந்தாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த நச்சினார்க்கினியர் என்னும் புகழ்மிகு உரையாசிரியர், இம் மலையில் உள்ள கோயிலைச் "சித்தன் வாழ்வு"

என்று குறிப்பிட்டுள்ளதன் உண்மை புலனாகின்றது.

"தென்னிந்தியாவின் திருக் கோயில்களின் தோற்றமும் வளர்ச்சியும் பற்றி ஆராய்ந்த அறிஞர்களும், தமிழகத்தில் பெரும் பாலான கோயில்கள், நடுகல் நினைவுச் சின்னங்களை அமைக்கும் பழக்கத்திலிருந்து தோன்றி வளர்ந்தனவாகவே இருத்தல் வேண்டும்"[127] என்னும் முடிவிற்கு வந்து உள்ளமை இங்குக் கருதத்தக்கது.

நடுகல்லில் இறந்த வீரனுடைய வடிவத்தையும், பெயரையும், சாதனைகளையும் பொறிப்பது சங்க காலத்திய வழக்கம். பிற்கால வீரர் கற்களில் மறைந்த வீரனுடைய வடிவமும், அவனுடைய படைக்கருவிகளும், பிற பொருள்களும் செதுக்கப்பட்டுள்ளதை இன்றும் காணலாம்.

சேரன் செங்குட்டுவன், பத்தினிக் கடவுளாகிய கண்ணகியின் நினைவாக வஞ்சி மாநகரில் கோயில் – பத்தினிக் கோட்டம் அமைத்தான். கோயிலின் உள்ளே கண்ணகியின் சிலையை அமைத்துக் கடவுண்மங்கல (குடமுழுக்கு) விழா நடத்தி, பத்தினித் தெய்வ வழிபாட்டிற்கு வழி அமைத்தான் என்று சிலப்பதிகாரம் பேசுகிறது.

கண்ணகியின் சிலையைச் செய்வதற்கு இமயமலையில் கல்லினைத் தேர்ந்து எடுத்தான்; அதனைக் கங்கையாற்றில் திருமுழுக்கு ஆட்டினான்; பிறகு சேர நாட்டிற்குக் கொண்டு வந்து, அக் கல்லில், கண்ணகியின் சிலை வடித்தான்; பின்னர்ப் பத்தினிக் கோட்டத்தில் அச் சிலையினைத் தெய்வமாக அமைத்து விழாவெடுத்து, வழிபாடு செய்தான். இச் செயல்களைக் காட்சி, கால்கோள், நீர்ப்படை, நடுகல், வாழ்த்து என்னும் ஐந்து தலைப்புகளும் நடுகல் வழிபாட்டில் மேற்கொள்ளப்பட்ட செயல்முறைகள் என்பதனை, நாம் முன்னரே கண்ட தொல்காப்பிய நூற்பாவால் அறிகிறோம்.

இவற்றை எல்லாம் ஒருங்கு இணைத்து நோக்குகின்ற பொழுது உருவ (விக்கிர) வழிபாடும், திருக் கோயில் வழி பாடும் சங்க காலத்தில் போற்றிப் பின்பற்றிய நடுகல்

வழிபாட்டில் இருந்தே தோன்றி, வளர்ந்து, சிறந்து பல்லவர் – நாயன்மார், ஆழ்வார்கள் காலத்தில் திருக் கோயில் வழிபாட்டு அமைப்பாகவும் ஒரு ச.முதாய நிறுவனமாகவும் பெரு வழக்கிற்கு வந்து இருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது.

எனவே, சங்கத் தமிழரின் சமயச் சடங்குகளை ஆராய்ந்து பார்க்கும் போது அதிலிருந்து சற்று மாறி வருவதும் தெரியும். இன்றளவும் தமிழர்கள் கடைப்பிடித்து வருகின்றனர். மேலும், தமிழர்கள் இயற்கையில் ஏற்படும் எதிர்பாரா நிகழ்ச்சிகளுக்கு எல்லாம் கருத்துக்கள் கற்பித்து அப்படியே நம்பினர். இவற்றை நம்பிக்கைகள் என்பர்.

### 3.41 தமிழரின் நம்பிக்கைகள்

கண்ணால் பார்க்காமலும் அறிவு ஆராய்ச்சி செய்யாமலும் சில செய்திகள் காரண காரியம் கருதாமல் மக்களால் அவ்வாறே எற்றுக் கொள்ளப்பட்டுச் செயலாற்றப் படுகின்றன. முன்னோர் வழங்கியதை அப்படியே ஏற்றுக் கொள்வர். ஏன், எதற்கு என்ற வினாக்கள் எழுப்பப்படுவதில்லை. அவை உண்மையா, கட்டுக் கதையா எனக் கருதிப் பார்க்கப்படுவதில்லை. இயற்கையில் ஏற்படும் எதிர்பாரா நிகழ்ச்சிகளுக்கெல்லாம் கருத்துகள் கற்பித்து அப்படியே நம்பப்படும். இவற்றை நம்பிக்கைகள் என்பர். எவ்வளவு நாகரிகமுடைய சமுதாயமாய் இருந்தாலும் அச்சமுதாயத்தில் சிலராவது நம்பிக்கை அடிப்படை ஆராயாமல் சிலவற்றை ஏற்றுக் கொள்வதைப் பார்க்கிறோம். சிலருக்கு அவை மூட நம்பிக்கைகளாகத் தோன்றி அவற்றை எடுத்து விளக்கினாலும். முழுச் சமுதாயமும் அவற்றை விட்டு விடுவதில்லை. அவ்வாறு பழந் தமிழகத்தில் தமிழரும் சில நம்பிக்கைகள் கொண்டிருந்தனர்.

### 3.42 மழை வருவதாக நம்பிக்கை

இயற்கையில் கிடைக்கும் மழை பொய்ப்பதோ, இயற்கையில் இருக்க வேண்டியவை மாறிச் செயற்கையாகத் தோன்றுவதோ அரசனின் ஆட்சிக் குறையால் தான் நிகழும் என்று பண்டைத் தமிழர்கள்[128] நம்பினார்கள். வெள்ளிக்கோள் தென்திசையில்

தோன்றுதல் தீய நிமித்தமாகக் கருதப்பட்டது. வெள்ளி தென் திசையில் தங்கியதால் வயல் வறண்டது என்று நம்பினர்[129]. மைம்மீன் புகைகளோடு தோன்றினாலும், எல்லாப் பக்கங்களிலும் புகை தோன்றினாலும், தெற்குத் திசையில் வெள்ளி தோன்றினாலும் நாட்டிற்குத் தீமையுண்டாகும் என்று நம்பினர்[130]. சிலப்பதிகாரம் இக்கோள்கள் பற்றிப் பேசுகிறது[131]. இவ்வெள்ளியை வெண்மீன் எனக் கூறுவதுமுண்டு[132]. வடக்குப் பகுதியில் பிற மீன்கள் சூழ உரிய இடத்தில் இருந்தால் நல்ல மழை கிடைக்கும் என நம்பினர்[133]. எனவே, வெள்ளிமீன் நிற்குமிடத்தையொட்டி மழையும் மழையின்மையும் ஏற்படும் என்பது அவர்களுடைய நம்பிக்கை[134].

### 3.43 கிரகணம் தோன்றுவதாக நம்பிக்கை

கிரகணங்களின் உண்மையை அவர்கள் அறியவில்லை. திங்களைப் பாம்பு கௌவி வருவதாக நம்பி வந்தார்கள்[135].

### 3.44 தீது வருவதாக நம்பிக்கை

வானத்திலிருந்து ஒளியுடைய விண்மீன் குறித்த காலத்தில் விழுமானால் அரசர் போன்ற பெரிய தலைவர்கள் இறந்து படுவார்கள் என மக்கள் நம்பினர்[136].

### 3.45 பேய்கள் இருப்பதாக நம்பிக்கை

தமிழர், பேய்கள் இருப்பதாக நம்பினர். அவற்றின் இருப்பிடம், உருவம், உணவு, செயல் முதலானவை பற்றிப் பலவாறு கற்பனை செய்திருந்தனர் எனத் தெரிகிறது.

போர்க்களம், சுடுகாடு, பொது மன்றங்கள், மரங்கள் முதலான இடங்களில் பேய்கள் வாழ்ந்ததாகவும்[137], நள்ளிரவில் நடுத் தெருக்களிலும் அவை திரியுமென்றும்[138], பிளவு பட்ட காலடி, கொடிய கண், ஆட்டுக்குட்டிகளை அணியாகப் பூண்டிருக்கும் காது, அகன்ற வாய், பன்றிக் கொம்பு போன்றும் யானை நகம் போன்றும் உள்ள பற்கள்[139], நெருப்புத்

தொங்குவது போன்ற நாக்கு, குருதியைப் பூசிச் செம்பட்டையான தலை மயிர், முருங்கைக்காய் போன்ற விரல், புலவு நாற்றம் வீசும் உடல் முதலான தோற்றத்தை அவை கொண்டிருக்குமென்றும், பிணத்தின் புண்ணைத் தோண்டிக் கொண்டும் அதன் குடலைச் சுற்றிக் கொண்டும்[140] பிணத்தைத் தழுவிக் கொண்டும் கைகளை விலாப் பகுதியில் அடித்துக் கொண்டும் மகிழ்ச்சியோடு போர்க் களத்தில் அவை கூத்தாடுமென்றும்[141], குருதியைக் கொண்டு கூழ்காய்ச்சி வீரர் வாயில் ஊற்றி மகிழுமென்றும், தாமே உயிர்களைக் கொன்று தின்னாமல் பிறர் கொன்று தமக்குப் பலியாகத் தந்த பிணப் பலிகளையே அவை தின்னுமென்றும், பேய், கழுது, பூதம் முதலான பெயர்களால் கோரக் காட்சிகளை அவர்கள் கற்பனை செய்து நம்பினர்.

போரில் இறந்த வீரர்களின் மனைவியர் தங்கள் கணவன் மார் உடலைப் பெண்பேய் தழுவக் கூடாது என்று எண்ணிப் பாதுகாத்த நிலையும் உண்டு.

வேப்பந்தழையைச் செருகுதல், வெண்சிறு கடுகையோ அகிலையோ புகைத்தல், ஆம்பல் குழலை ஊதல், மணி ஓசை எழுப்புதல், காஞ்சிப் பண்பாடல் முதலான செயல்களால் பேயை நெருங்கவொட்டாமல் தடுக்கலாம் என்று அவர்கள் நம்பினார்கள்[142]. பெண்கள் காதல் நோயால் துன்புறும் போது அதை உணராமல், அவர்கட்குப் பேய் பிடித்ததாக எண்ணி அப்பேயை ஓட்டுமாறு வேலனை ஆடு வெட்டி வழிபடுவதும் உண்டு[143].

### 3.46 ஒருவர் பார்வை மற்றவருக்குத் துன்பந்தரும் என நம்புதல்

தமிழர்கள் கண்ணேறு எனப்படும் நம்பிக்கையுடையவர்கள். கண்ணினால் ஏற்படும் தீங்குகளைத் தீர்ப்பதற்காகக் குறமகள் நெய்யையும் வெண்சிறு கடுகையும் கலந்து தூவுவாள்[144]. பெண்கள் வருத்தும் அணங்குகள் தம்மை நெருங்காவண்ணம் காவலாக இருக்கும் பொருட்டு வெண்சிறு கடுகை அப்பி எண்ணெய் தேய்த்து நீராடுவார்கள்[145].

அப்போழுது அணங்குகளின் பார்வை அவர்கள் மீது விழாது போலும். நெய்யுடன் கலந்து ஒளிவிடும் சிறு வெண்கடுகாகிய விதைகளை வீடெங்கும் தூவுவதுண்டு[146]. தீங்குதரும் கண்களுக்கு மாற்றாகக் கதவு நிலைகளில் கடுகும் நெய்யும் பூசும் வழக்கம் உண்டு[147]. மதுரையிலிருந்த பெரிய வீடுகளின் கண் அமைந்திருந்த கதவுநிலைகள் பலமுறை நெய் பூசப் பட்டதால் கறுத்து விளங்கினவாம்[148]. மேலும், மதில் கதவுக்குக் காவலாக வெளிவாயிலில் தூக்கப்படும் துலாமரத்தை ஐயவி எனக் கூறினர்[149]. இம் மரத்திற்கு ஐயவி அப்பியதால் இப்பெயர் வந்திருக்கலாம். எனவே, ஒருவர் பார்வை இன்னொருவர்க்குத் துன்பம் செய்யும் என்ற நம்பிக்கை வலுவாக இருந்தது என்று உறுதியாக நாம் கூறலாம்.

### 3.47 கொல்லிப் பாவை

கொல்லி மலையின் மேற்குச் சாரலில் ஒரு பெண் பாவைப் புடைப்பு ஓவியம் இருந்தது; அது.தெய்வத்தால் சமைக்கப்பட்டது என்றும், கண்டோரை வருத்துமென்றும் நம்பினர்[150].

கொல்லிமலையிலுள்ள பாவை காற்று மோதி அடித்தாலும், மழை விரைந்து வீசினாலும், இடி மோதினாலும், உலகமே பிறழ்ந்தாலும், வேறு எந்தவித ஊறுகள் வந்தாலும் தன் அழகு கெடாமால் இருக்கும் என நம்பப்பட்டது[151].

### 3.48 மாணிக்கம்

பாம்புகள் மாணிக்கங்களை உமிழும் என்று பழந் தமிழர் நம்பி வந்தனர். காந்தள் மலர் மேல் சிறிய இறக்கைகளையுடைய தும்பி அமர்ந்திருப்பது பாம்பு உமிழும் மணியைப் போல் தோன்றியதாம்[152]. பாம்பு உமிழும் மணியிடத்து நெறுங்க அஞ்சினர் அது போல மறக் குடி மகளின் கணவனை மாற்றார் நெறுங்க அஞ்சுவராம்[153].

## 3.49 நிமிர்த்தம் பார்த்தல்

பரிசில் பெறச் செல்லும் போழுது கூத்தர்கள் நிமித்தம் பார்த்தார்கள்[154]. புலவர்கள் பரிசில் பெற வள்ளல்கள் பால் செல்வதுண்டு. அப்பொழுது வள்ளல்கள் வழங்காமையும் உண்டு. அதற்காக புலவர்கள் அவர்களை பழிப்பதில்லை. ஆனால், அவ்வாறு ஏற்பட்டமைக்குத் தம் வழியிடத்தே கண்ட புள் நிமித்தத்தையும் பொழுதையுமே பழித்தார்கள்[155].

பறவைகளின் நிமித்தமே புள் எனப் பேசப்படுகிறது. ஓணானும் நிமித்தப் பொருளாகக் கருதப்பட்டது. முதிய ஓணானைப் பாலை நிலத்தில் காண்பர். அதனை நிமித்தமாகக் கொண்டுள்ளனர்[156]. தலைவரைப் பிரிந்து வருந்தும் மகளிர் தலைவர் வருவர் என்பதற்குரிய நல்ல நிமித்தங்களை எதிர்பார்த்து நிற்பராம்[157].

விரிச்சி என்பது நற்சொல் கேட்பதாம். ஏதோ ஒரு செயலைப் பற்றி எண்ணிக் கொண்டு இருக்கும்போதோ செய்யும்போதோ யாரோ ஒருவர் தாம் அறியாமல் பேசிப்போகும் சொற்கள் நலமோ தீதோ காட்டும் குறிகளாகும். பக்கத்து வீட்டுப் பெண் ஒருத்தி வேறு ஏதோ ஒரு பெண்ணுடன் உரையாடிக் கொண்டிருந்தாள். அவ்வாறு உரையாடிக் கொண்டிருக்கும் போது "அவன் இப்பொழுது வருவான்" என்று கூறினாள். அப்பேச்சை நல்ல் விரிச்சியாகக் கொண்டு தோழியானவள் தலைவியிடம் "நம் தலைவரும் விரைவில் வருவார், வருந்தற்க" என்று கூறி "அவ்வாறு விரிச்சி சொன்ன அந்தப் பெண் அமுதம் உண்பாளாக" என்று புகழ்ந்து வாழ்த்தினாள்[158].

திருந்திய நகைகளை அணிந்த மகளிர் நிற்பதே ஒரு நல்ல விரிச்சி[159] முதிய பெண்கள் நெல்லும் நீரும் சொரிந்து விரிச்சி கேட்பது வழக்கம்[160]. தலைவன் பிரிந்துள்ளான், அவன் வருகையை எதிர்பார்த்து நிற்கின்றார்களாம். வண்டுகள் மகிழ்ந்து ஆர வாரிக்குமாறு நறிய பூக்களைக் கொண்ட முல்லை அரும்புகள் அவிழும் நேரம். அப்பொழுது நற்சொல் கேட்போர் முல்லைப் பூக்களுடனே நெல்லைத் தூவித் தெய்வத்தை வணங்கி நிற்பார்கள்.

ஆய்மகள் ஒருத்தி தோளில் சட்டிய கையளாய், கட்டப் பட்டிருக்கின்ற கன்றின் பசித் துன்பத்தைப் பார்த்து நிற்கிறாள். அப்பொழுது அவள் "இடையர் செலுத்தத் தாய்மாராகிய பசுக்கள் நிரம்ப மேய்ந்து இப்பொழுது திரும்பும்" எனக் கூறுகிறாள். இச்சொற்களைக் கேட்டதும் "தலைவர் வெற்றி சூடி வினை முடித்து வருவர்" என நற்சொல் கேட்க நின்ற பெண்கள் தலைவியைத் தேற்றிப் பேசுவார்கள்[161]. தலைவன் வருகை குறித்து விரிச்சி கேட்கமாட்டோம் எனக் கூறும் பெண்களுமுண்டு[162].

பெண்கள் தம் கைகளிலுள்ள வளைகள் இறுகினால் அதனை நல்ல நிமித்தமாகக் கருதினார்கள்[163]. மயிர் விளங்குகின்ற முன்கையிலுள்ள வளைகள் நெருங்குகின்றன. அதனால் மலை நாட்டான் சீக்கிரம் வருவான் என அவர்கள் நம்பினர்[164].

சில நிகழ்ச்சிகள் தீய நிமித்தங்களாய்த் கருதப்பட்டன. தும்பிகள் நடுப்பகலில் பறப்பது, விளக்குகள் இரவில் நில்லாமை, கூகைகள் குழறல், பெருந்தூக்கம் வருதல் ஆகியவை தீய நிமித்தங்களாகக் கருதப்பட்டன[165]. ஆகாயத்திலிருந்து விண்மீன் தீப்பரக்க வீழ்ந்தால் உலகாளும் மன்னன் மடிவான் என விண்மீன் வீழ்தலைத் தீய நிமித்தமாகக் கருதினார்[166].

### 3.50 கனவில் நம்பிக்கை

கனவில் காணும் சில காட்சிகளும் கெட்ட நிமித்தங்களாகும் என்று நம்பினர். எட்டுத் திக்குகளிலும் எரிகொள்ளியானது எரிந்து வீழ்தல் போல் காணுதல், பெரியமரத்தில் இலையில்லாத பெரிய கொம்பு, வற்றல் பற்றி எரிதல் போல் பார்த்தல், வெம்மைத் தன்மையுடைய ஞாயிறு பல இடத்தும் நெருங்கித் தோன்றுமாறு காண்டல், பயப்படத்தக்க பறவைகள் குரல் எடுத்து ஒலிப்பது போல் பார்த்தல், பற்கள் நிலத்தின் மீது விழுவது போல் காணுதல், மயிரிடத்து எண்ணெயை வார்த்தல் போல் பார்த்தல், பன்றி மீது ஏறுதல் போல் பார்த்தல், ஆடைகளைக் களைவது போல் நோக்குதல் ஆகியவற்றைக் கனவில் கண்டாலும் தீய நிமித்தங்களாகவே கொண்டார்கள். அவ்வாறு கனவில் கண்டவர்களுக்குத் தீங்கு விளையும் என நம்பினார்கள்[167].

இதைப்போன்றே, மலையில் கிடைக்கும் மணியையும், கடலில் கிடைக்கும் ஒளிமிக்க முத்தையும், வேறுபட்ட உடையையும், கள் குடத்தையும் கனவில் கண்டால் அதற்காக மக்கள் வருந்துவார்கள்[168].

கண்ணகி கண்ட தீய கனவைப் பற்றி இளங்கோவடிகள் கனாத்திற முரைத்த காதையில் விரித்துரைத்துள்ளார். தன் கைப்பிடித்த கணவனோடு கண்ணகி ஒரு பெரிய நகருக்குச் சென்றதாகக் கனவு கண்டாள். அவ்வூரில், அவள் கணவன் மீது, ஒரு பழி சுமத்தப்பட்டதாம். அதையொட்டிக் கோவலனுக்குத் தீங்குண்டானதைக் கேட்டு, கண்ணகி அரசனிடம் வழக்குரைத்த தாகவும் அவள் கூறுகிறாள். பின்னர் நடக்கப் போவதையே அவள் கனவு கண்டதாக ஆசிரியர் வருணிக்கிறார். அக் கனவைக் கண்ட அவள் உள்ளம், அச்சமும் ஐயுறவும் கொண்டதாகத் தெரிகிறது[169].

இளங்கோவடிகள், அரசனுடைய செங்கோலும் வெண்கொற்றக் குடையும் நிலத்தில் விழுந்ததையும், அரண்மனையின் தலைவாயிலில் உள்ள மணி நடுங்கியதையும், இரவில் வானவில் தோன்றியதையும், பகலில் விண்மீன் விழுந்ததையும். எங்கும் காரிருள் சூழ்ந்ததையும், நான்கு திசைகளும் அதிர்ச்சியுற்றதையும், பாண்டிமாதேவி கனவில் கண்டதனால், யாதோ துன்பம் உண்டாகப் போகிறது என்று அவள் அஞ்சியதாகவும் அவர் குறிப்பிடுகிறார்[170].

இவை பண்டைத்தமிழர் கனவில் கொண்டிருந்த நம்பிக்கையை எடுத்துரைக்கின்றன.

### 3.51 பல்லி சொல்லில் நம்பிக்கை

பல்லி சொல்லுவதையும் நிமித்தமாகக் கொண்டனர். ஒரு பன்றி பல்லி சொல்லுவதைக் கேட்டுத் தீமையுண்டாகும் என்று கருதி அச்செயலைவிட்டுத் தீங்கிலிருந்து தப்பியதாம். பன்றியாகிய விலங்கும் நிமித்தம் பார்க்கும் என நம்பியுள்ளனர், அந்தக் கால மக்கள். பல்லி சொல்லுதலுக்குரிய பலன்களை இக்காலப்

பஞ்சாங்கமும் கூறும். இந்தப் பலன்களைக் கவனிப்பவர்கள் இன்றும் உள்ளனர் பலர். சிறிய கண்களைக் கொண்ட பன்றி, முள்ளம் பன்றியின் முட்களைப் போன்ற பருமனான மயிரையுடைய பிடரைக் கொண்டது. தினைக்கதிர் மேயச் சென்று கொண்டிருந்தது. அங்கே வரும் விலங்குகளைத் தடுப்பதற்காக அங்குள்ள மக்கள் அவற்றைப் பிடிப்பதற்காகப் பொறிகளை அமைத்து இருந்தனர். அந்தப் பன்றி, அதை அறியாமல் பொறி வைத்திருக்கும் வழியில் போகத் தொடங்கியது. அப்பொழுது பல்லி இடைவிடாது ஒலித்தது. அதைக் கேட்ட பன்றி அவ்வழியில் போனால் கெடுதல் வரும் என எண்ணிப் பின்னாலேயே சென்று தன் இருப்பிடத்தை அடைந்தது[171]. இவ்வாறு நற்றிணைப் பாடல் ஒன்று மனிதரின் நம்பிக்கையை விலங்கின் மீது ஏற்றி அழகாகச் சுவைபடக் கூறுகிறது.

பொருள் திரட்டுவதற்காகத் தன் மனைவியை விட்டுப் பிரிந்துள்ளான் தலைவன். அவன் வரவை அவளும் அவள் தோழியும் எதிர்பார்த்து நிற்கிறார்கள். அப்பொழுது நல்ல நிமித்தங்கள் ஏற்படுவதாகத் தோழி கூறுகிறாள். நீண்ட சுவரிலிருக்கும் பல்லி நம் பக்கமாக இருந்து தெரிவிக்கிறது என்கிறாள்.

மேலும், வீட்டிலுள்ள நொச்சிவேலி கொண்ட தோட்டத்தில் மாமரத்திலிருந்து கொண்டு கரிய குயில் கூவுகிறது. ஆகையால் தலைவன் வரும் காலம் இது எனக் கூறுகிறாளாம்[172]. இதேபோல, தலைவன் வருவான் என்பதற்கு நன்னிமித்தமாகச் சுவரிலுள்ள பல்லி சொல்லுவதாக நம்பினர்[173]. மேலும், தலைவர் வரவைப் பல்லியின் நல்லொலி காட்டும் எனக் கலித்தொகையும் சொல்கிறது. அதனோடு இணைந்தாற்போல் அந்த நல்ல ஒலியுடன் இன்னொரு நிமித்தமும் நன்மையாய் முடியும் என்பதைக் காட்டுவதாக அப்பகுதி தெரிவிக்கிறது. தலைவியின் இடக் கண்ணும் ஆடுகிறதாம். அதனால் தலைவன் வருவது உறுதி என்பதே அப் பகுதியாம்[174]. அகநானூறும் பல்லியின் சொல் பற்றிக் குறிக்கிறது[175]. எனவே, பல்லி சொல்லுக்குப் பயனுண்டாகுமென்று பழந்தமிழர் சமுதாயம் நம்பியது எனக் கூறலாம்.

இடக் கண் துடித்தால் நலம் வரும் என்ற நம்பிக்கையைக் கலித்தொகை மட்டுமன்றி ஐங்குறுநூறும்[176] தெரிவிக்கின்றது. எனவே, உடலில் ஏற்படும் மெய்ப்பாடுகளையும் நிமித்தங்களாகக் கொண்டனர் எனக் கொள்ளலாம். கண்ணகியின் கருங்கண்ணும் மாதவியின் செங்கண்ணும் இடத்திலும் வலத்திலும் துடித்ததாக இளங்கோவடிகள் குறிப்பிடுகிறார்[177]. இதனால், பெண்களுக்கு இடப்பக்கம் துடித்தால் நன்மையும் வலப்பக்கம் துடித்தால் துன்பமும் உண்டாகும் என்னும் மக்களுடைய நம்பிக்கை புலனாகின்றது.

### 3.52 காக்கை கரைவதில் நம்பிக்கை

காகத்திற்கு உணவு உண்ணுவதற்கு முன் உணவிடும் பழக்கம் இன்றும் ஊர்ப் புறங்களில் காணலாம். அதிலும் சிறப்பாக ஈமச் சடங்குகள் செய்த பின் காகத்திற்கு உணவிடுவது இன்று, தமிழகச் சிற்றூர்களில் காணப்படும் ஒன்று. பொதுவாகக் காக்கைக்கு உணவிடும் பழக்கம் பழந்தமிழகத்தில் இருந்தது எனக் கூறலாம். தென்னை மரங்கள் நிறைந்த தோப்புகளில் வாழும் மக்கள் தந்த செஞ்சோற்றுப் பலியைக் கறுப்பான காகம் உண்ணும் எனப் பொருநராற்றுப்படை கூறுகிறது[178]. வெண்ணெல் அரிசியால் ஆக்கிய சோற்றுடன் பசுநெய் கலந்து கலங்களில் காக்கைக்குத் தருவதுண்டு[179].

காக்கை கரைவது விருந்தினர்களின் வரவைத் தெரிவிப்பதாகும் என நம்பினார்கள். விருந்தினர் வரும்படி கரைதலைச் செய்த காக்கை என்னும் பொருள்படும்படி குறுந்தொகையில் விருந்து வரக் கரைந்த காக்கையது பலியே[180] என்னும் வரி கூறுகிறது. இப் பாடலைப் பாடிய புலவர் பெயர் காக்கை பாடினியார் நச்செள்ளையார் என்பதாம். காக்கையைப் பாராட்டியதால் கிடைத்த சிறப்புப் பெயர் போலும்.

ஒரு பெண் தன் காதலனுடன் பெற்றோர்க்கும் தெரியாமல் உடன்போக்குப் போய்விட்டாள். எனவே, அப் பெண்ணின் தாய் காகத்தைக் கரையும் படி வேண்டுவதாக

ஐங்குறுநூற்றில் ஒரு பாடல் காணப்படுகிறது[181]. நல்ல இறக்கைகளையுடைய சிறிய கருமை நிறமுடைய காக்கையே, அன்பையும் முறைமையையும் உடைய உன் உறவினருடன் நீ உண்ணும் பொருட்டாக ஊன் பெய்த உணவைப் பொற்பாத்திரத்தில் வைத்துக் தருவேன், மிக்க சினமுடைய வெற்றி வேலையுடைய காளையோடு சென்ற அழகான கூந்தலையுடையாளை வருமாறு கரைவாயாக என்று வேண்டுகிறது தாயுள்ளம். ஆகவே, காகம் கரைந்தால் விருந்தினர் வருவர் என்ற நம்பிக்கை பழந்தமிழகத்திலிருந்தது என்பது உறுதிப்படுகிறது.

### 3.53 மரங்களில் தெய்வத் தன்மை உள்ளதாக நம்பிக்கை

மரங்களில் கடவுள் தங்கியுள்ளார் எனப் பழந்தமிழர் நம்பினர். அன்றில் பறவை இணையாகப் புணர்ந்து வாழும் ஊர்ப் பொது விடத்திலுள்ள பனைமரத்தில் கடவுள் தங்கியுள்ளதாக நற்றிணை[182] கூறுகிறது. ஊர் முகப்பிலுள்ள பொய்கை அருகிலுள்ள முதிய மரத்தில் கடவுள் தங்கியுள்ளதாகவும் அதே நூல் குறிக்கிறது[183]. பறவைகள் நேற்றுத் தின்றோமே என்று எண்ணாமல் மீண்டும் மீண்டும் ஆல மரத்திடம் செல்கின்றன என்றும், அந்த ஆலமரத்தில் கடவுள் உறைகின்றார் என்றும் பெரும்பதுமனார் புறநானூற்றில் பாடுகிறார்[184].

### 3.54 கற்சுனைகளில் கடவுள் உள்ளதாக நம்பிக்கை

மலைகளிலுள்ள கற்சுனைகளிலும் கடவுள் தங்கியுள்ளார் என நம்பியுள்ளனர் போலும். கடவுள் கற்சுனை என நற்றிணை பேசுகிறது[185]. மேலும், வாகை மரத்தைப் பற்றிக் குறிப்பிடும் போது கடவுள் வாகை எனப் பதிற்றுப்பத்துக்[186] குறிக்கிறது. ஆகவே, மரங்கள் சிலவற்றிலும் கற்சுனைகளிலும் கடவுள் தங்கியுள்ளதாக நம்பி வந்தார்கள் என எண்ணலாம்.

## 3.55 உடற்குறைகளும் தீவினையும்

மக்களுள் சிலர் ஊனமுடையவர்களாய்ப் பிறக்கிறார்கள். குருடு, வடிவில்லாத தசைத்திரள், கூன், குறள், ஊமை, செவிடு, மா, மருள் என எட்டு வகையாகப் பழந்தமிழர் அந்தப் பிறப்பைப் பிரித்தும் பேசினர். இவ்வகையான பிறப்பைக் குறையாகக் கருதினார்கள். இவற்றைப் பேதைமைப் பிறப்பு என்றும் பயனில்லாத பிறப்பு என்றும் எண்ணினார்கள்[187], அறம் செய்தால் இவ்வகையான பிறப்புகள் வரமாட்டா என நம்பினார்கள்.

## 3.56 சாவாமூவாப் பெருவாழ்வு

அதியமான் நெடுமான் அஞ்சி என்னும் வள்ளலுக்கு ஒரு நெல்லிக்கனி கிடைத்தது. அதை அவன் ஔவையார் என்னும் புலவர்க்குத் தந்தான். அவ்வாறு அவன் தந்தமைக்குரிய காரணம் கவனிக்கத்தக்கது. அந்த நெல்லிக்கனியை உண்டவர்கள் நஞ்சுண்ட கண்டன்போல என்றும் இறவாமல் இருப்பார்களாம்[188]. எனவே, சிவன் நஞ்சுண்டமையும் சாகாமல் வாழலாம் என்பதையும் நம்புவதோடு நெல்லிக்கனி தின்றால் சாகாமல் இருக்கலாம் எனவும் நம்பியுள்ளனர் என்பது தெரிகிறது. உலகில் மக்கள் சாகிறார்கள். ஆனாலும் சிலருக்கு மட்டும் சில ஊர்திகளில் போவதற்கும், சில இடங்கட்கும் வாய்ப்புக்கிட்டுமாம். புலவர்களால் பாடப்படும் புகழைப் பெற்றவர்கள் பொதுவான மக்களைப் போல் அல்லாமல் ஓட்டுபவரில்லாத வான ஊர்திகளில் இறந்த பின் செல்வர்கள் என முது கண்ணன் சாத்தனார் கூறுகிறார்[189]. எனவே, புலவரால் புகழப்படுவோர் (இறந்த பிறகும்) தனிச் சிறப்புப் பெறுவர் என நம்பினார்கள எனத் தெரிகிறது.

## 3.57 குறியார்த்தல்

இப்பழங்காலத்தில் குறிப்பார்க்கும் பழக்கம் மிகுதியாக இருந்தது என்பதை அகப் பொருள் இலக்கியங்கள் தெரிவிக்கின்றன. தன் பெண் காம நோய் உற்றதை அறியாத தாய், அந்த நோய் வந்ததற்குக் காரணம் என்ன என்று அறியும் பொருட்டுக் கட்டுவிச்சியை அழைத்துக் கட்டுப்பார்ப்பது உண்டு. முறத்தில் நெல்லையிட்டு அதனை எண்ணி அதிலிருந்து சில நிமித்தங்களை உண்டு பண்ணிக் கொண்டு இந்தப் பெண் முருகனால் அணங்கப்பட்டாள் எனக் கூறுவது வழக்கம். சில நேரங்களில் கட்டுவிச்சியர் சிலர் தெய்வமேறிக் குறி சொல்லுவதும் உண்டு. இக் கட்டுவிச்சியர் தெய்வமேறிக் குறி சொல்லுவதும் உண்டு. இக்கட்டுவிச்சியரைக் குறுந்தொகை சங்கு மணியாலாகிய கோவையைப் போன்ற வெண்மையாகிய நல்ல நீளமான கூந்தல் கொண்ட அகவல் மகள்[190] எனக் கூறுகிறது. ஆகவே, பெரும்பாலும் கட்டுவிச்சியர் நரையையுடைய முதிய பெண்கள் எனக் கருதலாம்.

தலைவன் பிரிந்தால் தலைவியின் நெற்றியில் பசலை படர்ந்தது. அதைக் கண்ட தாய் உடனே செம்மையும் முதுமையுமுடைய கட்டுவிச்சியின் இல்லத்திற்குச் சென்றாள். அவள் முறத்தில் நெல்லைப் பரப்பிக் கட்டுவித்தாள். தலைவியை அவள் எதிரில் நிறுத்தச் செய்து பிறகு குறிகேட்டாளாம்[191]. இவ்வாறு குறிகேட்கும் வழக்கம் அக்காலத்தில் இருந்தது. நெல் எண்ணிக் கையையொட்டி "இது முருகணங்கு, இது பிற அணங்கு" எனக் கூறுவர் போலும். தன் பெண்ணின் முக மலர்ச்சி குறைந்ததைக் கண்டு மற்றொரு தாய் கட்டுவிச்சியிடம் சென்று வேண்டினாள். அப்பொழுது கட்டுவிச்சி அரிசியைப் பரப்பி வைத்துப் பார்த்து அது முருகனால் வந்த நோய் எனக் கூறினாள்[192].

## 3.58 தெய்வமேறியாடுதல்

பழங்காலத்தில் வெறியாடிச் சொல்வதை நம்பினர். இவ் வெறியாட்டு அக் காலத்தில்

பெரு வழக்காய் இருந்தது[193]. வெறியாடுவோர், அதற்குரிய முறைகள் முதலியவை பற்றி விரிவாகச் சமயம் பற்றிய இயலில் கூறப்பட்டுள்ளன. கையில் வேலைக் கொண்டு கூத்தாடி ஒருவன் முருகனை வாழ்த்தி விளிப்பான். அதனால் அவன் வேலன் எனப்பட்டான். துன்பங்களுக்குக் காவலாக உள்ளவன் முருகனே என நம்பி அவனை வேலன் வேண்டுவான்[194]. ஐங்குறுநூறு என்னும் இலக்கியத்தில் வெறிப்பத்து என்னும் ஒரு பகுதி உள்ளது. இப் பகுதி வெறியாட்டின் செய்திகளை நன்கு விளக்குகிறது, பெண்ணுக்கு ஏற்பட்ட மெலிவுக்குக் காரணம் முருகக் கடவுள் எனக் கூறுவான் வேலன்[195]. எனவே, தெய்வமானது எவரிலேனும் வெளிப்பட்டுத் தோன்றித் தான் கூற வேண்டியதைக் கூறும் என்று அக்கால மக்கள் நம்பினார்கள் என நாம் உறுதியாகக் கூறலாம்.

### 3.59 மகளிர் நம்பிக்கை

கன்னிப் பெண்கள் பலர் கூடி வேங்கை மரத்தின் அருகில் நின்று கொண்டு "புலி, புலி" எனக் கூவினால் வேங்கை மரம் தாழ்ந்து அதன் பூக்களை அப் பெண்களுக்குத் தரும் என அக்கால மக்கள் நம்பினர்[196]. அவ்வாறு மகளிர் "புலி, புலி" எனக் கூறியதைக் கேட்ட ஆண் மகன் ஒருவன் உண்மையான புலிதான் வந்துவிட்டதோ என எண்ணிப் பாதுகாக்க அங்கு வந்ததாக நகைச் சுவையுடன் அச்செய்தி கூறப்படுகிறது. மேலும், மகளிர் வேங்கைப் பூக்களைச் சூடுவதற்கு விரும்பி அவற்றைப் பறிப்பதற்காக வேங்கை மரத்தினருகில் சென்று அவை எட்டாமையால் அவற்றை வளைத்துக் கொடுக்குமாறு செய்வதற்குப் "புலி, புலி" என்ற ஓசை செய்து கொண்டிருந்தனர்[197]. இவ்வகையான நிலைகளில் இருந்து நம்பிக்கை கொண்ட நம் தமிழ் மக்கள் காலப் போக்கில் ஜாதகம் பார்த்தல், கைரேகைப் பார்த்தல், நாடிப் பார்த்தல் போன்ற சோதிடங்கள் இவ்வகையிலிருந்து வந்ததாக நம்மால் உணரமுடிகிறது. எனவே, தமிழரின் நம்பிக்கைகள் முற்றிலும் நம்பகத் தன்மையாக இன்று வரையிலும் நிலைத்திருப்பதைக் காண முடிகிறது. எனவே, இன்றும் கிராமப்புறங்களில் இவ்வகையான நம்பிக்கைகள் இருப்பதைக் காண முடிகிறது. அவை ஆணையிடுதல், தீர்த்தமாடுதல், பூக்கட்டிப் பார்த்தல்,

நோன்பிருத்தல், பிரசாதங்களை அணிதல்.

### 3.60 ஆணையிடுதல்

இதனைச் "சத்தியம் செய்தல்" என்றும் சுட்டுவர். ஒருவர் பொய்யாக ஆணையிட்டால் தெய்வம் அவரைத் தண்டிக்கும் என்று நம்புகின்றனர். வாய்மொழியாகவே குல தெய்வத்தின் பேரில் ஆணையிடுவதும் உண்டு. பெரும்பாலும் ஆணையிடுவதனை மும்முறை செய்வர். தெய்வத்தின் முன்னிலையில் உள்ள கம்பத்தைத் தொட்டு ஆணையிடுவதையும். தன் தலைமீது அடித்து சத்தியம் செய்வதை நாட்டுப் புறப்பாடல்கள் தெரிவிக்கின்றன.

### 3.61 தீர்த்தமாடுதல்

ஏனைய நீர் நிலைகளைவிட கோவில் அருகில் உள்ள நீர் நிலைகள் புனிதமானவை என்றும், அவற்றில் நீராடுபவர் நன்னிலை பெறுவர் என்றும் கிராமப்புற மக்கள் நம்புகின்றனர். இவ்வாறு நீராடுவதனைத் "தீர்த்தமாடுதல்" என்பர். குற்றால அருவியிலும், காசியில் ஓடும் ஆற்றிலும் நீராடுவது பாவம் நீங்குவதாக நம்பினர்.

### 3.62 பூக்கட்டிப் பார்த்தல்

ஒரு வினையை நிகழ்த்துவதற்கு முன்னர் அவ்வினையின் விளைவுகளைத் தெய்வத்திடமே அறிந்து கொள்ளும் முயற்சி இது. வெள்ளை, சிவப்பு ஆகிய மலர்களை இரு பொட்டலங்களில் கட்டி இறைவன் சன்னதியில் போட்டு ஒன்றையெடுத்து தம் கருத்தினை உறுதி செய்வதனைப் "பூக்கட்டிப் பார்த்தல்" என்பர். இவ்வழக்கம் அம்மன் கோயில்களில் மிகுதி என்பர்.

### 3.63 நோன்பிருத்தல்

குழந்தைப்பேறு இல்லாத பெண்கள் பிள்ளைவரம் வேண்டித் தெய்வத்தை எண்ணி நோன்பிருத்தல் உண்டு. அரசமரம் அல்லது வேப்பமரம் வைத்து தவமிருப்பதை ஒப்பாரிப் பாடல்கள் உரைக்கும். குளித்த பின்னர் ஈரத்துகிலுடன் தவம் இருப்பதனைத் தாலாட்டு பாடல் தெரிவிக்கின்றது. வெள்ளிக்கிழமை தோறும் நீராடி மிளகு மென்று தவமிருப்பதையும் அரசமரத்தைச் சுற்றுவதையும் நோன்பாகக் கருதுகின்றனர்.

### 3.64 தெய்வ பிரசாதங்களை அணிதல்

கோவில்களில் தெய்வத்தின் நினைவாக நம் முடம்பில் அணிந்து கொள்வதற்கு ஏற்ற வகையில் கொடுக்கும் பொருட்களைப் "பிரசாதங்கள்" என்பர். சிறு தெய்வம், பெருந்தெய்வம் என இருவகைத் தெய்வங்களின் கோயில்களில் திருநீறு கொடுக்கும் வழக்கமுண்டு. அம்மன் கோயில்களிலும் பெரிதும் குங்குமம் கொடுப்பர். திருமால் கோயில்களில் துளசி கொடுக்கும் வழக்கமுண்டு. சந்தனமும் பூக்களும் கொடுப்பதை நாட்டுப்புற பாடல்கள் நவில்கின்றன.

இவ்வாறு தமிழ் மக்கள் பல வகை நம்பிக்கைகளை சமயத் தொடர்பாக கொண்டிருக்கிறார்கள். அத்துடன் வாழ்வில் உறவு முறை செழிக்க பல்வேறு நம்பிக்கையைக் கொண்டவர்களாக வாழ்கின்றனர்.

தமிழர்கள் பிறப்பு முதல் இறப்பு வரை நடைபெறும் சடங்குகளை இருவகையாகப் பிரித்தனர். குடும்பத்தில் நடைபெறும் சடங்குகளை மங்கலம், அமங்கலம் என இரண்டாக பகுக்கலாம். பிறப்பு சடங்குகளும், பெண்கள் பருவ முற்ற காலத்தும் கருவுற்ற காலத்தும் நடைபெறும் சடங்குகளும் மங்கல சடங்குகள் ஆகும். இறந்தவர்க்காக நடைபெறும் சடங்குகள் அமங்கலச் சடங்குகளாகக் கருதப்படுகின்றன. இச்சடங்கு முறைகளை நாட்டுப்புற இலக்கியங்கள் மூலமாகத் திரட்டிய செய்திகளாகும்.

### 3.65 குழந்தை பிறப்பு சடங்குகள் – பெயர் சூட்டல்

குழந்தை பிறந்து 15 அல்லது 22 நாட்களுக்கு பின்னர் பெயர் சூட்டும் நாளன்றுதான் தாயின் தீட்டு கழிகின்றது என நம்புகின்றனர். அந் நாளில் வீட்டைத் தூய்மையாக்கி, சுவருக்குச் சுண்ணமிட்டு, தாயையும் பிள்ளையையும் குளிப்பாட்டி புத்தாடை அணிவித்து விடுவர். உறவினர்கள் பரிசுகளை அளிப்பர். இறுதியில் சிறு விருந்துடன் இச் சடங்கு முடிவதுண்டு. சங்கினை உரைத்து குழந்தையின் நாவில் வைத்து சங்கரன் என்றும், காது குத்தும் போது கந்தன் என்றும் பெயரிடுவது வழக்கம். இச்சடங்கில் குழந்தையின் தாய் மாமனுக்குத் தான் முதலிடம் கொடுப்பதாக உறவு முறைகளில் கூறப்படுகிறது.

### 3.66 காதுகுத்தல்

அழகான குழந்தைகளைக் கண்டு எமன் ஆசைப்படுவான் என்றும், காது குத்துவதன் மூலம் அவனை ஏமாற்றி விடலாம் என்றும் மந்திரவாதத்தின் அடிப்படையில் நம்புகின்றனர். எனவே, குழந்தை பிறந்து ஓராண்டு ஆனதும் கோயில் தலங்களுக்குக் கொண்டு சென்று காது குத்துவதனை கடமையாகக் கொண்டுள்ளனர். குத்தப்பட்ட காதில் ஆண் குழந்தை என்றால் கடுக்கனும் பெண் குழந்தை என்றால் கம்மலும் அணிவர். பெரிதும் குழந்தையின் தாய் மாமனே குழந்தைக் குரிய அணிகலன்களைக் கொண்டு வர வேண்டும். அவரது மடியில் வைத்து குழந்தைக்கு மொட்டையிட்டு காதுக் குத்துவது வழக்கம். இச் செய்திகளைத் தாலாட்டும் பாடல்கள் அறிவிக்கின்றன.

இச் சடங்கில் கலந்து கொள்பவர்களுக்கும் "காதரிசியாக, எள், தேங்காய், பச்சரிசி, வெல்லம், சிறுபயிறு" ஆகியவற்றைக் கலந்து அளிக்கப்படும். ஏழையர் கம்மலுக்குப்பதிலாக கம்பி வளையத்தால் குத்திவிடுவர். காதரிசியுடன் வெற்றிலை வழங்கும் வழக்கமுண்டு.

### 3.67 தொட்டில் இடுதல்

குழந்தையைத் தூங்கச் செய்யத் தொட்டிலில் இடும் நிகழ்ச்சியை ஒரு சடங்காக்குகின்றனர். கிராமத்திலுள்ள ஆசாரியே தொட்டில் செய்து கொணர்ந்ததும் பார்ப்பனரை அழைத்து, பாக்கு, பச்சரிசி, ஏலம், தேங்காய், மலர் ஆகயவற்றைக் கொடுத்து பூசை செய்வர். இச் சடங்கில் கலந்து கொண்டவர்களுக்குச் சந்தனமும் வெற்றிலையும் வழங்குவர்.

மரத் தொட்டில் செய்யும் வழக்கம் வெகுவாகக் குறைந்துவிட்டது. இப்பொழுது குழந்தையின் தாய் மாமன் தொட்டில் காம்பும் கயிறும் துணியும் கொண்டு வருவதுண்டு, பார்ப்பனரை அழைக்கும் வழக்கம் அருகிவிட்டது.

### 3.68 பெண்கள் சடங்குள் – பூப்பு அடைதல்

பெண்கள் பருவமடைந்த பதினைந்தாம் நாளன்று நடைபெறும் இச் சடங்கினைப் "பூப்பு" "பூப்புனித நன்னீராட்டு, சடங்கு கழித்தல்" எனப் பலவாறு அழைப்பர். உறவினரையும் பார்ப்பனரையும் அழைத்து, நீராட்டி புத்தாடை அணிவித்து ஒத்திகைத் திருமணம் நடத்துவர். பெண்ணின் மாமன் சிறு வயதுடைய மகனாவது மகளாவது மாப்பிளையாக அமர்வதுண்டு. பருவமுற்ற பெண்ணுக்குத் தாய்மாமனே ஆடையும் அணிகலனும் கொண்டு வருவான். ஏழையர், பெண்ணை நீராட்டி, புத்தாடை அணிவித்து மாலையில் வேப்பிலை, சுண்ணாம்பு, மஞ்சள் ஆகியவற்றைக் கலந்து கண்ணேறு கழிப்பர். இச் சடங்கில் கொட்டுமேளம் ஒலிக்கும், சடங்கினிறுதியில் வெற்றிலை வழங்கப்படும்.

### 3.69 சீமந்தம்

கருவுற்ற பெண்ணுக்கு ஏழு அல்லது ஒன்பதாவது மாதத்தில் செய்யும் சடங்கினைச் "சீமந்தம்" என்பர். கணவனையும் மனைவியையும் ஒரு சேர அமர வைத்து பெரியவர்கள்

கூடி வாழ்த்துவர். வளைகாப்பையும் சீமந்தத்தையும் பெரிதும் இம்மாவட்டத்தார் ஒரே நாளில் நடத்தி விடுவதுண்டு. ஒரு பெண்ணுக்கு அவளது பெற்றோர்கள் செய்ய வேண்டிய சீமந்த சீர்கள் மிகுதியுமுண்டு என ஒப்பாரி கூறும். முதல் குழந்தைப் பேற்றுக்கு மட்டுமே இச் சடங்கு நிகழ்த்தப் பெறுகின்றது.

### 3.70 இறப்புச் சடங்குகள்

இறந்தவர்களுக்காகச் செய்யப் படும் சடங்குகளை இறப்புச் சடங்குகள் என்பர். பெரிதும் முதுமைப் பருவத்தில் இறந்தவர்களுக்கே இச்சடங்குகள் நிகழ்த்தப்படும்.

### 3.71 பால் சடங்கு

முதியவர்கள் மரணத்துடன் போராடிக் கொண்டிருக்கும் போது அவர்கள் வாயில் பால் உற்றுவதனைப் "பால் சடங்கு" என்பர்.

### 3.72 நீர் மாலை

பிணத்தைக் குளிப்பாட்டுவதற்கு நீரெடுக்கச் செல்லும் சடங்கினையே "நீர் மாலை" என்பர். இறந்தவரின் ஆண் மக்களும் பிறரும் கிணறு அல்லது ஆற்றில் குளித்துவிட்டு நீரெடுத்து வருவர். தேங்காய், மாவிலை, செவ்வரளி மாலை ஆகியவற்றைக் கொண்டு வருவர்.

### 3.73 கோடிக் கட்டல்

பிணத்தை நீராட்டிப் புத்தாடை அணிவதனைக் "கோடிக் கட்டல்" என்பர். தமிழ்நாட்டில் பல்வேறு இடங்களில் இச் சடங்கு நடத்தப்படுகின்றது. ஆடையின் தேவையைக் கருதி இரவோடு இரவாக நடுயாமத்திலும் சென்று புத்தாடை வாங்கி வருவர்.

### 3.74 வாய்க்கரிசி போடுதல்

பிணத்தின் வாயில் போடப் படும் பச்சரிசி "வாய்க்கரிசி" என்பர். வீட்டின் முற்றத்தில் வைத்து பெண்களாலும், காட்டில் வைத்து ஆண்களாலும் வாய்க்கரிசி இடப்படும். இதனை இறுதி உணவாகக் கருதுவர்.

### 3.75 பாடை கட்டுதல்

பிணத்தைத் தூக்கிச் செல்லுவதற்கு ஏற்ற முறையில் அமைக்கப்படும் வாகனத்தைப் "பாடை", தேர், கப்பல், இரதம், பல்லாக்கு எனப் பல்வேறு அழைப்பர். பாடையைத் தென்னை மரத்தின் பச்சைக் குருத் தோலையாலும், பனையோலையாலும் அமைப்பர். வாழை மட்டையும் இதனுடன் இணைத்து பிணம் படுக்கை நிலையில் இருப்பதற்கேற்ற முறையில் அமைக்கப்படும். தேரில் பிணம் உட்கார்ந்த நிலையில் வைத்திட ஏற்றதாக விளங்கும். இதில் வாழையை நட்டும், ஆரந்தம் கட்டை, கோவந்தம் கட்டை, தென்னை மரக்கட்டை ஆகியவற்றை இணைத்தும் தேரினைக் கட்டுவர். வண்ணத்துணிகளாலும் பூவா்லும் தேர் அழகு செய்யப்படும். இத் தேர் உருளையோ சக்கரமோ இல்லாமல் தூக்கிச் செல்லப்படும். இதனை முத்துத் தேர், பவளத் தேர், வெள்ளித் தேர், பொன் தேர், வெள்ளி ரதம், தங்கரதம் என்று ஒப்பாரிப் பாடல்கள் சுட்டும்.

குதிரை, ஆனை முகமுடைய பல்லாக்குகளும் பிணம் தூக்கிச் செல்லக் கட்டப்படுவதுண்டு. ஏழையர் பாடை கட்ட, செல்வரே தேரும் பல்லாக்கும் கட்டுவர்.

### 3.76 இசை முழக்கம்

முதியவர்களின் இறப்புக்கே பெரும் பாலும் இசைக் கருவிகள் ஒலிக்கப்படும். நெய்தல் இசை கேட்பதாகப் புறநானூறு கூறுவதின்றும் இவ்வழக்கம் ஒரு தொடர் வழக்கம் எனலாம். சங்கு நாவிதனால் ஊதப் படுவதும், மேளம், கொட்டு, உருவி போன்றவை பறையர்களால் முழக்கப்படுவதும் உண்டு. ஆசார வாசலில் மூவுலகமும் தத்தளிக்குமாறு

மேளம் முழக்கப்படுவதையும், உறவினர்கள் தங்களுடன் மேளத்தை அழைத்து வருவர் என்பதையும் மாரடிப் பாடல்கள் கூறும்.

### 3.77 ஊர்வலம்

பிணந்தாங்கும் பாடையை நான்கு பேர் சுமக்க உறவினர் பின் தொடர்ந்து செல்வர். ஒவ்வொரு சந்தி முனையிலும் பிணத்தை மூன்று முறை சுற்றுவர். தெரு முனைகளில் பிணஞ் சுமக்கும் ஆட்கள் மாற்றப்படுவதும் உண்டு.

### 3.78 சூறையிடுதல்

சூறை என்பதற்கு "அள்ளி வீசுதல்" என்று பொருள். பேய்களின் உணவாக வேறு சில பொருட்களை வீசியெறிவதன் மூலம் பிணத்தைக் காக்க முடியும் என்று நம்புகின்றனர். இறந்தவரின் பேரப்பிள்ளைகள் பாடையின் மீது ஏறி நின்று, வாழைக்காய், நெல் பொறி, முறுக்கு, காசு போன்றவற்றைச் சூறையிடுவர். மந்தையின் அருகில் பாடையை இறக்கி வைத்து மல்லிகைப் பூக்களைச் சூறையிடுவதும் உண்டு.

### 3.79 கொள்ளி வைத்தல்

இறந்தவரின் மூத்த ஆண் மகனுக்கே கொள்ளி போடும் உரிமை உண்டு. செல்வர் சந்தனக் கட்டையாலும், ஏழையர் விறகுக் கட்டையாலும், பிணத்தைச் சுடுவர். எரிகளத்தைப் கொன்று சுடுகாடு, புகைபோகும் கைலாசம், பகவானின் பஞ்சுமெத்தை என்று பலவாறு மரக்கட்டைகளை அடுக்கி பிணஞ்சுடுவர். தாமரை நூல் போட்டு, செம்பு தூக்கி, செவந்திப் பூ மாலையிட்டுக் கொள்ளி வைப்பர்.

### 3.80 குடமுடைத்தல்

கொள்ளி வைத்த பின்னர் நீர் நிறைந்த மட்கலயத்தை உடைப்பதனைக்

"குடமுடைத்தல்" என்பர். இறந்தவரின் மகன் தலையில் நீர்க் குடத்துடன் சுடுகாட்டில் பிணத்தைச் சுற்றும் போது ஊர் நாவிதன் குடத்தில் ஓட்டையிட்டு நீரை வடியுமாறு விடுவான். மூன்று முறை வலம் வந்ததும் மண் குடத்தைத் தலை மாட்டில் போட்டு உடைப்பர். சிறைக் கைதிகள் இறந்த போது வெள்ளையர் காலத்தில் கர்னல் குடும்பம் உடைத்ததாக அறிகிறோம்.

### 3.81 மொட்டையிடல்

பிணத்தை எரித்த பிறகு இறந்தவரின் ஆண் பிள்ளைகளுக்கு நாவிதன் இடுகாட்டில் வைத்து தலை மழிப்பதனை "மொட்டையிடல்" என்பர். தேங்காய் எண்ணெய், நல்லெண்ணெய் போன்றவற்றைத் தேய்த்துக் குளித்து வளர்த்த தலை முடியினை மொட்டையடிப்பதைத் தியாகமாகக் கருதுவர்.

### 3.82 தாலியறுத்தல்

கணவனை இழந்த விதவையரின் தாலியைக் கழற்றுவதனைத் "தாலியறுத்தல்" என்பர். பெரும்பாலும் விதவையை உரல் மீது உட்கார வைத்து தாலியைக் கழற்றுவர். சிலர் மறு நாள் ஆறு அல்லது குளத்தின் கரையில் சென்று "நீர் பிழிச்" சடங்கு நிகழ்த்துவதும் உண்டு. ஆற்றில் புல்லறுத்து அருகம்புல்லால் பந்தலிட்டுத் தாலி கழற்றுவதாகப் பாடல் கூறும்.

### 3.83 கல்லெடுத்தல்

இறந்தவரின் நினைவாகக் கல் வைப்பதனைக் "கல்லெடுத்தல்" என்பர். மூன்று சிறிய கருங்கல் துண்டுகளை ஊர் நாவிதன் கொணர்ந்து வந்து ஒன்றினை இறந்தவராகவும், மற்றொன்றினை இறந்தவரின் தகப்பனாராகவும், பிறிதொன்றினை இறந்தவரின் பாட்டனாராகவும் கருதி சடங்கு நிகழ்த்துவதுண்டு.

## 3.84 காடேற்றுதல்

பிணத்தினைச் சுட்டு சாம்பலைக் கொண்டு போய் ஆறு அல்லது குளம் அல்லது கடலில் கரைத்து விடுவதனைக் "காடேற்றுதல்" என்பர். பிணச் சாம்பலை வைகையிலும் பொய்கையிலும் கரைத்துவிட்டதாக பாடல்கள் கூறும்.

## 3.85 புதைத்தல்

பெரும்பாலும் சிறுவர்களைப் புதைத்து விடுகின்றனர். காப்பு அணியும் கைகளைக் கரையான் அரித்து விட்டதாகவும், பொட்டு இடப்படும் நெற்றியில் புழுதி அடைந்து விட்டதாகவும் ஒப்பாரிப் பாடல் கூறும். புதைகுழிகளை "இடுகாடு" என்று சுட்டுவர்.

## 3.86 கல்லறை

புதைகுழியின் மேல் கல்லறை கட்டும் வழக்கமும் உண்டு. ஆற்றுக்கு அக்கரையில் பிணத்தைப் புதைத்துக் கல்லறை கட்டப்பட்டதாகப் பாடல் உண்டு.

## 3.87 தானமிடல்

இறுதிக் கடன்கள் முடிந்தவுடன் பாடை கட்டுதல், மொட்டையடித்தல், குடமுடைத்தல் போன்ற வினைகளுக்கு உதவிய அவ்வூர் நாவிதனுக்கும் (தோட்டிக்கும்), நடைபாவடை விரித்த வண்ணானுக்கும், விறகு வெட்டிக்கும், குழி தோண்டி வெட்டியானுக்கும் கூலியும் தானமும் கொடுப்பர். இவர்கள் பிணத்துக்கு வைத்த வாய்க்கரிசி. வெள்ளிப் பணம், தேங்காய், பழம் போன்றவற்றைப் பங்கு வைத்துக்கொள்வர்.

### 3.88 விருந்து

கருமாதி சடங்கென்று கலந்து கொண்ட உறவினர்களுக்கு விருந்திடும் வழக்கமுண்டு. பெரும்பாலும் இவ்விருந்து அசைவ விருந்தாக அமையும். இறந்தவர்க்கு மைத்துனர், மருமகன் முறையுள்ளவர்கள் போரு கிடா (திருகுக் கொம்புடைய பெரிய கிடா) வினைக் கொண்டு வந்ததாக மாரடிப் பாடல் கூறும்.

### 3.89 இழவு கேட்டல்

இறப்பு குறித்து ஊரார் அல்லது உறவினர் இறந்தவரின் மக்கள் (அல்லது) மனைவியிடம் துக்கம் கேட்பதுண்டு. இதனை இங்குள்ள மக்கள் "இழவு கேட்டல்" (அல்லது) "துஷ்டி" (துட்டி) விசாரித்தல் என்பர். பெண்களாக இருப்பின் உடன் அமர்ந்து ஒப்பாரி வைப்பதுண்டு. நெருங்கிய உறவினர்கள், பலகாரங்கள் போன்றவற்றையும் வாங்கி வருவதுண்டு.

# அடிக் குறிப்புகள்

1. மணிமே. 27:2
2. கல்லாடம்
3. Radha Krishnan. S. Hindu View of Life. Page. 40 - 41
4. தொல். பொருள் – களவு – 2
5. தொல். சொல் – 57.
6. தொல். பொருள் – மரபு – 94
7. குறள் – 350
8. தொல். பொருள் – மரபு – 94
9. குறள் – 2
10. தொல். – மரபு – 108
11. தொல். பொருள் – புறத் – 5: 9 – 10
12. தொல். பொருள் – அகத் – 5
13. தொல். பொருள் – செல் – 138
14. அகம். 266:20 – 21
15. தொல். பொருள் – கற்பு – 6:35
16. தொல். பொருள் – கற்பு – 5:8 – 9
17. தொல். பொருள் 148:3 – 4
18. தொல். பொருள் 85:1 – 3
19. தொல். பொருள் 81
20. தொல். பொருள் 44:17
21. தொல். பொருள் 109:24
22. தொல். பொருள் 113:3
23. தொல். பொருள் 75:18
24. தொல். பொருள் 144:15 – 17

25. தொல். பொருள் 148:16
26. தொல். பொருள் 111:13
27. தொல். பொருள் 145:25
28. தொல். பொருள் 75:23
29. தொல். பொருள் 75:8
30. குறள் – 29
31. தொல். பொருள் 74:6
32. தொல். பொருள் 190:1 – 4
33. குறள் – 358
34. குறள் – 356, 357
35. புறம் – 363:1 – 2
36. புறம் – 6:5 – 7
37. புறம். 50:14 – 16
38. புறம். 27:7 – 10
39. புறம். 287:7 – 12
40. புறம். 5:5 – 6
41. புறம். 7:18 – 19
42. குறள். 596
43. குறள். 772
44. புறம். 214:3 – 8
45. புறம். 69:5 – 6
46. குறள். 10
47. குறள். 169
48. புறம். 29:11 – 12

49. குறள். 666
50. புறம். 196:1 – 6
51. புறம். 165:1 – 2
52. புறம். 29:23 – 26
53. புறம். 359:8
54. புறம். 51:9 – 11
55. புறம். 357:2 – 5
56. புறம். 360:11 – 12
57. புறம். 365:7 – 11
58. புறம். 359:10 – 18
59. புறம். 194
60. புறம். 192:1 – 11
61. புறம். 192:1
62. புறம். 192:11 – 13
63. புறம். 189:5 – 8
64. புறம். 189:5 – 8
65. புறம். 31:1 – 2
66. புறம். 51:1 – 3
67. புறம். 45:6
68. புறம். 197:17 – 18
69. புறம். 18:16 – 20
70. புறம். 195:7 – 10
71. புறம். 187
72. புறம். 218:5 – 7

73. புறம். 76:1 – 2
74. குறள். 571
75. குறள். 996
76. புறம். 182
77. புறம். 190
78. புறம். 85:27 – 29
79. Ibid PP.49. Estilin Carpenter .7, Theism in mediaeval, p.351
80. புறம். 6:17 – 18
81. புறம். 91
82. புறம். 55:1 – 6
83. சிறுபாண். 96 – 99
84. சிலப். 5:169
85. மதுரைக். 1 – 4
86. புற. வெண். 35
87. தொல். பொருள் – அகத் – 5
88. திரு.வி.க. முருகன் அல்லது அழகு, பக்.24
89. முருகு. 12 – 21
90. தொல். பொருள் – புறத் – 4
91. குறுந். 218:1
92. கலித். 89:8
93. சிலப். 11:24
94. புறம். 299:6
95. சிலப். 9:9 – 13
96. ஐங்குறு. 399:1 – 2
97. நெடுநல். 41 – 44

98. குறுந். 178:5

99. சிலப். 30:160 – 165

100. Navaratnam.C.S. A Short History of Hinduism in Ceylon. Faffna 1964. p.82

101. Thani Nayagam, Xavier.S. (i) Nature in Ancient Tamil Poetry,
Tamil literature Society Tuticorin/ 1952. p.23

102. சிறுபாண். 29 – 30

103. சிலப். 24:19 – 20

104. புறம். 242

105. குறள். 90

106. குறள். 1120

107. குறள். 1289

108. தொல். பொருள் – கற்பு – 5:28

109. புறம். 279:9

110. மதுரைக். 618 – 619

111. சிலப். 27:229

112. அகம். 11:4 – 5

113. நற். 202:9

114. பரிபா. 11:9 – 15

115. நற். 80:7 – 8

116. கலி. 59:13

117. தொல். பொருள் – கற் – 5:14

118. புறம். 250:4 – 5

119. புறம். 25:12 – 14

120. புறம். 261:17 – 18

121. Ganambai.K, Home Life Among the Tamil in the Sangam Age, Central art Press, Madras. - 1947. p.67

122. புறம். 125:1

123. புறம். 74

124. தொல். பொருள் – புறத் – 5:19 – 21

125. புறம். 221:13

126. S.I.I. Vol.3. No. 142

127. Venkataramanayaa, Origin and Development of South Indian Temple Architecture, Madras. 1926. p. 24 - 40

128. புறம். 35:27 – 29

129. புறம். 388:1 – 2

130. புறம். 117:1 – 2

131. சிலப். 10:102 – 104

132. பட்டினப். 1

133. பதிற். 24:24, 69:4

134. புறம். 384:20

135. குறள். 1146

136. புறம். 229:12 – 15

137. புறம். 238:1 – 6

138. மதுரைக். 631 – 33

139. குறுந். 180:1

140. புறம். 370:24 – 25

141. புறம். 359:4 – 8

142. புறம். 281:1 – 8

143. குறுந். 263:1 – 5

144.முருகு. 228

145.நற். 40:7 – 9

146.நற். 370:3 – 4

147.நெடுநல். 86

148.மதுரைக். 354

149.பதிற். 16:4

150.குறுந். 89:4 – 6

151.நற். 201:5 – 11

152.குறுந். 239:3 – 5

153.புறம். 294:8 – 9

154.மலைபடு. 64 – 66

155.புறம். 204:10 – 11

156.குறுந். 140:1

157.குறுந். 218:1 – 3

158.நற். 65:1

159.நற். 40:4

160.புறம். 280:6 – 8

161.முல்லைப். 9 – 20

162.குறுந். 218:7

163.குறுந். 260:3

164.ஐங்குறு. 218:2

165.புறம். 280:2 – 7

166.புறம். 229:12 – 17

167.புறம். 41:3 – 11

168.புறம். 377:16 – 20

169.சிலப். 9:45 – 54

170.சிலப். 20:1 – 14

171.நற். 98:1 – 7

172.நற். 246:2 – 4

173.நற். 169:3 – 4

174.கலி. 11:21 – 22

175.அகம். 151:12 – 15

176.ஐங்குறு. 218:1

177.சிலப். 5:237 – 239

178.பொருநர். 181 – 184

179.குறுந். 210:2 – 3

180.குறுந். 210:6

181.ஐங்குறு. 391:1 – 6

182.நற். 303:3 – 5

183.நற். 83:2

184.புறம். 199:1

185.நற். 34:1

186.பதிற். 66:15

187.புறம். 28:1 – 6

188.புறம். 91:9 – 11

189.புறம். 27:8 – 9

190.புறம். 236:10 – 12

191.குறுந் 28:2 – 3

192.அகம் 96:6 – 10

193.தொல் பொருள் – களவு – 21:23

194.மதுரைக் 612 – 615

195.குறுந் 111:1 – 2

196.அகம் 48:7 – 8

197.மலைபடு 305 – 306 (உரை)

# தமிழரின் உறவு அன்றும் இன்றும்.

4.00.தமிழரின் அன்றைய நாள் உறவு

4.01.தலைவி

4.02.தலைவன்

4.03.தலைவனது கடமை

4.04.கற்புநெறி

4.05.கற்புநெறியும் அறத்தோடு நிற்றலும்

4.06.அறத்தொடு நிற்றலில் தோழி

4.07.குறள் கூறும் கற்புநெறி

4.08.முல்லைப்பட்டில் கற்புநெறி

4.09.கற்பும் சமூகநலமும்

4.10.அகநானூற்றில் மாசு இல்கற்பு

4.11.தலைவியின் கடமை

4.12.அன்புடை நெஞ்சம்

4.13.குடும்ப பண்பாடு

4.14பழக்க வழக்கங்கள்

4.15.குறிக்கோள்

4.16.இல்வாழ்க்கை

4.17மகளிரின் மாண்பு

4.18.இல்லத் தரசியின் விருந்தோம்பல்

4.40.ஒருதாரமணம்

4.41பலதாரமணம்

4.42.முறைமணம்

4.43பரிசுமணம்

4.44.உடன்போக்குமணம்

4.45.திருமணச் சடங்கில் உறவுகள்

4.46.பெண்பார்த்தல்

4.47.வெற்றிலை மாற்றி உறுதிப்படுத்துதல்

4.48.காப்பு அணிதல்

4.49.தாலிக் கட்டுதல்

4.50.உறவுமுறைகள்

4.51.அன்பு கொள்ளும் உறவு

4.52.தாய்

4.53.தந்தை

4.54.தாய்மாமன்

4.55.அத்தை

4.56.உடன் பிறந்தவர்கள்

4.57.போராட்ட உறவுகள்

4.58மாமியார் மருமகள்

4.59.சக்களத்தி

# இயல் - 4

# தமிழரின் உறவு அன்றும் இன்றும்

## *4.0.* தமிழரின் அன்றைய நாள் உறவு

சங்ககாலத் தமிழர் அகவாழ்வில் களவு, கற்பு என்னும் இருநிலைகளைக் காணலாம். களவு என்பது மணப்பருவம் எய்திய ஆணும், பெண்ணும் எவ்விதமோ சந்திக்க நேர்ந்தது ஒருவரிடம் மற்றொருவர் மனம் கலந்து காதல் கொண்டு வாழ்வதாகும். பெற்றோரும், மற்றோரும் அறியாத வகையில் இருவரும் சந்தித்துக் கொண்டு மனம் பரி மாறிக்கொள்வது மட்டுமே களவு நிலையாகும். இதற்குத் தோழி, பாங்கன் என்போர் உதவிகளும் செய்வர். களவு நிலை முதிர்ச்சி அடைந்து திருமணத்தில் முடிந்து இல்வாழ்க்கை மேற்கொள்வதே கற்பு வாழ்க்கையாகும். களவு என்பது மனம் மட்டுமே கலந்த காதல் என்றும், கற்பு என்பது உடல்கள் இணைகின்ற வாழ்க்கை என்றும் கொள்ளுதல் வேண்டும். இத்தகைய வாழ்க்கையில் ஏதோ ஒரு காரணம் பற்றிக் கணவன் மனைவியைப் பிரிந்து செல்ல நேர்கிறது. வணிகத்தின் பால் சென்று பொருள் ஈட்டவோ, போர்க்களத்தில் பங்கேற்கவோ இன்ன பிற காரணங்களாலோ பிரிய நேர்கிறது. இப் பிரிவுக் காலத்தில் மனைவி கணவனின் வருகைக்காகப் பொறுமையோடு காத்திருக்கிறாள். இதையும் ஒழுக்கநெறியாக 'இல்லிருத்தல்- முல்லை' என்று முல்லைத்திணைக்குரிய ஒழுக்கமாகவே கொண்டனர் தமிழர்கள், ஒரு சிலர் பரத்தையர் உறவாலும் பிரிந்தனர். அத்தைகைய பிரிவு இல்லற மகளிரால் ஏற்க இயலாத ஒழுக்கமாகவே கருதப்பட்டுள்ளது. பரத்தையர் என்ற ஒரு பிரிவினர் காலங்காலமாக அனைத்து சமூக இனத்திலும் இருந்ததுபோல் தமிழ் இனத்திலும் இருந்தனர் என்பதை மறுப்பதற்கில்லை. ஆயினும் பரத்தையர் ஒழுக்கம் அனைத்து மக்களாலும் இழிவெனவே கருதப்பட்டது.

## *41.* தலைவி

தலைவி, தோழியிடம் தான் தலைவனிடம் கொண்ட களவொழுக்கத்தைக் கூறுமிடத்து மிகத் தேர்ந்த அறவுணர்வு மிக்கவளாய்க் காணப்படுகிறாள்.

> "இருவேம் ஆய்ந்த மன்றல் இதுவென
> நாமறி வுறாலிற் பழியும் உண்டோ
> ஆற்றின் வாரார் ஆயினும் ஆற்ற
> ஏனை உலகத்தும் இயைவதாம் நமக்கெ"[1]

என்றும் தலைவி தோழியிடம் கூறுகிறாள். இதன் மூலம் தலைவி தன் உள்ளத்தில் ஏற்றுக்கொண்ட தலைவனோடு வாழ்வதே வாழ்க்கை என எண்ணுகிறாள்.

"இம்மை மாறி மறுமை யாகினும்
நீ யாகியர் என் கணவனை
யானாகியர் நின் நெஞ்சு நேர்பவ"[2]

இந்தப் பிறவியில் அவனோடு வாழாவிட்டாலும் அதனால் வருகின்ற துன்பத்தை நான் உயிர் போந்துணையும் ஆற்றியிருப்பேன் என்றும், வரும் பிறவியிலாவது தலைவனோடு கூடி வாழ்வேன் என்றும் கூறுகிறாள். இச்செயல் தலைவி, தலைவன் மீது கொண்ட நல்லுறவைக் காட்டுகிறது.

### 4.2. தலைவன்

வெகுண்டு வந்த யானைக்கு அஞ்சித் தன்னைச் சார்ந்த தலைவியின் அச்சத்தைப் போக்குபவனாக, யானையின் மீது அம்பெய்தி தலைவன் தன்னுடைய தறு கண்மையை முதற்கண் புலப்படுத்துகிறான்.

"தலைவி மீது கொண்ட உள்ளார்ந்த அன்பை
அஞ்சில் ஓதி அசையால் யாவதும்
அஞ்சில் ஓம்புநின் அணிநலம் நுகர்கென
மாசறு சுடர்நுதல் நீவி நீடு நினைந்து
என்முகம் நோக்கி நக்கனன்"[3]

தன்னைச் சார்ந்த தலைவியை அஞ்சேல் என்று சொல்லி அவனது அருளார்ந்த உள்ளத்தைக் காட்டுகிறான். அவள் மீது கொண்ட காதல் உள்ளத்தை வெளிக்காட்டுகிறான். மேலும், தான் அன்பு செலுத்திய அவளையே கற்பு வாழ்வில் இல்லக்கிழத்தியாக அடைந்து, அறங்கள் செய்து மகிழ்ந்து வாழ்வேன் என்றும் உறுதியளிக்கிறான். இதனை,

"வசையில் வான்றிணைப் புரையோர் கடும் பொடு
விருந்துண்டு எஞ்சிய மிச்சில் பெருந்தொகை
நின்னோடு உண்டலும் புரைவ தென்றாங்கு
அறம்புனை யாகத் தேற்றிப் பிறங்கு மலை
மீமிசைக் கடவுள் வாழ்த்திக் கைதொழுது
ஏமுறு வஞ்சினம் வாய்மயில் தேற்றி"[4]

என்பதன் வழி தலைவியின் மனதில் தன்னம்பிக்கையை ஏற்படுத்தியதோடு தலைவி மீது ஆராக் காதல் கொண்டவனாகவும் தலைவன் விளங்குகிறான். அத்துடன், தன்னையே நம்பி நாணத்தை விட்டுச் சரணடைந்த தலைவியின் உள்ளத்தை அந்தப்பொழுதிலே புரிந்து கொண்டு. 'அஞ்சாதே, உன் அழகிய நலத்தை நுகர்வேன்' என்று கூறும் தலைவனின் உளவியல் பாங்கு பெரிதும் போற்றக் கூடியது.

பழந்தமிழ் இலக்கியமாகிய குறிஞ்சிப்பாட்டு தமிழரின் வாழ்வியல் கோட்பாட்டில் உன்னத நெறியாகிய கற்பு நெறியை வலியுறுத்துவதையே தலையாய நோக்கமாகக் கொண்டிருக்கிறது. தலைவி தன் உள்ளத்தால் ஏற்றுக்கொண்ட தலைவனோடு வாழ்வதே அறமாகும் என்றும் அவ்வறம் இல்லறமாவதற்குத் தோழி, செவிலி, நற்றாய் ஆகியோர் பெரிதும் துணைநின்றனர் என்பதை அறிய முடிகிறது. மகளிர் மட்டுமல்லாது ஆடவரும் கற்புநெறியில் விளங்கினர் என்பதையும் குறிஞ்சிப்பாட்டின் வழி செவ்வனே அறியலாம்.

## 4.3. தலைவனது கடமை

'பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை'[5] என்பது குறள்மொழி. ஒரு குடும்பத் தலைவன் தன் மனைவி மக்களை மட்டும் காத்தால் போதாது; தன் சுற்றத்தையும் காக்கவேண்டும். இத்தகைய கடமையுணர்வு மிக்கவனாக சுற்றம் தழுவும் இயல்பினனாகத் தலைவன் இருத்தல் வேண்டும் என்பதைச் சங்க இலக்கியம் எடுத்துரைக்கிறது. செல்வத்தை அற வழியில் ஈட்டித் திரட்டி, நல்ல வழியில் தனக்கும் பிறர்க்கும் பயன் படுத்துதலே இலவாழ்க்கையின் பயனாகச் சங்க நூல்கள் வலியுறுத்துகின்றன.

"இருந்தோம்பி இல்வாழ்வே தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற்பொருட்டு"[6]

என்று வள்ளுவரும் இக்கருத்தினைச் சுட்டிக் காட்டியுள்ளார். இளம் மனைவியை விட்டுப் பிரிந்து செல்வது துன்பத்தைத் தருவதாயினும் நற்றிணை காட்டும் தலைவன் தன் கடமையை நன்குணர்ந்தவனாக இருக்கிறான்; அவன் நெஞ்சம், மற்றவர்களின் வாழ்வுக்காக முயன்று பொருள் தேடும் ஆர்வம் உடையது; மிக்க மருள் உடையது. அதனால் தான் அவன் பொருள் தேடுதலை விருப்பமான கடமையாக மேற்கொண்டான்; அதற்காகக் கொடிய பாலை வழியில் போகத் துணிந்தான். இதனை,

"பிறர்க்கென முயலும் பேரருள் நெஞ்சமொடு
காமர் பொருட் பிணிப் போகிய
நாம் வெங் காதலர் சென்ற ஆறே"[7]

என்னும் பாடல் வரிகளால் அறியலாம். மேலும் பொருளால் ஈத்துவக்கும் இன்பமும் புகழும் பெறவேண்டும் என்று விரும்பிய தலைவன் பொருள் தேடச் செல்கிறான். இதனை,

"இசையும் இன்பமும் ஈதலும் மூன்றும்
அசையுநர் இருந்தோர்க்கு அரும்புணர்வு இன்மென
வினைவயின் பிரிந்த வேறுபடு கொள்கை"[8]

என எடுத்துரைக்கிறது ஒரு பாடல். பொருள் தேடும் கடமையை முடிப்பதில் உள்ள இன்பத்திற்கு நிகராகத் தலைவன் கருதுவது தன் காதலியின் இனிய பண்புகளைத்தான். இதனை,

"உள்ளிய வினைமுடித் தன்ன இனியோள்"[9]

என்னும் இளங்கீரனாரது பாடல் எடுத்தியம்புகிறது. மனத்தால் அறியப்படும் உவமை என இதனைச் சுட்டுவர் உரையாசிரியர்.

*4.4.* கற்பு நெறி

கற்பு என்பது உள்ளத்தோடு தொடர்பு கொண்டது. உள்ளத்தால் மட்டுமே உணரப்படுவது, இதனையே

கற்பு என்பது மகளிர்க்கு மாந்தர் மாட்டு நிகழும்
மன நிகழ்ச்சி அதுவும் மனத்தான் உணரக்கிடந்தது

என்று இளம்பூரணர் உரைப்பர். அது மட்டுமல்ல

"நாட்டியல் மரபில் நெஞ்சுகொளின் அல்லது
காட்டல் ஆகாப் பொருள் என்ப"[10]

என்று காட்டலாகாப் பொருள்களிலே கற்பும் ஒன்று எனத் தொல்காப்பியர் சுட்டுவர் கற்பு என்பதனை 'எழுதாக்கற்பு'[11] என்று குறுந்தொகையும், 'கடவுட்கற்பு'[12] என்று

அகநானூறும், 'நன்றி சான்ற கற்பு'[13] என்று நற்றிணையும் 'கடவுள் சான்ற கற்பு'[14] என்று புறநானூறும் கூறுகின்றன.

அக உணர்ச்சியாகிய கற்பு உள்ளத்தின் உறுதியாகும். இவ்வுறுதியை வள்ளுவர், 'கற்பெனும் திண்மை' என்பர். இந்த மனவுணர்வு யாராலும் உணர்த்தப்படாமலேயே மகளிர்க்கு அமைவதாகும்.

> 'பிரசம் கலந்த வெண்சுவைத் தீம்பால்
> விரிகதிர் பொற்கலத் தொருகை ஏந்திப்
> புடைப்பிற் சுற்றும் பூந்தலைச் சிறு கோல்
> உண்ணென் றோக்குபு பிழைப்பத் தெண்ணீர்
> முத்தரிப் பொற்சிலம் பொலிப்பத் தத்துற்று
> அரிநரைக் கூந்தற் செம்முது செவிலியர்
> பரிமெலித் தொழியப் பந்தர் ஓடி
> ஏவல் மறுக்கும் சிறுவிளை யாட்டி
> அறிவும் ஒழுக்கமும் யாண்டுணார்ந்தனள் கொல்"[15]

என்னும் பாடல்வழி அறியலாம். சிறிய வயதில் சொன்ன சொல்லைக் கேட்காமல் எம்மை அலைக்கழித்து மகிழ்ந்த விளையாட்டுப் பெண்ணான தலைவி, இன்று அறிவும், ஒழுக்கமும் எவ்வாறு வாய்க்கப்பெற்றாள் எனச் செவிலித்தாய் வியக்கிறாள். 'அறிவும் ஒழுக்கமும்' என்னும் தொடர் ஈண்டு கற்பு மனநிலையைக் குறிப்பதாகும். யாராலும் உணர்த்தப் படாமல் எழுதாக் கற்பாக' இயல்பாக அமைந்ததாகும், உள்ளப்புணர்ச்சி என்று நிகழ்ந்ததோ அன்றே கற்புநெறியைத் தலைவி கொண்டாள் என்பதே இப்பாடலின் சிறப்புப் பொருளாகும்.

கற்பு மனநிலை கொண்ட தலைவி தன் வாழ்வில் துன்பம் நேர்கையில் ஆற்றுவாரையும், தேற்றுவாரையும் நாடுவதில்லை. தனக்குத் தானே கற்ற கற்பினை நினைந்து தனக்குத் தானே பொறுத்துக்கொள்கிறாள். இத்தகைய ஒழுக்கமே 'முல்லை சான்ற கற்பு' என அழைக்கப்பட்டது.

### *4.5.* கற்புநெறியும் அறத்தோடு நிற்றலும்

தமிழ்ப் பண்பாட்டில் கற்பு நெறி உயிருக்கு மேலானதாகப் போற்றப்பட்டது. இதனை,

> "உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்
> செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று"[16]

எனத் தொல்காப்பியர் குறிப்பர். இக்கற்புக் கோட்பாட்டின் அடிப்படையிலான ஒருவனுக்கு ஒருத்தி என்னும் வாழ்வியல் நெறியே குறிஞ்சிப்பாட்டின் அடிக்கருத்தாய் அமைந்துள்ளது.

### *4.6.* அறத்தொடு நிற்றலில் தோழி

நாண மும் கற்பும் மகளிர்காக்கத் தகும் இரு பேரொழுக்கங்கள் ஆனால். நாணத்தை விட்டேனும் கற்பைத் தலையாகப் போற்றி யொழுக வேண்டும் என்பது தமிழர் கண்ட மனையியல் கோட்பாடு. அக இலக்கியத்தில் தோழி எல்லையற்ற உரிமையுடையவள். தலைவியின் உரிமையையும் செயலையும் தன் உரிமையாக கொள்ளும் உறவுடையவள். எனினும் தலைவியின் விருப்பமின்றி அறத்தொடு நிற்கும் உரிமை மட்டும் தோழிக்கு இல்லை. இதனை,

> "அறத்தொடு நிற்கும் காலத் தன்றி
> அறத்தியல் மரபிலள் தோழி"[17]

என்று தொல்காப்பியம் சுட்டும், ஏனெனில், அயலார் வரைவு, வெறியாட்டு எடுத்தல் முதலான தொல்லைகள் நேரும்போது வேறு வழியெல்லாம் பயனற்றுப் போயகாலை, அறத்தொடு நிற்றல் என்னும் நேர் நெறியைத் தலைவியும் தோழியும் மேற்கொள்வர். தவிர, மற்றைய காலங்களில் தலைவி நாணம் விட்டு அறத்தொடு நிற்பதை விரும்பாள். தலைவி தன் களவொழுக்கத்தைத் தோழிக்கும், தோழி செவிலித்தாய்க்கும், செவிலி நற்றாய்க்கும், நற்றாய் தந்தைக்கும் வெளிப்படுத்துதலாக அறத்தொடு நிற்றலின் படிநிலைகள் அமைகின்றன.

தோழி செவிலித்தாய்க்கு அறத்தொடு நிற்கும் பொழுது தலைவியின் குடிப்பிறப்பிற்கும், செவிலியின் அறிவிற்கும், தலைவியின் நாணம் , கற்பு முதலிய பெருமைக்கும், தலைவியின் தினை க்காவலுக்கும் இழுக்கு நேராதபடி அறிவுறுத்துகிறாள். மேலும், தலைவனுக்குரிய அறிவு, நிறை, குடிப்பெருமை, சான்றாண்மை முதலிய பெருந்தகைமைக்குத் தவறு நேராதபடி தலைவியின் களவொழுக்கம் நிகழ்ந்த முறையை முரண்பாடில்லா மொழிகளில் செவிலிக்கு உணர்த்துகிறாள்.

> கொடுப்பின் நன்குடைமையும், குடிநிர லுடைமையும்,
> வண்ணமும் துணையும், பொரீஇ யெண்ணாது,
> எமியேம் துணிந்த ஏமஞ்சால் அருவினை[18]

என்றும் தலைவியின் களவொழுக்கத்தைச் செவிலிக்கு அறிவுறுத்துவதொடு தலைவியின் கற்பு நிலையையும் குறிப்பால் உணர்த்துகிறாள். ஒன்றி உயர்ந்த பாலதாணையாகிய நல்லூழின் செயலால்தான் தலைவனும் தலைவியும் ஓரிடத்து எதிர்ப்பட்டனர்.

"மையல் வேழம் மடங்கலின் எதிர்தர
உய்விடம் அறியேம் ஆகி ஒய்யெனத்
திருந்துகோல் எல்வளை தெழிப்ப நாணு மறந்து
விதுப்புறு மனத்தேம் விரைந்த வற்பொருந்திச்
சூருறு மஞ்ஞையின் நடுங்க"[19]

எனத் தெளிவாக விளக்குகிறாள் இதன்வழி செவிலி தலைவியைப்பற்றியும், தலைவனைப்பற்றியும் தவறாக எண்ணாது நல்லெண்ணம் கொள்ளச் செய்கிறாள். மேலும், தலைவனின் குடிப்பெருமையையும், தலைவி மீது கொண்ட தூய அன்பையும், அவளை மணந்து இல்லறம் நடத்த விரும்புகின்ற தலைவனது வேட்கையையும் சிறப்பாக எடுத்துரைக்கிறாள். மேலும், தலைவனை உள்ளத்திலே நினைந்த தலைவியின் காதல் உயிர் இயற்கை சார்ந்தது . அந்தத்தலைவனோடு வாழ்தலே கற்பு வாழ்க்கை அவ்வாழ்க்கையே அறம் சார்ந்த வாழ்க்கை.

## *47.* குறள் கூறும் கற்புநெறி

ஆண் மகன் ஒருவனைக் கணவனாகக் கைப்பிடித்த சூழலில் அக்கணவன் மனங்கொள்ளத்தக்கவனாக விளங்குவானாயின் கணவனைத் தவிர வேறு தெய்வம் இல்லையென்பதும் அவனைப் போற்றிப் பேணி வாழ்வதுமே கற்பு என்று நம் இலக்கியங்கள் உணர்த்தியுள்ளன, இப்பேருண்மையை *20* நூற்றாண்டுகளுக்கு முன்னர்,

"மனைத்தக்க மாண்புடையவள் ஆகித்தற்கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை"[20]

என்று திருக்குறள் சொல்லியுள்ளது. மாண்பமை என்ற சொல்லை இன்று நாம் அமைச்சர்களுக்கும் பயன்படுத்துகிறோம், அன்று மனைவிக்கென்று அச்சொல்லை வள்ளுவர் உபயோகித்துள்ளார்.

### 4.8. முல்லைப்பாட்டில் கற்புநெறி

சங்கத்தமிழ் இலக்கியங்களில் அதிகமான இலக்கியங்கள் காதல் வாழ்க்கையையும், கற்பு வாழ்க்கையையும் பதிவு செய்கின்றன.

போர் செய்தல் தொடர்பாகத் தன் மனைவியை விட்டுப்பிரிந்து செல்கிறான் தலைவன் கார்காலத் தொடக்கத்தில் வருவேன் அதுகாறும் நீ ஆற்றியிரு என்பது தனது மனைவியிடத்து அவன் கூறிச்செல்லும் ஆற்றுமொழி. ஆனால் வருவதற்குக் காலம் தாழ்ந்துவிடுகிறது, இச்சூழலில்

"நாழி கொண்ட நறுவீமுல்லை
அரும்பவிழ் அலரி தூஉய்க்கை தொழுது
பெரு முதுபெண்டிர் விரிச்சிநிற்பச்
சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றின்"[21]

என்று தலைவனைப் பிரிந்து தனித்திருக்கின்ற தலைவியின் நிலை கண்டு, அவளுடைய துன்பங்கண்டு பெருமுது பெண்டிர்கள் வருந்துகின்றனர். முடிவில் அவன் வருவானாமாட்டானா என்று விரிச்சி மூலம் உண்மை அறிய முயலுகின்றனர். திருமணமான சூழலில் இளம் பெண்களைப் பிரிவது சில நேரங்களில் எதார்த்தமாக நடப்பதுண்டு. ஆனால் அனைவரும் வருந்தக்கூடிய அளவுக்கு அதிககால நீட்டிப்போடு பிரிந்து இருப்பது தவறுதலுக்கு வழி வகுத்துவிடும். சங்க இலக்கியத்தில் இதற்கென சான்றுகள் இல்லையென்றாலும் சூழல் இருந்தமைக்கான சான்றுகள் உணரப்படுகின்றன.

அவ்வாறெல்லாம் நிகழ்ந்துவிடக்கூடாது என்பதில் மிகுந்த அக்கறையும் பயமும் கொண்ட நம் சங்கப் பெரியோர்கள் தலைவியை மிகுந்த கவனத்தொடு பாதுகாக்கின்றனர். களவொழுக்கத்தை முடித்துக்கொண்ட தலைவி கற்பொழுக்கத்தை அத்தலைவனுடனேயே தொடர வேண்டும் என உணர்கின்றனர். தோழி, நற்றாய், பெற்றோர் போன்றவர்கள் சுட்டிக்காட்டுவது இதுதான். இப்பண்பாட்டு ஒழுக்கம் மீறப்படக்கூடாது. களவுடன் ஒரு தலைவன், கற்புடன் ஒருதலைவன் என்பதெல்லாம் தமிழ் அகமரபில் கடுமையாக மறுக்கப்பட்ட ஒழுங்கீனமாகும்.

### 4.9. கற்பும் சமூகநலமும்

கற்பு என்பதில் வெறும் உள்ளம் சார்ந்த உடல்சார்ந்த நலங்கள் மட்டும் பேணப்படுவதில்லை. அது சமூக உணர்வுகள் அடங்கிய ஒரு அமைவு. கணவனோ

-

மனைவியோ தமக்குப் பிடித்தமானவர்களிடம் மிகுந்த நம்பிக்கையோடு இருத்தல் வேண்டும். அவ்வாறு இல்லையேல் கணவன் மனைவியருக்கிடையே மட்டுமல்லாது சமூகத்திற்குள்ளேயும் சமூகத்தின் பார்வையிலும் தீய விளைவுகளை ஏற்படுத்தும். யாரும் எப்பொழுதும் எவருடனேயும் வாழலாம் என்ற சூழல் கேலிக்குள்ளாக்கப்படும், இங்குக் கற்பு என்பதும் வெறும் பெண்ணினம் சார்ந்தது மட்டுமன்று, ஆணினத்தையும் சேர்ந்ததுதான். தொடர்புரீதியாகத் தவறு என்பதைக் காட்டிலும் உணர்வுரீதியாகத் தவறுவதும் கற்புத்தவறாகவே கருதப்படுகிறது. நினைப்பதென்பது கற்பிழப்பாகிவிடுமா என்பதை வாதமாக வைத்துக்கொண்டாலும் நினைப்பு செயலுக்கான காரணி என்பதால்தான் நினைப்பதைக் கூடக் கற்பிழப்பு எனத் தமிழ் இலக்கியங்கள் பதிவுசெய்கின்றன. இச்சூழலில் சமூக நிறுவனங்கள் கற்பு, நம்பிக்கை, பால்வினை நோய்கள் இவை பற்றி மக்களிடையே விழிப்புணர்வை ஏற்படுத்த முயல்கின்றன.

வெளிப்படையாகப் பேசுவதற்கு நாகரிகமும் நடைமுறையும் தடை ஏற்படுத்துதல் என்பது நிகழ்ந்துவிடுகிறது. எந்த நிலையில் எந்தச் சூழலில் அறிவுறுத்துவது என்பதும் இதுபோன்ற சிக்கலை ஏற்படுத்திவிடுகின்றன. குறிப்பாகக் கிராமப்புறத்து மக்கள் இந்த விழிப்புணர்வு நிகழ்வுகளை எதிர்கொள்ளத் தயங்குகின்றனர். நாகரிகம் எவ்வளவுதான் உச்சத்திற்குச் சென்றாலும் குடும்பம் சார்ந்த நம்பிக்கையை ஏற்றுக்கொள்ளாதவர்கள் இருக்கமுடியாது. குடும்பத்தின் மீதான நம்பிக்கை தவறும்பொழுது அது சமூகச் சிதைவுக்கும் அடித்தளமாகிறது.

இந்த நம்பிக்கையில்தான் முல்லைப்பாட்டின் தலைவி உணர்வுகளை ஒடுக்கி, தன் காதலுக்காகக் காத்திருக்கிறாள். குறிப்பிட்டதைவிட நீண்ட நாள் எடுத்துக்கொண்ட சூழலில் தலைவனும் தன் தலைவி மீதான அன்பை மாற்றிக் கொள்ளாதவனாகவே காணப்படுகிறான். கார்காலம் முடிந்து வீடு திரும்பும் தலைமகனின் வேகம்

எதிர்செல் வெண் மழை பொழியுந் திங்களின்
முதிர்காய் வள்ளியங் காடு பிறக்கொழியத்
துணைபரி தூரக்குஞ் செலவினர்
வினை விளங்கு நெடுந்தேர் பூண்டமாவே[22]

எனக் குறிப்பிடப்படுகிறது. இந்த மன ஒருங்கிணைப்பு குடும்ப வாழ்க்கைக்கும் கற்புத் தன்மைக்கும் அடிப்படையாகிவிடுகிறது. பழமையான பண்பாட்டினை நாம் நாகரிகம் கருதி ஒதுக்கித் தள்ளுகிறோம். ஆனால் காலச் சக்கரம் மீண்டும் நம்மை அந்தப் பண்பாட்டிற்குள் நுழைக்கின்றது. வாழ்க்கைக்குத் தேவையான செய்திகள் பழமையில் இருந்தாலென்ன புதுமையில் இருந்தாலென்ன நமக்குத் தேவையானதை விரும்பி எடுத்துக்கொள்ளவேண்டும். மனிதனின் தன்னம்பிக்கையே வாழ்க்கை. முல்லைப்

பாட்டுத்தலைவன் தலைவி மீதும், தலைவி தலைவன் மீடும் கொண்ட காத்திருப்பு, நம்பிக்கையின் அடிப்படையில் உள்ள வாழ்வையே சுட்டுகின்றது.

அந்த நம்பிக்கைதான் ஆணையோ பெண்ணையோ ஒழுக்கக் கேடான செயலிலிருந்து காக்கும் பாதுகாப்புக் கோட்பாடாகும். எப்படியும் வாழலாம் என்று இல்லாமல் இப்படித்தான் வாழ வேண்டும் என நெறிபிறழாமல் வாழும் முல்லைப்பாட்டுக் கற்பு வாழ்வியல் நன்மை பயப்பதாகவே அமைகின்றது.

## 4.10. அகநானூற்றில் மாசு இல்கற்பு

கற்பு என்பது ஒருவகை உயர்ந்த ஒழுக்கம் என்றாலும் கூட அதனினும் 'மாசு இல் கற்பு' என்பது பெரிதும் வலியுறுத்தப் பட்டுள்ளமையை அகநானூற்றில் காண்கிறோம். பரணர் பாடிய அகநானூறு பாடல் ஒன்றில்,

> "அகவன்முலை அரும்பிய சுணங்கின்
> மாசு இல் கற்பின் புதல்வன் தாய்"[23]

என ஒரு தாயின் குற்றம் இல்லாத கற்புநெறி சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. நாணம் என்பது கற்புடைய மகளிரின் ஒரு மெல்லிய கவசம். செய்யத்தகாத செயல்களைச் செய்வதற்கு நாணம் என்னும் வெட்கப்படும் உணர்வு பெண்களுக்கு மட்டுமல்ல ஆண்களுக்கும் உண்டு. தலைவியைப் பிரிந்து பணிநிமித்தம் சென்ற தலைமகன் திரும்பி வருங்கால் தன் மனைவியைப் பற்றிப் பெருமையாகப் பேசுகிறான்.

> "நாணொடு மிடைந்த கற்பின் வாள்நுதல்
> அம்தீம் கிளவிக் குறுமகள்"[24]

என்னும் கல்லாடனார் பாடலில் மனமொத்த வாழ்க்கையை சித்தரிப்பதைக் காண்கிறோம்- .

> 'நாணுடை அரிவை மாண் நலம் பெறவே'[25]

என்னும் பாடல் வரியிலும் நாணமும், மாண் நலம் என்னும் கற்புநெறியும் வலியுறுத்தப்பட்டுள்ளாதைக் காண்கிறோம்.

-

### 4.11. தலைவியின் கடமை

மனையறத்தின் வேராக விளங்குபவள் மனைவி, அவள் மாட்சியுடையவளாக அமைந்தால் மட்டுமே இல்லறம் சிறக்கும், ' யாண்டு பல ஆகியும் நரையில ஆகுதல் யாங்காகியர்' எனப் பிசிராந்தையாரிடமும் கேட்டபோது. 'மாண்ட என் மனைவியோடு மக்களும் நிரம்பினர்' என்று மனைவியின் மாண்பினைத்தான் முதலில் எடுத்துரைத்தார் அவர்.

இல்லது என் இல்லவள் மாண்பானால் உள்ளது என்
இல்லவள் மாணாக் கடை[26]

என்று வள்ளுவரும் 'வாழ்க்கைத் துணை நலம்' என ஓர் அதிகாரமே வகுத்து இல்லாளின் அருமையைப் புலப்படுத்தினார்.

"அல்லில் ஆயினும் விருந்துவரின் உவக்கும்
முல்லை சான்ற கற்பின்
மெல்லியல் குறுமகள் உறைவின் ஊரே"[27]

'வினை முற்றி மீளுந் தலைவன் தேர்ப்பாகற்குச் சொல்லியது' என்னும் துறையில் அடையும் இப்பாடலில், 'முல்லை சான்ற கற்பின் மெல்லியல் குறுமகள்' எனத் தலைவன் தலைவியைக் கூறக் காரணம். 'தலைவன் ஆற்றியிருந்திடுக'[28] என்று கூறிய கூற்றைக் கடவாது ஒருவாறு ஆற்றியிருக்கின்றாள் என்பதைப் புலப்படுத்தற்கேயாம் முல்லை கற்போடு இருக்கும் தன்மை'[29] என ஈண்டு விளக்கம் அளிக்கின்றார் மு.வரதராசனார்.

வினையே ஆடவர்க்கு உயிரே என்று கூறப்படுவதற்கேற்ப, வினையின் காரணமாகப் பிரிந்துசென்ற தலைவன் திரும்பி வருதலை அறிந்தவுடன், தலைவி அவனை வரவேற்கும் உள்ளத்தாளாய், விருந்து சமைக்கத் தொடங்குகிறாள்.

புதியவனாய் வரும் அவனுக்கு விருந்து அளித்து மகிழும் விருப்பம் உடையவளாய், நீராடியதனால் நீலமணி போன்ற நீண்ட கூந்தலில் இருந்து விழும் நீர் புள்ளி புள்ளியாய் மார்பை நனைக்க, சமையல் முயற்சியை மேற்கொள்கிறாளாம். இத் தலைவியை நம் மனக்கண் முன்னே கொண்டு வந்து நிறுத்துகின்றது நற்றிணைப் பாடல் ஒன்று.

'வீழ்மா மணிய புனை நெடுங் கூந்தல்
நீர்வார் புள்ளி ஆகம் நனைப்ப
விருந்தயர் விரும்பினள் வருந்தும்
திருந்திழை அரிவைத் தேமொழி நிலையே[30]

கணவனைப் பிரிந்த மனைவி, கூந்தலைப் புனைந்து கொள்ளாமலும் மலர் சூடிக்கொள்ளாமலும் வருந்தியிருத்தல் பழங்கால வழக்கம். வேற்றூருக்குச் சென்ற கணவன் திரும்பிவரும் செய்தி கேட்ட அளவிலேயே நீராடி, கூந்தலைத் தூய்மைசெய்து, மலர் சூடி மகிழ்கின்றாள் தலைவி. தலைவன் ஒருவன் தான் பெற்ற அனுபவத்தைத் தன் தோழனிடம் பகிர்ந்து கொள்கிறான். 'பாகனே! மறக்க முடியாதது அது' நம் தேரின் மணி ஒலி தலைவிக்குக் கேட்காது. ஆகையால் முன்னே செல்லுங்கள் என்று ஏவலாளர் சிலரை அனுப்பினேன். அவர்கள் விரைந்து வீட்டுக்குச் சென்று அறிவித்தனர் உடனே தலைவி, இத்தனை நாளும் நீராடாத கூந்தலை நீராடித் தூய்மை செய்து சில பூக்களைக் கூந்தலில் அணிந்த நிலையில் யான் வீட்டிற்குள் புகுந்தேன்; அவள் தன் உடம்பு துவள மலர் சூடிய முடி அவிழ என்னைத் தழுவிக்கொண்டாள். அவள் அவ்வாறு மகிழ்ந்து கொண்டாடிய நிகழ்ச்சி மறக்க முடியாதது என்று பாகனிடம் கூறுகிறான்.

### *4.12.* அன்புடை நெஞ்சம்

இளமை ததும்பும்பொழுது, எழில் ததும்பும்போது காதல் அரும்பும் காதல் என்பது என்ன அன்பு, தூய அன்பு வாழ்வில் ஒரே ஒரு ஆடவனிடம் அந்தப் பெண்ணுக்கும், அந்த ஒரே ஒரு பெண்ணிடம் ஆணுக்கும் தோன்றுவதுதான் காதல். குறிப்பிட்ட அந்த நபரைப்பார்க்கின்ற வரைக்கும் அவர் நெஞ்சில் அப்படி ஓர் ஆசை உணர்வு அரும்புவதில்லை.

"கமம் காமம் என்ப காமம்
அணங்கு பிணிவும் அன்றே யானை
கடுத்தலும் தணிதலும் இன்றே யானை
----------------------------------
பாணியும் உடைத்து அது காணுநர்ப் பெறினே"[31]

அன்பினை அளந்து காட்டமுடியுமா? ஒரு தலைவனுக்கும் தலைவிக்கும் இடைப்பட்ட காதலை இந்த உயிருக்கும் உடம்பிற்கும் இடையே உள்ள உறவுக்கு ஒப்பிட்டும் கூறுவார் திருவள்ளுவர், தலைவன் தலைவி இருவருக்கும் இடையில் உள்ள இந்த நில உலகைவிடப் பெரியது, ஆகாயத்தைவிட உயர்வானது, கடலைக் காட்டிலும்

ஆழமானது எனத் தேவகுலத்தார் என்னும் புலவர் விளக்கிக் கூறியுள்ளார். மிக உயர்ந்த அன்பில் உருவான உறவு உயர்வானதாக உறுதியானதாக இருக்கும். இதன் வாயிலாகக் கற்பு வாழ்வில் செலுத்துவதற்குச் சங்க காலத்தமிழ் மக்கள் எத்துணை ஆர்வம் காட்டி இருக்கிறார்கள் என்பதை அறியலாம்.

"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரள வின்றே சாரல்
கருங்கோல் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனோடு நட்பே"[32]

இத்தகைய அன்பு இயற்கை மலர்தல் வேண்டும். முன்பின் தெரியாத ஓர் ஆடவனும் ஒரு பெண்ணும் சந்தித்துக் கொள்ளுகின்ற பொழுது முதல் சந்திப்பிலேயே மனதைப் பறிகொடுத்துவிடுவர். பிறகு ஒருவரை ஒருவர் மறப்பதே இல்லை. அன்பு மிக்க நெஞ்சங்கள் செம்புலத்தில் பெய்த மழைநீர், அம் மண்ணின் இயல்பைப் பெறுவது போல இயல்பாகக் கலந்துவிடுகின்றன.

எந்த ஒரு காரணமும் இல்லாமல் இயல்பாகப் பிறக்கின்ற அன்புதான் உண்மையான உயர்வான அன்பு. மழைநீர் மண்ணின் இயல்புகளோடு இரண்டறக் கலந்துவிடுகிறது அதுபோல இளமை நிறைந்த தலைவனும் தலைவியும் இயற்கையாக நிகழும் சந்திப்பின் மூலம் ஒன்று கலந்து விடுகின்றனர். செம்புலப் பெயல் நீரார் என்று அழைக்கப்படும் அந்தக் குறுந்தொகைப் புலவரின் பின்வரும் பாடல் இதனைச் சொல்லோவியமாகத் தீட்டித் தருகிறது.

"யாயும் ஞாயும் யார்ஆ கியரோ
எந்தையும் நுந்தையும் எம் முறைக் கேளிர்
யானும் நீயும் எவ்வழி அறிதும்
செம்புலப் பெயல்நீர் போல அன்புடை
நெஞ்சம் தாம்கலந் தனவே"[33]

உள்ளங்கள் ஒன்றுபட்ட பின்னால் வேறு எத்தனை எதிர்ப்புகள் தடைகள் சிக்கல்கள் வந்தாலும் அவர்கள் பிரிவதில்லை; பின்வாங்குவதில்லை.

### *4.1.3.* குடும்ப பண்பாடு

அன்பாய் ஒன்று பட்டு கணவனுடன் வாழ்ந்து இல்லறம் நடத்தும் மனைவி, அவனிடம் உள்ள சிறுகுறைகளை மறந்தும் மறைத்தும் வாழ்தல் இந்நாட்டுக் குடும்பப்

பண்பாடுகளில் ஒன்றாகும். குற்றத்தை உடனே எடுத்துரைத்துக் கடிதல் அல்லது தூற்றுதல் உரிமையின் பயனாகக் கொள்ளப்படலாம். ஆனால் அதனைப் பொறுத்தலும் மறத்தலும் மறைத்தலுமே அன்பின் நெறியாகும்.

"மாமை நிறம் உடைய இந்த இளம்பெண் நம் தாய் போன்ற கற்பொழுக்கம் உடையவளாகிவிட்டாள். மூடிய செம்பில் தனித்துக் கிடந்து பிறர் சூடிக்கொள்ளாமலே அழகும் மணமும் இழந்து வாடும் மலர்களைப் போல், தனித்துத் துயருற்று உடல் மெலிந்தாள். கணவன் செய்த கொடுமையை நமக்குச் சொல்லவும்நாணி மறைந்து நடக்கின்றாள்" என்று வியந்து பாராட்டினாள்.

கணவன் மெல்ல வீட்டிற்குள் நுழைந்தான். தான் செய்த குற்றம் நெஞ்சத்தை வருத்த மெல்ல உள்ளே சென்றான். தன் மனைவி தன்னை வெறுத்துக் கடிந்துரைப்பாள் என்றும், அவளுடைய சினத்தை மாற்ற என்ன செய்வது என்றும் எண்ணியவாறே சென்றான். அவளோ அவன் எதிர்பார்த்ததற்கு மாறாக முகமலர்ச்சியோடு எதிரே வந்து இன்சொல் கூறி அன்புடன் வரவேற்றாள். அதனால் தலைவன் நெஞ்சம் அவனை மேலும் வருத்தத் தொடங்கியது. இத்தகைய பெருந்தன்மை உடையவளுக்குத் தவறு இழைத்தோமே என்று நாணினான்.[34]

"காஞ்சி யூரன் கொடுமை
கரந்தனள் ஆகலின் நாணிய வருமே"[35]

தாயின் உயர்ந்த பண்பாடு மகளுக்கு எளிதில் அமைகின்றது. ஆண்டும் அநுபவமும் முதிர்ந்தவள் தாய். விளையாட்டை விட்டு இல்லறம் ஏற்ற இளம்பெண், மகள். அவளுடைய பண்பாடு இவளுக்கு எளிதில் அமைந்தது. அது சொல்லித் திருத்தும் முயற்சியால் அன்று; வாழ்ந்து வழிவழியாக வருகின்றது.

### 4.14. பழக்க வழக்கங்கள்

மனைவி சொன்னபடி நடக்கிறான் ஒருவன், அவள் எழு என்றால் எழுகிறான்; இரு என்றால் இருக்கிறான் என்று உலகில் அப்படிப்பட்டவனைக் குறைகூறுவது வழக்கம். ஆட்டிவைத்தபடி கையையும் காலையும் ஆட்டுகின்ற பொம்மையாட்டம் பாவைபோல் மனைவி விரும்பிச் சொன்னபடி அந்தக் கணவன் நடக்கின்றானாம்.

"கையும் காலும் தூக்கத் தூக்கும்
ஆடிப் பாவை போல
மேவன செய்யும்தன் புதல்வன் தாய்க்கே"[36]

முன் பழகியறியாத ஒருவனும் ஒருத்தியும் தக்க இளமையில் ஒருவரை ஒருவர் கண்டு பழகிக் காதல் கொண்டு மணப்பது உண்டு. அவ்வாறு காதல்கொண்ட தலைவன் தலைவியைப் பார்த்துக் கூறுகிறான்.

"என் தாயும் உன் தாயும் யார் யாரோ? என் தந்தையும் உன் தந்தையும் எந்த முறையில் உறவினர்? யானும் நீயும் இதற்குமுன் எவ்வகையின் ஒருவரை ஒருவர் அறிவோம்? செந்நிலத்தில் பெய்த மழைநீர் பிரியாவண்ணம் கலத்தல் போல் அன்புடைய நம் நெஞ்சங்கள் கலந்து ஒன்றுபட்டனவே என்கிறான்.[37]

4.15. குறிக்கோள்

பழந்தமிழ் மக்களின் வாழ்க்கையில் உயரிய குறிக்கோள் பல இருந்தன. ஒரு வீட்டுக்கு நாள்தோறும் இரவலர் பலர் வந்து உதவி பெற்றுப்போவது பெருமையாகவும் அவர்கள் வராமலிருப்பது வாழ்க்கையின் சிறுமையாகவும் கருதப் பட்டுவந்தன. உன்னை விட்டுப் பிரிந்து வாழ்வேனானால் யான் மேற்கொள்ளும் கடமையுடன் வாழும் வாழ்வில் இரவலர் என்னைவிட்டு நீங்கி வாராமல் நிற்கும் நாட்கள் பல ஆகும்.

"நின்துறந்து அமைகுவெ னாயின் என் துறந்து
இரவலர் வாரா வைகல்
பல ஆ குகயான் செலவுறு தகவே"[38]

முன்னோர் தேடிவைத்துள்ள பொருளைச் செலவு செய்து அழிப்பவர் பொருள் உள்ளவர்களாக மதிக்கப்படமாட்டார்கள். பொருள் இல்லாதவர்களின் வாழ்க்கையோ இரந்து உயிர் வாழ்வதைவிட இழிவானது.

"உள்ளது சிதைப்போர் உளர் எனப்படாஅர்
இல்லோர் வாழ்க்கை இரவினும் இளிவு"[39]

தலைவன் வெளிநாட்டுக்குச் சென்று பொருள்தேட முனைந்து பிரியும்போது கூறிப்பிரிகிறான் அவன் உள்ளத்தில் மதிப்பான வாழ்க்கை பற்றியுள்ள கொள்கையை இது காட்டுகிறது.

பரந்த உலகில் பழகுபவன் ஆண்மகன்; அங்குக் கடமையைப் போற்றுதல் அவனுடைய இயற்கை. அவனுக்காக வீட்டில் வாழ்பவள் மனைவி; அவனுக்குப் பல வகையிலும் துணையாக இருந்து உதவுபவள் அவள். ஆடவர்க்குக் கடமையே உயிர்; மகளிர்க்கு அந்த ஆடவரே உயிர்.

"வினையே ஆடவர்க்கு உயிரே; வாணுதல்
மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிர்"[40]

தலைவன் பொருள்தேடும் நோக்கத்தோடு வெளிநாட்டிற்குப் புறப்பட்டுச் சென்றபோது கூறிப் பிரிந்தானாம். "நீ அவரை உயிராகக் கொண்டிருப்பது அவருக்கு நன்றாகத் தெரியும். ஆகையால் நீ அழாதே தோழி! வந்து விடுவார்" என்று தோழி தலைவியைத் தேற்றும் போது தலைவன் சொன்னதை நினைவூட்டுகிறாள்.

### 4.16. இல்வாழ்க்கை

சங்காலத் தமிழ்மக்கள் மனிதனுடைய வாழ்க்கை மதிப்பும் பயனும் வாய்ந்ததாக அமைய வேண்டும் என்பதில் பேரார்வம் காட்டினர். அதற்குரிய சிறந்த கருவி 'இல்வாழ்க்கை' என்பதை அவர்கள் நன்கு உணர்ந்து இருந்தனர். அவர்கள் படைத்த இலக்கியத்தில் வீடும் வாழ்க்கையும் பின்னிப் பிணைந்துள்ளன.

சங்க காலத்தில் உள்ள அன்பு, இல்வாழ்க்கையின் பண்பாகப் போற்றப்பட்டது. அன்புவழிப்பட்ட இல்வாழ்க்கையின் பயானாக அறம் ஒளிர்ந்தது.[41]

### 4.17. மகளிரின் மாண்பு

இல்வாழ்க்கையில் முதன்மை இடத்தை, தலைமை இடத்தைப் பெண்ணே பெற்றாள். அவள் அடக்கு முறைக்கு ஆளாகி அல்லற்படவில்லை; தனியுரிமையோடு தற்சிந்தனையும் உடையவளாக விளங்கினாள். குடும்ப வாழ்க்கையில் ஆண்களோடு ஒத்த உரிமையுடைவர்களாக மகளிர் உறவுக்கொண்டு விளங்கினர். இல்லத்தரசியரைக் குடும்ப வாழ்க்கையின் சுமையாக அக்காலத் தமிழர் கருதவில்லை. இல்வாழ்க்கைக்கு இன்றியமையாதவராக, ஆண்களுடைய உயிர் நாடியாக இல்வாழ்க்கையில் ஈடுபட்ட மகளிர் பாராட்டப்பட்டனர். சங்க காலத்தில் குடும்பப் பெண்கள், மதிப்பு வாய்ந்தவர்களாகவும் சிறப்புமிக்கவர்களாகவும் போற்றப்பட்டனர்.

### 4.18. இல்லத்தரசியின் விருந்தோம்பல்

இல்வாழ்க்கையின் தலையாய கடமையாக விருந்தோம்பல் கருதப்பட்டது.[42] விருந்தினரை இன்முகத்துடன் வரவேற்று உதவிகள் பல செய்யும் பொருட்டே எனும் தெளிந்த அறிவுடையவர்களாக அன்றைய தமிழர் விளங்கினர். பண்டைத் தமிழர் விருந்தோம்புதலைச் சிறந்த அறமாகப் போற்றினர். அதனை அவர்களுடைய அன்றாட

வாழ்வின் நிகழ்ச்சிகளிலிருந்து தெரியலாம். சங்கப் பாடல்கள் இத்தைகய நிகழ்ச்சிகள் பலவற்றைக் காட்டுகின்றன.

ஓர் இல்லத்திற்குப் பசியால் வாடிய பெரியோர்கள் சிலர் சென்றனர். அந்த இல்லத்தரசி அவர்களை அன்போடு வரவேற்றாள். வீட்டில் இருந்த வரகும் தினையும் இரவலரின் பசியைப் போக்கப் பயன்படுத்தியதனால் தீர்ந்துவிட்டன. திருப்பித் தருவதாகக் கடன் வாங்கிச் சென்ற அண்டை அயலாரும், அந்நேரத்தில் உதவும் நிலையில் இல்லை. இவ்வீட்டரசி செய்வது அறியாமல் வருத்தமுற்றாள். அடுத்த உழவுக்குப் பயன்படுத்துவய்தற்குப் பாதுகாப்பாக எடுத்துவைக்கப்பட்டுள்ள 'தினை விதை' வீட்டில் இருக்கும் நினைவு வந்தது. அந்த விதைக்குரிய தினையைச் செலவழித்துவிட்டால், அடுத்து விதை விதைப்பதற்கு ஒரு சிறு மணி கூட வீட்டில் இல்லாமல் போய்விடுமே எனும் எண்ணமும் உள்ளத்தில் எழுந்தது. அதற்காக அவள் தயங்கவில்லை. இல்லம் வந்தவருடைய பசியைப் போக்குவது தன்னுடைய இல்வாழ்க்கையின் கடமை என்பதை அவள் முக்கியமாகக் கருதினாள். உடனே விதைத்தினையை மிகுந்த மகிழ்ச்சியோடு உரலில் இட்டு, குற்றியெடுத்து அவள் உணவு சமைத்தாள். விருந்தினரை உண்பித்து மகிழ்ந்தாள்.[43]

### 419. பெண்களின் கல்வி நிலை

இல்வாழ்க்கையின் இன்னொளியாக மகளிர் விளங்கினர் இன்புறு மனைவியாக, அன்புறு தாயாக, பண்புறு இல்லத்தரசியாக மகளிர் அக்காலத்தில் மாண்புற்று இருந்தனர். 'பெண் தெய்வம்' என்று போற்றப்படும் பெருநிலையை அவர்கள் அடைந்து இருந்தனர். கல்வி, கலைபயில்வதில் அவர்கள் ஆண்களோடு சரிநிகர் சமானமாக விளங்கினர். சங்க காலத்தில் சிறப்புற்று விளங்கிய புலவர்களின் எண்ணிக்கை 473 என்று கணக்கிட்டுள்ளனர்.[44] அவர்களுள் முப்பது பேர் பெண்பாற்புலவர்களாக உள்ளமை, அக்காலத்தில் கல்வி பெறுவதற்கு மகளிர்க்கு வாய்ப்பு வசதிகள் மிகுதியாக இருந்தன என்பதைத் தெரிவிக்கிறது.

### 420. திருமணமுறை

பண்டைத் தமிழருடைய திருமணம் எளிமையானது; சடங்குகள் அற்றது. அதில் புரோகிதருக்கோ, எரியோம்பலுக்கோ, தீவலம் வருதலுக்கோ இடம் கிடையாது. தமிழருக்கேயுரிய திருமண முறையினை இரு சங்கப் பாடல்கள் தெரிவிக்கின்றன.[45]

திருமணத்திற்குரிய நல்ல நாளையும், நல்ல வேளையையும் பார்த்துத் திருமண நாளைப் பண்டைத் தமிழர் உறுதி செய்தனர்; பெரிதும் வளர்பிறையில் திங்களும்

உரோகிணியும் ஒன்றாகச் சேர்ந்து விளங்கும் நன்னாளையே தேர்ந்து எடுத்தனர்; விடியற் காலையில் திருமணத்தை நடத்தினர் திருமண நாளிற்கு முன்பு வீட்டின் முற்றத்தில் வெண்மணல் பரப்பி, பந்தல் அமைத்து அழகிய தோரணங்கள் கட்டினர்; முரசுகள் முழங்கின. திருவிளக்குச் சுடருடன் ஒளிர்ந்தது; கடவுளைப் போற்றி வழிபட்டனர்; சுற்றத்தார்க்கும் மற்றவர்க்கும் உணவு அளித்தனர்; மணமகளை ஒப்பனை செய்து மணப்பந்தருக்கு அழைத்து வந்தனர்; பூவும் நெல்லும் கலந்த நீர் நிறைந்த குடங்களைச் செம்மை நயமிக்க முதுபெண்டிர் தலைமீது சுமந்து வந்தனர்; குழந்தைகளைப் பெற்ற வாழ்வரசியர் நால்வர் திருமணப் பந்தருக்குள் நுழைந்தனர்; முறைமுறையாகக் குடங்களைப் பெற்று மணமகள் மீது பூவும் நெல்லும் விளங்குமாறு நீரையூற்றி முழுக்காட்டினர்; முழுக்காட்டும்போது, ‘கணவனால் என்றும் விரும்பப்படும் மனைவியாக இருப்பாயக!’ என்று வாழ்த்தினர்; பெற்றோரும் உடன்பிறந்தோரும் ‘பெருமைமிகு வீட்டிற்குரிய தலைவியாய் வாழ்க!’ என்று வாழ்த்தி, தலைவனிடம் தலைவியை ஒப்படைத்து, வாழ்த்தொலி எழுப்பினர்; பிறகு, அன்றிரவே மணமகனும் மணமகளும் தனி அறையில் கூடி மகிழுமாறு விடப்பட்டனர்.

இந்த முறையில் பண்டைத் தமிழருடைய திருமணம் எளிமையும் இனிமையும், அன்பும் பண்பும் நிறைந்ததாக விளங்கியது. இதனை ஆரியச் சார்பற்ற திருமணமுறை என்று பேராசிரியர் பி.தி.சீனிவாச ஐங்கார் போற்றியுள்ளமை[46] இங்குக் கருதத்தக்கதாகும்.

### *4.21.* தமிழரின் இன்றைய நாள் உறவு

தமிழ் இலக்கியங்கள் குடும்பத்தைக் குடி, குலம், குலன் என்ற சொற்களால் குறிப்பிடுகின்றன.[47] கூடி வாழ்ந்தால் குடும்பம் என்ற சொல்பிறந்தது என்பது தெளிவாகிறது. குடும்பம் ஓர் உலகளாவிய நிறுவனமாகும். இது எல்லா நிலையான பண்பாட்டு வளர்ச்சிகளிலும் காணப்படுகிறது. ஆகையால் குடும்பத்தில் தோற்றங்காரணமாக கோட்பாடுகளை நாம் விவாதிப்பது தேவையற்ற ஒன்றாகும். இருப்பினும் ‘மேக்கைவர்’ குடும்பத்தோற்றத்தின் பல கூறுகளைக் கூறுகின்றார். அவை பால் ஒழுக்கம், இனப்பெருக்கம், பொருளியல் ஒழுக்கமைப்பு என்பன.

### *4.22.* பால் ஒழுக்கம்

இது ஒவ்வொரு மனிதனின் அடிப்படை உணர்வாகும். இவ்வுறவை நிரந்தரமாக மற்றும் ஒரு ஒழுங்கு முறையில் பூர்த்தி செய்யக் குடும்பம் தோன்றியது. இக்குடும்பத்தையே மக்கள் அனைவரும் பின்பற்றத் தொடங்கி வாழ்வு நடத்தலாயினர்.

### 4.23. இனப்பெருக்கம்

மனிதவர்க்கம் நிலைத்து நிற்க இனப்பெருக்கம் தேவை. இனப்பெருக்கத்திற்காகவும், குழந்தைகளை வளர்ப்பதற்கு ஆண், பெண் நிரந்தரமான கூட்டுறவின் தேவையினாலும் குடும்பம் தோன்றியது.

### 4.24. பொருளியல் ஒழுங்கமைப்பு

பொருளாதாரத் தேவைகளுக்குப் பெண்களும், குழந்தைகளும் ஆண்களையே நம்பியிருக்கின்றார்கள். இதற்காக நிரந்தரமான குடும்பம் என்னும் நிறுவனம் தேவைப்படுகிறது.[48] சங்க காலம் முதல் இக்காலம் வரை இந்தநிலையே நிலவுகிறது. பொருள் தேடி குடும்பத்தை நடத்துவது தந்தையின் கடனே என்ற வள்ளுவன் வாக்கு இங்கே குறிப்பிடத்தக்கது.

உடற்பசியைத் தீர்த்தல், குழந்தைகளைப் பாதுகாத்தல், வீட்டின் முன்னேற்பாடுகளைச் செய்தல் என்ற மூன்று முக்கிய செயல்களையும் பொருளாதாரவகையில் உதவுதல் மதச்சடங்குகளைப் பயிற்றுவித்தல், ஆரம்பக் கல்வியைப் பயிற்றுவித்தல், சமத்துவத்தை நிலைநாட்டுதல், பண்பாடுகளையும் ஒழுக்கங்களையும் கற்பித்தல், என்பன போன்ற செயல்களையும் குடும்ப அமைப்பினைக் கொண்டு அறியமுடிகிறது.[49]

குடும்பத்தையும் அதில் உள்ள உறவுமுறைகளை நல்வழி நடத்திச் செல்வதற்குத் தந்தைக்கும், தாய்க்கும் முக்கியமான இடம் உள்ளது. அவை தந்தைவழிக்குடும்பம், தாய்வழிக்குடும்பம் என்று பிரித்து அவர்களுக்குண்டான கடமைகளையும், பொறுப்புகளையும் அறிஞர்கள் தெளிவுப்படுத்தியுள்ளார்கள்.

### 4.25. தந்தைவழிக் குடும்பம்

அரிஸ்டாட்டில், பிளேட்டோ ஆகியோர் ஆதரிப்பர். முக்காலத்தில் குடும்பம் என்பது தந்தைவழிப்பட்டதாய் இருந்தது. அதாவது குடும்பத்தலைவர் தந்தையே. அவரே அதிக வலிமை வாய்ந்தவர்; அதிகாரம் பெற்றவர்; பண்டைய ரோமாபுரியில் மகனுக்கே மரணதண்டனை கொடுக்கும் அதிகாரம் தந்தைக்கு இருந்தது.[50]

### 4.26 தாய்வழிக் குடும்பம்

தாய் தலைமை வகித்து நடத்தும் தாய்வழிக் குடும்பம் கட்டுப்பாடற்ற புணர்ச்சி உறவு நிலைக்குப் பிறகு, தாயினுடைய பொருளாதாரச் சமூகப் பாதுக்காப்புத்

தேவையின் காரணம் பற்றி தாய் தலைமைக் குடும்பம் எழுந்தது என்பர், இத்தகைய குடும்பத்தைத் தென்னிந்தியாவில் கேரளத்து நாயர்களிடம் மட்டுமே காணயியலும்.[51]

'தாய்-குடும்பத் தலைவிதான், குடும்பத்தின் ஆதாரம் என்பது, இக்கொள்கையாகும். மிகப் பண்டைய நாளில் குழந்தையின் தந்தை, இவர் என்று ஒருவரைக் - குறிப்பிட்டுக் கூறுவது இயலாத நிலையும் இருந்துள்ளதையும் குறிப்பிடுகின்றார். அதனால் குழந்தைக்குத் தன்னுடைய தாயைத்தான் உணரமுடியும். எனவே குடும்பம் என்னும் அமைப்பிற்குக் குடும்பத் தலைவியாகிய தாயே அடிப்படை என்பதே இக்கொள்கை என்று பிரிப்பால் என்பவர் கூறுகிறார்.

## 4.27. கூட்டுக்குடும்பம்

ஒருவர் தனியாக வாழ்வதற்கும் எல்லா உறவுகளுடன் வாழ்வதற்கும் வேறுபாடுகள் உள்ளன. எல்லா உறவுகளுடன் வாழும் போது இன்பம், துன்பம், கேளிக்கைகள் பல விதமான நிகழ்வுகள் சங்கமிக்கும் இடம்தான் கூட்டுக் குடும்பம் பெற்றோர்கள், குழந்தைகள், பேரக்குழந்தைகள், நெருங்கிய உறவினர்கள் அடங்கியவைதான் கூட்டுக்குடும்பம்.

மணப்பெண்வீட்டில் மோதிரம் போடவில்லையென்று மாமனார் சினம் கொள்ளுவதும், மனைவியைக் கண்டித்ததற்காகத் தாயிடம் கடுங்கோபம் கொள்ளும் மகன்களையும் , மாமியின் கொடுமைகளும், நாத்தினார்களின் பொறாமைகளும். கொழுந்தினி - கொழுந்தநன் குறும்புகளும் கூட்டுக்குடும்பங்களில் தான் பெரும்பாலும் காணயியலும் என்று நாட்டுப்புறப் பாடல் தெரிவிக்கின்றது.[52]

கூட்டுக்குடும்பம் ஒரு மக்கள் குழுவைக் கொண்டது. அவர்கள் ஒரே கூரையின் கீழ் வசித்து, ஒரே அடுப்பில் சமைத்த உணவை உண்டு பொதுவாக சொத்தைப் பெற்று, பிரார்த்தனையில் பங்குப்பெற்று, ஒருவருக்கொருவர் ஒரு குறிப்பிட்ட குருதி உறவை உடையவர்களாக இருப்பார்கள் என்று, காரிவே (carvey) வரையறுக்கிறார்.[53]

## 4.28. கூட்டுக்குடும்பத்தின் குணநலன்கள்

பல உறவினர்கள் வாழும் குடும்பத்தில் பல்வேறு மாறுபட்ட கருத்துகள் ஏற்படும் சூழல் அதிகம் காணப்படும். எல்லா மனிதர்களும் ஒரு செய்தியை ஒரே கண்ணோட்டத்தில் பார்ப்பதில்லை. பல்வேறு கோணங்களில் ஆராயும்போது பல்வேறுபட்ட கருத்துகள் நிலவுகின்றன. ஒரே மனதுடன் அவைகளை ஆதரிப்பதும்

இல்லை; எதிர்ப்பதுமில்லை. இப்படி பலமனங்களைக் கொண்டு வாழும் கூட்டுக் குடும்பத்தில் நன்மைகளும் தீமைகளும் உலவுகின்றன.

### *4.29.* நன்மைகள்

- ➢ அனைவரும் ஒன்றாகச் சேர்ந்தது. ஒரே குடும்பமாக வசிப்பதால் பாதுகாப்புக் கிடைக்கிறது. தனி மனிதனுக்கு ஓர் இடர்வந்தால் அது அனைவராலும் பகிர்ந்து கொள்ளப்படுகிறது.

- ➢ குடும்பத்தின் ஒவ்வொரு அங்கத்தினரும் தத்தம் திறமைக்கு ஏற்ப உழைத்து அதன் பலனைக் கொடுக்கிறார்கள். அனைவரும் சேர்ந்து உழைப்பதால் வேலைப்பளு சுலபமாகிறது. இதனால் குடும்பத்தில் நிம்மதியான வாழ்வுக் கிட்டுவதற்கு வாய்ப்பாக அமைகிறது.

- ➢ பொருட்கள் அனைத்தும் அதிகமான அளவில் மொத்தமாக வாங்கப்படுவதால் அவற்றின் விலை குறைக்கப்படுகிறது, எனவே குடும்பச் செலவு குறைகிறது. இதனால் சிக்கன வாழ்வு மேற்கொள்ள பயனாக உள்ளது.

- ➢ அனைவரும் சேர்ந்து வேலைசெய்வதால் வேலைப்பளு குறைந்து, வேலை சீக்கிரம் முடிவடைகிறது, எனவே அனைவருக்கும் பொதுவான ஓய்வுக் கிடைக்கின்றது.

- ➢ விதவைகளுக்கும், குழந்தைகளுக்கும், வயதானவர்களுக்கும் மற்றும் நோயளிகளுக்கும் பாதுகாப்பு அளிக்கிறது.

- ➢ தியாகம், அன்பு, ஒத்துழைப்பு, தன்னலமற்ற செயல், பரந்த நோக்கு இவை அனைத்தும் குடும்ப உறுப்பினர்களுக்கு ஏற்படுகின்றன.

- ➢ சொத்துக்கள் சிதறாமலும், நிலங்கள் துண்டாகாமலும் தடுக்கப்படுகின்றன.

- ➢ இப்படிப் பல நன்மைகள் இருந்தாலும் சில தீமைகளும் இருக்கத்தான் செய்கிறது.

### *4.30*தீமைகள்

- ➢ உழைத்தாலும் உழைக்காவிட்டாலும் தேவைகள் நிறைவேறிவிடுவதால் இது உறுப்பினர்களிடையே சோம்பல் தனத்தை வளர்க்கிறது.

➢ இளைஞர்கள், குடும்பப்பெரியவர்கள் செய்த தொழிலையே மேற்கொள்ள வேண்டியிருந்தது. அப்பொழுதுதான் குடும்பமானம் காக்கப்படும் என்று குடும்ப பெரியவர்கள் கருதினார்கள்.

➢ தகராறுகள், சச்சரவுகள் ஏற்பட வழி வகுக்கிறது.

➢ குடும்பத்தலைவர் தகுதி இல்லாதவராக இருப்பின் மொத்தக்குடும்பமே அவதிப்படும் நிலை ஏற்படுகிறது.

➢ பெண்களுக்குத் தனிமை மறுக்கப்படுகிறது. இதனால் அவர்களுடைய வளர்ச்சி பாதிக்கப்படுகிறது.

➢ கட்டுப்பாடற்ற இனப்பெருக்கம் எனில், குழந்தைகளாப் பராமரிப்பது, கல்வி வழங்குதல் போன்றவை பொதுவாக இருப்பதால் யாரும் இனப்பெருக்கத்தைக் கட்டுப்படுத்த வேண்டியதின் அவசியத்தை நினைப்பதில்லை

குடும்பத்தில் ஏற்படும் சண்டை, வழக்கிடுதல் வரை போகிறது. கூட்டுக் குடும்பத்தில் பழக்கங்களும், மரபுகளும், கடுமையாக பின்பற்றப்படுவதாலும், மூட நம்பிக்கைக்கு முக்கியத்துவம் அளிப்பதாலும் வழி நடத்திச் செல்பவர்கள் வீட்டின் வயதானவர்களாக இருப்பதாலும், இளைஞர்கள் தன்னம்பிக்கையற்றும், சுயசார்பு தன்மையற்றும் புதிய சிந்தனைகளில் அவர்கள் தங்களை ஈடுபடுத்திக்கொள்ள முடியவில்லை. மேலும் கூட்டுக்குடும்பம் சீர்குலைவிற்கு வழி வகுக்கின்றது. இந்தச் சீர் அழிவைத் தவிர்க்கமுடியாது என்று ஆர்.என்.சர்மா கூறுகிறார்.[54]

கூட்டுக் குடும்பம் நன்மை தீமைகள் நிறைந்த அழகிய உலகம் என்றுகூட சொல்லலாம்; உலகம் எப்படி நல்லது கெட்டதைக் கொண்டு இருக்கின்றதோ அதே போல கூட்டுக் குடும்பத்தில் காணப்படுகின்றன.

மகிழ்ச்சியாக வாழும் உறவுகள் சிற்சில செயல்களால் மகிழ்ச்சிகள் குலைந்து துன்பங்கள் ஏற்படுகின்றது. இதனால் உறவினர்கள் பிரிந்து வாழ நேரிடுகிறது. இப்படிப் பிரிந்து வாழ்வதற்கான காரணங்கள் ஆராயப்படுகிறது.

### *4.31.* தொழில் மயம்

விவசாயமும் குடிசைத் தொழிலும் நன்றாக இருக்கும் வரை கூட்டுக் குடும்பங்கள்செழித்தோங்கியது ஆனால் இன்றோ பல தொழிற்சாலைகள் நிறுவப்பட்டுள்ளன. அவை இயந்திரங்கள் உதவியால் உருவாக்கும் பொருட்கள்.

இவர்களால் போட்டி போட முடியவில்லை. கிராம நிறுவனங்கள் இதனால் பாதிக்கப்படன. எனவே, கிராம மக்கள் நகரங்களுக்கு வேலை தேடிச் செல்ல வேண்டிய நிர்பந்தத்திற்கு ஆளாக்கப்பட்டார்கள், இவ்வாறு இந்த நபர்கள் நகர்வதால் கூட்டுக்குடும்பம் சிதைவுற்றது.

### *4.32.* மேற்கத்திய பாதிப்பு

இந்தியாவில் அதிக அளவில் சமூக நோக்கத்தில் மேற்கத்திய எண்ணங்கள் கருத்துப்பாங்குச் செல்வாக்கும் பெற்றிருக்கிறது. தற்காலத்தில் திருமணச் சடங்குகள், விவாகரத்துகள் மேற்கத்திய முறையே பின்பற்றப்பட்டுள்ளன. நம் எண்ணங்கள் பிரத்தியேகமாக இளைஞர்கள், யுவதிகள், பால்சார்ந்த வகையிலும் குடும்பத்திலும் மாற்றத்தைப் பெற்றிருக்கிறது. தனித்தன்மையின் செல்வாக்கு ஆழமாக இடம் பெற்றுள்ளது.

### *4.33.* செய்தி -பரவுதலும் போக்குவரத்து அதிகரித்தலும்

செய்தி அனுப்புதல், போக்குவரத்து சங்க காலத்தில் சிரமமாக இருந்ததால் குடும்பத்திலுள்ள உறுப்பினர்கள் நன்றாகவே வாழ்ந்து, விவசாயத்தில் ஈடுபட்டிருந்தார்கள் செய்தித்துறை முன்னேற்றம் அடைந்து போக்குவரத்து அதிகரிக்கப்பட்டதால் நகரங்களுக்குச் சென்று வேறு தொழிலையும் செய்து புதிய வீட்டை ஏற்படுத்திக் கொள்கிறார்கள்.

### *4.34.* புதிய நிறுவனங்கள்

முன்பு கூட்டுக்குடும்பம் ஒரு சுய வளர்ச்சியடைந்ததாக இருந்தது. ஆனால் தற்போது உணவிற்குப் பல உணவு விடுதிகள் வந்துள்ளன. குழந்தை வளர்ப்புப்பற்றி கற்றுத்தர பல நிலையங்கள் உள்ளன. குழந்தைகளைக் கவனித்துக் கொள்ள பல அமைப்புகள் உள்ளன. கேளிக்கை நிறுவனங்கள் பல ஏற்பட்டுள்ளன. இதனால் கூட்டுக் குடும்பத்தின் முக்கியத்துவம் குறைய ஆரம்பித்தது.

### *4.35.* மாறிவரும் சமூகக் கண்ணோட்டம்

பெரியவர்களுக்கு, இளைஞர்கள் கட்டுப்படுவது என்பது இயலாமல் போய்விட்டது. ஆர்வமும், திறமையும் உள்ள இளைஞர்கள் அடுத்தவர்களால் தாங்கள் ஆதிக்கம் செலுத்தப்படுவதை வெறுக்கின்றார்கள். படித்த இளைஞர்கள் தனிக்குடித்தனமே செய்ய விரும்புகிறார்கள் குடும்பம் என்பது ஓர் ஒப்பந்தமே இதில் புனிதத்தன்மை

என்பது ஏதும் இல்லை என்ற எண்ணம் வேரூன்றி விட்டது.[55] இதனால் உறவில் சிதைவு ஏற்பட்டு வழக்குகள் நீதி மன்றத்தில் குவிவது குறிப்பிடத்தக்கதாக இன்றைய உறவில் ஏற்படக் கூடிய சிக்கலாக ஆராயப்படுகிறது.

### 4.36. திருமணம்

ஆணும் பெண்ணும் திருமணம் செய்து கொண்டு ஒத்த மனத்துடன் இன்பத்துன்பங்களைப் பகிர்ந்து குடும்பத்தையும் பிள்ளைகளையும் நல்வழியில் நடத்தி சமுதாயத்திற்கு முன்னோடியாகத் திகழ திருமணம் அவசியமாகின்றது.

"திருமணத்தைக் குறிப்பிட கடி, மணம், மன்றல், வதுவை, வரைவு,"[56] போன்ற சொற்கள் இலக்கியங்களில் வழங்கி வருகின்றன. கடி என்பது மணம், காவல் என்றும், வரைவு என்பது வரையறுக்கப்படுவது என்றும், வதுவை என்பது வதிதல் என்றும்; மன்றல் என்பது மன்றில் நடைபெறும் விழா என்றும் பொருள் புலப்படுத்துகின்றன.

### 4.37. திருமணத்தின் வகைகள்

வடமொழியாளரும், இலக்கண ஆசிரியரும் பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், அசுரம், இராக்கதம், பைசாசம் போன்ற எண்வகை மணமுறைகளைக் குறிப்பிடுகின்றனர். சமூகவியலாளர்கள் ஒரு தாரமணம், பலதாரமணம், பலகணவமணம், குழுமணம், கொள்வினை மணம், பரிமாற்றமணம், உடன்போக்குமணம், வலிந்தமணம், சேவைமணம், அனுலோமம், பிரதிலோமம் எனப் பலவகை மணமுறை பாகுபடுத்தியுள்ளனர்.[57]

### 4.38. திருமணத்தின் இயல்பு

வாழ்க்கையில் நிகழும் இன்பதுன்பங்களையும் வெற்றி தோல்விகளையும் பகிர்ந்து கொள்ள நல்ல உறவு வேண்டும் என்ற எண்ணம் போன்ற இன்ன பிற காரணங்களுக்காக மனிதர்கள் மணம் புரிந்து கொள்கின்றனர்.[58]

திருமணத்தில் விலக்குதல், முன்னுரிமை, விதியமைப்பு எனும் மூவகை விதிகள் நடைமுறைப்படுத்தப்படுகின்றன.

### 4.39. விலக்குதல்

அகமணம் புறமணம் என இருவகைப்படும். முன்னுரிமையானது தங்கள் குழுவில் மணத்திற்குரிய பெண்ணோ ஆணோ இருப்பின் அவரையே மணக்கும் உரிமை

அறிவிப்பதனைக் குறிக்கும். முறைமணம் என்று இதனை நாட்டுப்புறமக்கள் குறிப்பர். நாட்டுப்புறங்களில் தாய்மாமன் மகளை மணப்பது சிறப்பாகக் கருதப்படுகின்றது. விதியமைப்பு என்பது தேர்ந்தெடுத்துப் பெண்ணை மணந்து குடும்ப வாழ்க்கை நடத்தி குழந்தைகளைப் பேணுவதனைக்குறிக்கும்.[59]

### 4.40. ஒரு தாரமணம்

குடும்பம் தழைத்தோங்கக் காரணங்களில் மிகவும் முக்கியமானதாக கருதப்படுவது ஒருவனுக்கு ஒருத்தி என்ற உயரிய கொள்கையாகும். நம் தமிழ் மண்ணுக்கே உரித்தான சொத்தாகவே கருதப்பட்டது. 'பலதாரமணக் குடும்பத்தில் இல்லாத பெண்களின் சுதந்திரமும், சமுத்துவம், சுயமரியாதையும் ஒருதாரமணக் குடும்பத்தில் இருப்பதால் இம் மணமுறை சிறப்பாகக் கருதப்படுகிறது.[60] என்று ஏங்கல்ஸ். கூறுகிறார்.

கிராமங்களில் இம்மணத்தைப் பெரிதும் போற்றுகின்றனர். பெற்றோர் பெண் பார்த்து உற்றாரும் உறவும் கூடி மணமுடிப்பது ஒருதார மணத்தில் மட்டும்தான் உள்ளது. திருமண வாழ்த்தின் போது 'இராமர், இலட்சுமணர் என்றும் மணமகனைக் குறிப்பிடுவது ஒருதார மணத்தினைச் சிறப்பிக்க கருதிதான், சக்களத்திச்சண்டைகளும் பரத்தையர் கண்டனமும்'[61] ஒருதார மணத்தின் சிறப்பையே வலியுறுத்துகின்றன.

### 4.41. பலதாரமணம்

எந்த ஒன்றையும் அளவுக்கு அதிகமாக பேராசைப் படும்போது அது கண்டிப்பாக துன்பத்தில்தான் முடியும்; அது போல ஒரு ஆண் தன் மனைவியை விட்டு பிற பெண்களிடம் நாடிச் செல்வது பலதாரமணத்திற்கு வழிவகுக்கிறது. இந்த முறை எல்லா இடங்களிலும் இருக்கிறது. போலிப் பெருமைக்காகவும் பொருந்தாதத் தேவைக்காகவும் இம்மணம் உருவாகக் காரணங்களாக அமைகின்றன.

"நாட்டுப்புறங்களில் பெண்கள் பலதார மணத்தைப் பெரிதும் வெறுக்கின்றனர். மறு மணத்தை ஆதரிக்கும் மக்கள், ஒருத்தி இருக்கையில் இரண்டாவது மணத்தைப்புரியும் ஒருவனை முறையான காரணங்கள் இன்றேல் தடுக்கின்றனர். முதல் மனைவி தன் கணவரின் இரண்டாவது மணத்தை அறியும் போது 'பூநாகம் தீண்டாதோ;' என்று சபிப்பதுமுண்டு. 'என்னை வாடுமாறு விட்டு விட்டாயே' என்று வருந்தும் மனைவியரும், 'சூடிக்கழித்த மலரை யார் சூடினால் என்ன' என்று ஆறுதலடையும் மனைவியரும் உள்ளனர். சக்களத்தி சண்டைகள் பலதார மணத்தின் மீது கொண்ட வெறுப்பினைச் சுட்டுவதாக ஆராயப்படுகின்றது.[62]

### 4.42. முறைமணம்

சொந்தம் விட்டுவிடக் கூடாது; சொத்துகள் அயலாருக்குச் செல்லக் கூடாது நல்லவையோ கெட்டவையோ எதுவாக இருந்தாலும் சொந்தபந்தங்களிலேயே நிகழட்டும்

இதுபோன்ற காரணங்களால் முறை மணம் நிகழ்கிறது. இம்மணமுறைக்கு மூவகைக் காரணங்களைக் கூறுகின்றனர். *(1)* மணப்பெண்ணிற்கு அதிகளவில் பரிசுத்தொகை கொடுக்கவேண்டும் என்ற கட்டாய நிலையினின்றும் விடுபடல்; *(2)*குடும்பச் சொத்து அயலாருக்குச் சென்று விடாமல் தடுத்தல்; *(3)* சாதி அமைப்பைக் காப்பாற்றிக் கொள்ளல், இவ்வுறவுச் செய்தி திருநெல்வேலி மாவட்டத்தில் இம்முறையே அனைத்து சாதியரிடமும் பரவலாக உள்ளதாக கூறப்படுகிறது.[63]

### *4.43.* பரிசு மணம்

பெண் _ வீட்டாரின் குடும்ப சூழலைக் கருத்தில் கொண்டோ அல்லது விருப்பப்பட்டோ மணமகனின் பெற்றோர் மணப்பெண்ணுக்கு பொருட்களாகவோ பணமாகவோ கொடுப்பது வழக்கத்தில் இருந்தது எனச்சொல்லலாம். பரிசம் என்ற சொல் பரிசில், பரிசு தொகையைக் குறிக்கும் என்ற சொற்களில் இருந்து பிறந்திருக்கலாம்.

"பரிசம் எனப்படும் தொடுவிலையை சங்ககாலத்தில் முலைவிலை என்றும் தண்டழை விலை என்றும் அழைத்தனர்.[64] மாமன் கொடுத்த பரிசத்தைக் கண்டு மகிழும் பெண்களும் இருக்கிறார்கள்; அதே நேரத்தில் பரிசம் கொடுத்தால்தான் திருமணம் நடைபெறும் ஆண்களும் இருக்கிறார்; அதனால் திருமணம் தடைப்படுவதையும், நின்றுவிடுவதையும் அன்றாட நிகழ்வாகவும் நடைபெறுகிறது. இதிலிருந்து உறவுகள் ஒற்றுமையாய் இருக்க வேண்டும் எண்ணும் செய்தி ஆராயப்படுகிறது.

### *4.44.* உடன்போக்கு மணம்

இரு வீட்டாரும் திருமணத்திற்கு ஒத்துக்கொள்ளாமல் காதலனும் காதலியும் எவருக்கும் _தெரியாமல் ஓடிச்சென்று திருமணம் செய்துகொள்வது வழக்கமான ஒன்றாகிறது, 'இற்செறிப்பு ஊரலர், வெறியாட்டு, நொதுமலர், வரைவு என்று இன்னாச் சூழ்நிலைகளைக் கடத்தற்கு இரண்டு வழிகள் உள்ளன. ஒன்று அறத்தோடு நிற்கை; ஏனையது உடன் போக்கு இவற்றுள் ஒன்று நிகழ்ந்தால் மற்றொன்று நிகழாது.

இரண்டில் ஒன்றே களவு நாடகத்தில் இறுதிக் காட்சியாகும்.[65]

இதுபோன்ற பல மணங்கள் இருப்பதால் மனிதனுடைய ஆசையெல்லாம் மகிழ்ச்சியாக வாழவேண்டும் என்பதுதான். காலச் சூழல்கள் காரணமாக துன்பங்களே காதல் உறவில் ஏற்படுகின்றன என்பதே வெளிப்படையாகத் தெரிகிறது.

### 4.45. திருமணச் சடங்கில் உறவுகள்

திருமணம் அனைவருக்கும் பொதுவானது என்றாலும் திருமணச் சடங்குகள் நாட்டுக்கு நாடு; மதத்துக்குமதம்; சாதிக்கு சாதி முற்றிலும் மாறுபட்டு காணப்படும்.

"தமிழகத்தில் தொல்காப்பியர் காலத்திற்கு முன்னர் திருமணச் சடங்குகள் இல்லையென்றும் மக்களிடையே பொய்யும் வழுவும் தோன்றிய பின்னரே ஐயர் எனப்படுவோர் அச்சடங்குகளை வகுத்தனர்."[66] என்று அறிகிறோம்.

"சங்க காலத்தில் திருமணச் சடங்குகளில் ஆரியப் பூசாரிக்குப் பங்கில்லை என்று மணமகட்குத் தாலி கட்டும் வழக்கம் இல்லை"[67] என்றும் அறிகிறோம். ஆரியப்பூசாரியின் தொடர்பால் பிற்காலத்தில் திருமணச் சடங்குகள் அதிகரித்தன, அதையே இன்றுவரை திருமண உறவில் கடைப்பிடித்து வருவதாகக் கூறப்படுகிறது.

### 4.46. பெண்பார்த்தல்

ஒரு குறிப்பிட்ட நாளில் மணமகன் வீட்டார் பெண்ணைப் பார்க்க வருவதாக ஒருநபர் அல்லது அஞ்சல் மூலமாக செய்தி அனுப்ப, பெண்வீட்டார் விருந்து ஏற்பாடு செய்து கொண்டு வரவேற்பதற்குத் தயாராக இருப்பர். அன்று பெண்ணைப் பார்ப்பதுடன் பெண்ணின் குணநலன்களையும் சீர்சிறப்புகளையும் கேட்டறிந்து கொள்வர். சங்க காலம் முதல் இவ்வழக்கம் தொடர்ந்து வருகின்றது.[68] என்பது நிதர்சன உண்மை.

ஒரு பெண்ணைப் பார்க்க பலர் ஊர்களில் இருந்து வரினும் பிடித்தவர்களே பெண்ணை மணப்பதுண்டு. பெண்ணைப் பார்ப்பவர்க்கெல்லாம் கொடுக்கவேண்டும் என்றோ, பார்த்தவர்களெல்லாம் மணக்கவேண்டும் என்றோ கட்டாய நிலை இல்லை.

### 4.47. வெற்றிலை மாற்றி உறுதிப்படுத்துதல்

மணமகனுக்கும் அவனது பெற்றோருக்கும் பெண்ணைப் பிடித்திருக்கிறது என்று சொன்னதும், இருவீட்டாரும் ஒரு நல்ல நாளன்று திருமணத்தை வைத்துக் கொள்ளலாம் என்று முடிவெடுப்பர். இந்த முடிவை 'நிச்சயத்தாம்பூலம்' அன்றுதான் முவெடுப்பர் 'இதனைக் கிராமங்களில் 'உறுதிப்படுத்தல்' 'நிச்சயம் செய்தல் என்றும அழைப்பர். பட்டுச் சேலை, பூ, தேங்காய், வெற்றிலைப் பாக்கு, நகை ஆகியவற்றை எடுத்து வந்து மணமகன் வீட்டார் பெண்வீட்டிற்குத் தங்கள் உறவினர்களுடன் வந்து மணப்பெண்ணை வாங்கச்சொல்வார்கள், பிறகு, அந்தச் சேலை மணப்பெண் அணியுமாறு செய்து சிறு விருந்துடன் நடைபெறும்.

தமிழ்ப்பார்ப்பனாரை அழைத்து நல்ல நேரம் பார்க்கும் வழக்கத்தையும், முகூர்த்தத்தைக் குறிக்கும் முறைகளையும் மண வாழ்த்துப் பாடலாக நாட்டுப்புற இலக்கியங்கள் உரைக்கின்றன. சங்ககால, முதல் இவ்வழக்கம் தொடர்ந்து வருவதை

அறிகிறோம். "சோதிடர் மூலம் பொருத்தங்கள் பார்த்த பின்னரே இச்சடங்கு நடைபெறும். ஒன்பது, பத்து, இருப்பத்தொன்று, நாற்பத்தொன்று, பொருத்தங்களுடன் கயிற்றுப் பொருத்தமும் குழந்தைப் பேற்றுக்கான வயிற்றுப் பொருத்தமும் பார்க்கப்படும். சோழி, பாசை, ஓடு, பஞ்சாங்கம், போன்றவற்றின் மூலம் இப்பொருத்தங்கள் கணிக்கப்படும்.[69]

நிச்சயத்தாம்பூலம் முடிந்தவுடன் திருமண ஏற்பாடுகளைச் செய்வர். தங்கத்தை உருக்கி தாலி செய்யும் சடங்கினையே 'பொன் உருக்குதல்' என்பர். இச்சடங்கு மணமகனது வீட்டில் நடைபெறும். அடுத்து, திருமணத்தேதியை உறுதி செய்த பிறகு இருவீட்டினரும் அவரவர் உற்றார் உறவினருக்கும் தெரிவித்து அவர்களை அழைப்பதை 'மண அழைப்பு என்பர். முரசறைந்தும் வாய்மூலமாகவும் மணச்செய்தியை அறிவித்த நிலைமாறி மடல் மூலம் அறிவிக்கும் நிலை வந்துவிட்டது. மேலும் ஒரு படிமேலாக அவசரத்தின் கோலமாகத் தொலைபேசியில் அழைக்கும் நிலையும் வந்துவிட்டது.

அடுத்து, மணநாளுக்கு முன் நாள் இரவோ அல்லது மணநாளன்று விடியற் காலையிலோ மணவரையை அழகுப்படுத்த தேக்கு, அகில், சந்தனம் போன்றவற்றை வெட்டிப் பந்தற்கால்களாகக் கொண்டு வருவதும், பல வண்ணச் சேலைகளைக் கட்டி, பூக்களால் அணி செய்தும் விளக்கேற்றி நாள் கலசம், பேய்க்கரும்பு , வாழை மரமும், பாக்குமரமும், கட்டி அழகு செய்வர். அரசமரம் வைத்தல் முக்கியமாகக் கருதப்படுகிறது. அரசமரக் கிளையொன்றவெட்டி அதற்கு மஞ்சளும் பூவும் வைத்து மணவரையின் தென்மேற்கு மூலையில் நட்டுவைத்து 'அரசாணி வைத்தல்' அல்லது 'அரசுநடல்' என்று அழைப்பர். பழங்காலத்தில் அரசமரத்தடியை மன்றங்களாக்கித் திருமணம் நிகழ்ந்ததின் எச்சமாக இவ்வழக்கம் உள்ளது என்பர். இவ்வழக்கம் அனைத்து சாதியினரிடமும் காணமுடிகிறது.

### *4.48.* காப்பு அணிதல்

பொதுவாகவே தீமைகளிலிருந்து விடுபட்டு மகிழ்ச்சியாக இருக்க மந்திரத் தாயத்தைக் கட்டுவது சிலரிடம் வழக்கமாக உள்ளது. அதுவும் இச்சடங்குகளில் மணமக்களைக் காப்பதற்காகக் கட்டும் கயிற்றினைக் 'கங்கணம்' அல்லது காப்பு என்பர். "காப்பு" என்ற சொல்லின் பொருளே இதனைச் சுட்டும். மணமக்கள் மணவறையில் அமர்ந்திருக்கும் போது, மஞ்சள் துண்டு இணைக்கப்பட்ட கயிற்றினை மணவினை நிகழ்த்தும் பெரியவர் எடுத்து மணமகனின் வலது மணிக்கட்டிலும் மணமகளின் இடது மணிக்கட்டிலும் கட்டுவதுண்டு இவ்வழக்கம் சங்க காலந்தொட்டுத் தொடர்ந்து வருகின்றது.[70] மணநாளுக்கு மறுநாள் கங்கணத்தை அறுத்தெடுக்கும் சடங்கினை காப்பறுத்தல் என்பர். இப்படி திருமணச் சடங்குகளில் படிப்படியாக மணமகன் மணமகள் கழுத்தில் தாலி கட்டும் வரை மந்திரம் ஓதி மணமக்களை

வாழ்த்தும் சடங்குகளும்; மணநாள் முன்னிரவும், மணநாள் விடியற்காலையில் இருந்து தாலிக் கட்டிமுடியும் வரை மேளம் கொட்டி நாதஸ்வரம் ஊதும் பழக்கம் இன்று வரை தொடர்கிறது. அடுத்து, முளைப்பாரி வைத்தலும் திருமணச் சடங்குகளில் ஒன்று. சிறிய மட்கலங்களில் மண்ணும் எருவும் இட்டு, மணமக்களின் கையால் நவதானியங்களைப் பெய்து, நீர்விட்டு வளர்ப்பதனை 'முளைப்பாறி வளர்த்தல் என்பர். மூன்று நாட்களுக்குப் பிறகு மணப்பெண் மற்றும் சில பெண்களுடன் கிணறு அல்லது ஆறு போன்ற நீர்நிலைகளில் முளைப்பாரியினைக் கரைப்பதை 'முளைப்பாரி கரைத்தல்' என்பர், இவ்வழக்கம் சிலப்பதிகாரக் காலம் முதல் தொடர்ந்து நடைபெற்று வருகின்றது.

### *4.49.* தாலிக்கட்டுதல்

மணமகளின் கழுத்தில் கட்டப்படும் மங்கல அணி 'தாலி' என்று அழைக்கப்படும். இத்தாலியில் பெரும்பாலும் இரண்டு சிறகுகளும் ஒரு பிள்ளையாரும், மஞ்சள் கயிற்றில் கோர்க்கப்பட்ட தாலியினைப் பெரிதும் மணமகனின் மூத்த சகோதரியே கட்டுவதற்கு உதவுவதுண்டு. சங்ககாலத்தில் இவ்வழக்கம் இருந்ததற்கான சான்றுகள் இல்லை. பத்தாம் நூற்றாண்டில் இருந்துதான் தமிழர்கள் தாலி கட்டும் வழக்கத்தினைக் கொண்டனர் என்பது குறிப்பிடத்தக்கது.

தாலிக்கட்டி முடிந்தபிறகு அம்மிமிதித்து வானத்தை நோக்கி அருந்ததி பார்த்தல்; மணமக்களை மணவறையில் அமரவைத்து மங்கலப் பெண்டிரும் முதியவரும் வாழ்த்துதல் மரபு, சங்ககாலம் தொட்டு இவ்வழக்கத்தினை இலக்கியங்கள் வாயிலாக அறியப்படுகிறது. இவ்விழாவினால் பல உறவினர்கள் ஒற்றுமையாக கூடி நடத்தப்படுவதாக அமைகிறது. உறவுகள் செழித்து வளர இதுபோன்ற விழாக்கள் அமைகிறது. திருமணச்சடங்குகளினால் நம்முடைய பண்பாட்டை மாற்றக்கூடாது என்பது உண்மை. இவற்றிலிருந்து மாறி நம் மனம்போனபடி வாழ்ந்தால் வருங்கால தலைமுறையினருக்கும், நம்முடைய பண்பாடும் பழக்கவழக்கமும் தெரியாமல் போய்விடும். எனவே, அடுத்துவருகின்றவர்க்குச் சொல்லிக்கொடுப்பது நமது கடமையாக உணர்த்தப்படுகிறது.

### *450.* உறவுமுறைகள்

எல்லா உயிரினங்களும் உறவுமுறைகள் இல்லாமல் வாழமுடியாது. என்ன என்ன உறவுமுறைகள் என்பது அந்தந்த உயிரினங்களுக்குத் தெரியாது. அவற்றையும் மனிதன் இனங்கண்டு சொல்கிறான்.

ஆண், பெண் சேர்ந்து உறவுகொண்டு வாழ்தல் குடும்பம் என்பர். ஆண் வீட்டு உறவுமுறைகள் மற்றும் பெண் வீட்டு உறவுமுறைகள் என்று கூறுவர்.

"சமுதாயக் குடும்ப நடைமுறை அடிப்படையில் இருந்து உறவுமுறையின் பெயர்களை ஆர்.பெரியாழ்வார் சுட்டுவது நோக்கத்தக்கது,

1. குருதிக் கலப்பாலும்
2. பெற்றோர் கால்வழியாலும்
3. மணவினையாலும்
4. ஒரே குழுவினர் ஒரே இடத்தில் வாழும் தன்மையாலும் உறவுமுறை அமைகின்றது."[71]

இந்நால்வகை அமைப்பு உறவுமுறையின் அடிப்படை என்றும் இவற்றை சார்ந்தே உறவுகள் அத்தனையும் உருவாகின்றன என்றும் கூறலாம். உறவுமுறைகளும் நெறிகளும் பரம்பரை மரபுகளை ஒட்டியே அமைகின்றன. இரத்த உறவு என்றும், மணவுறவு என்றும் உறவுகளை இருவகையாப் பகுத்துக்கொள்வர். உறவினர்கள் கொள்ளும் உறவினை அடிப்படையாகக் கொண்டு,

1. அன்பு கொள்ளும் உறவு
2. போராட்ட உறவு
3. மதிக்கத்தக்க உறவு
4. கேலிக்குரிய உறவு
5. தழுவல் உறவு
6. தள்ளல் உறவு என ஆறு வகைகாளாகப் பகுக்கலாம்.

### 4.51. அன்பு கொள்ளும் உறவு

நெருங்கிய அன்பும் பாசமும் கொண்ட உறவுகளாத் தாயும் குழந்தைகளும், தாயும் மகளும், தந்தையும் குழந்தைகளும், பாட்டன்மார்களும், பேரக்குழந்தைகளும், பாட்டிமார்களும், பேரன்மார்களும், தாய்மாமன், மருமக்கள், அத்தையும், உடன்பிறப்புகள் போன்ற உறவுகளை ஆராயலாம்.

### 4.52. தாய்

குழந்தைகள் மீது அன்பும் பாசமும் அரவணைப்பும் முதலில் காட்டுவது தாய் என்ற உயரிய பெண். விதை இல்லாமல் எதுவும் முளைப்பதில்லை என்பது போல் தாய் இல்லாமல் மனிதன் பிறப்பதில்லை என்பதும் உண்மை; அந்த உண்மை உயிர்தான் பிள்ளைகளைப் பெற்று நல்முறையில் வளர்த்து எது பிடிக்கும், எது பிடிக்காது என்று வளர்ப்பவள் தாய்தான்.

ஒவ்வொரு பருவத்திலும் பிள்ளைகளுக்குத் தேவையான தேவைகளைப் பூர்த்தி செய்வதும்; திருமணம் செய்து வைப்பதும்; பேரக் குழந்தைகளைப் பார்த்து மனம் மகிழ்வதும்; தாயினால் மட்டுமே முடியும் என்பது உண்மை.

எனவேதான் “தாயிற் சிறந்த தோர் கோயிலுமில்லை[72] என்ற முதுமொழியைக் கூறுகின்றனர்.

*453* தந்தை

தாயின் அன்பு பாசத்தைவிட தந்தையின் வளர்ப்பு சிறிது மாறுபடும். அன்போடு சேர்ந்து கண்டிப்பும் இருக்கும். குடும்பத்தலைவன் என்பதால் பொறுப்புகளும் கடமைகளும் அதிகமாக காணப்படுகிறது. பிள்ளைகள் முறைதவறி தீய வழியில் சென்றுவிடக் கூடாது என்பதற்காகத்தான் அந்தக் கண்டிப்பு அவசியமாகிறது.

ஆக தாயும் தந்தையும் குடும்பத்தை நல்வழியில் நடத்திடவும், பிள்ளைகளைப் பேணிப் காப்பதிலும் சமுதாயத்திற்கு முன்மாதிரியாக இருக்க இவ்விரண்டு உறவுகள் சிறப்பிற்குரியதாகக் கருதப்படுகிறது. உயர்ந்த உறவாகவும் உணர்த்தப்படுகிறது.

இவ்விரண்டு உறவுகள் மட்டுமின்றி தந்தைவழி பாட்டன், பாட்டி தாய்வழி பாட்டன், பாட்டி என்ற உறவுகள் தங்களுடைய பேரக்குழந்தைகள் மீது மிகுந்த அன்பும் பாசத்தையும் கொட்டி வளர்ப்பார்கள். இவ்விரு உறவுகளிலும் அன்பும் பாசமும் வெளிப்படுகிறது.

*455.* தாய்மாமன்

இந்த உறவு உரிமைக்கொண்ட உறவாகும், குழந்தைகளிடம் தாய்மாமன் கொள்ளும் அன்பும் அக்கறையும் சிறப்பானது. தனது கடமையாகக்கொண்டு தங்கை (அ) தமக்கையின் குழந்தைகளுக்கு உதவிட ஓடோடி வரும் உறவாக அமைகிறது.

குழந்தைக்கு ஓராண்டு ஆனதும் கோயிலுக்குக்கொண்டு சென்று காதுகுத்தும் போதும் குழந்தைக்குத் தாய்மாமன் ஆடைகளையும் அணிகலன்களையும் வாங்கி அவ்விழாவினைச் சிறப்பிக்க தாய்மாமன் உறவு மிகவும் அவசியமகிறது. பிறப்புமுதல், இறப்பு வரை தாய்மாமனின் உறவு மிகவும் அவசியமானது என்று ஆராயப்படுகின்றது.

*455.* அத்தை

“ஒரு பெண் தன் உடன்பிறந்தாரின் குழந்தைகள் மீது அன்பு செலுத்தத் தவறுவதில்லை. அடுத்து அக்குழந்தைகளின் வளர்ச்சியில் அன்பு பாசத்தைக் காட்டுவார்கள்.

*456.* உடன்பிறந்தவர்கள்

இவர்களின் பாசம் உண்மையில் அளவிடற்கரியது. அண்ணன் தம்பி, அக்காள் தங்கை இந்நான்கு உறவுக்குள்ளேயும் இன்பத்துன்பம், கேலி, கிண்டல், கோபதாபம்,

விட்டுக்கொடுத்தல், தியாகம், பொறாமை, இது போன்ற நிகழ்வுகள் அடிக்கடி நடைபெறுவதாக உணர்த்தப்படுகிறது.

### 4.57. போராட்ட உறவுகள்

பொறாமையும் வெறுப்பும் கொண்டு பெரும்பாலும் போராட்டம் கொள்ளும் உறவாக மாமியார், மருமகள், சக்களத்தி, மாற்றாந்தாய் போன்ற உறவுகளாகக் கூறப்படுகிறது.

### 4.58. மாமியார் மருமகள்

மாமியார் மெச்சிய மருமகள் இல்லை என்றும்; 'வேண்டாத பெண்டாட்டி கைப்பட்டாலும் குற்றம், கால்பட்டாலும் குற்றம் என்ற பழமொழிகள் மாமியாரும் மருமகளும் கொள்ளும் பொதுவான உறவைச் சுட்டுகின்றன.

'ஆப்பை (அகப்பை)யும் துடுப்பையும் வழித்த கைகள் பாடையிலே ஆடுகின்றன' என்று கூறுவதுடன், மாமியாரின் பிணத்தைத் தூக்கிச் செல்லும்போது தன் கணவனுக்கு எவ்வளவு சமைக்க வேண்டும், என்ன கறி வைக்க வேண்டும் என்றும் கேலியாக வினவுகின்றாள். இன்று மாமியார் மருமகள் சண்டை மிகுந்து காணப்படுகிறது என்று சொன்னால் அது மிகையாகாது.

### 4.59. சக்களத்தி

கணவன், மனைவி உயிருடன் இருக்கும் போதே இன்னொரு பெண்ணை முதல் மனைவிக்குத் தெரிந்தோ (அ) தெரியாமல் திருமணம் செய்துக்கொள்ளும் போது இரு பெண்களுடன் மகிழ்ச்சியாக வாழமுடியாது என்பதே நிதர்சன உண்மை. ஏதாவதொரு சூழலில் இருவருக்குள்ளும் சண்டைச் சச்சரவுகள் ஏற்படுவது பொதுவான நியதி ஆகிவிட்டது.

சகக்கிழத்தி என்ற சொல்லின் திரிபே சக்களத்தி என்பர். பலதார மணத்தால் வந்த ஒருவரின் மனைவியர் தங்களுக்குள் வெறுப்பும் பொறாமையும் கொள்வது இயற்கைதான். கணவனின் அன்பை யார் பெறுவது என்ற போட்டி, மனப்பான்மையும், போட்டியாக வந்து வாய்த்தாள் என்ற பகையுணர்ச்சியும் இவர்கள் கொண்டுள்ளனர்.

### 4.60. மாற்றாந்தாய்

மாற்றாந்தாயார் கொடுமையைப் பற்றிக் கடுமையாகவே கருத்துகள் நிலவி வருகின்றன. சக்களத்திகளுக்குள் பொறாமை இருப்பது போன்று சக்களத்திகளின் குழந்தைகள் மீது பொறாமை ஏற்படுவது இயற்கையாகி விடுகின்றது. வயது வந்த ஒரு பெண்ணை எப்படியாவது வீட்டிலிருந்து துரத்திவிட்டால் போதும் என்ற கருத்துடன் ஒரு மாற்றாந்தாய் நடந்து கொண்டதைப் பெண் ஒருத்தி கண்டிக்கும்போது 'சண்டாளி' என்று பழிக்கிறாள்.[73]

### 4.61. தாயும் மகனும்

தாய் மகன் உறவு மிக நெருக்கமான அன்புடையது என்றாலும் திருமணத்துக்குப் பின்னர் ஒருவன் தன் மனைவியையே சார்ந்து வாழுகின்றான். தாயும் மனைவியும் சண்டையிடும்போது அவன் மனைவிக்கு ஆதரவாகவே பேசுகிறான். அத்துடன் 'நரைமுடியப் பிடுங்கி விடுவேன்' என்று தாயையே எச்சரிப்பதும், சில நேரங்களில் உதைக்க வருவதும் உண்டு. 'தாய்க்குப்பின் தாரம்' என்ற நிலை மாறி, மனைவியே முதன்மை பெறுகின்றபோது தாயும் மகனும் மோதிக்கொள்கின்றனர்.

### 4.62. மதிக்கத்தக்க உறவுகள்

குடும்பத்தில் மதிப்பும் மரியாதையும் கொண்டு பழகும் உறவுகளும் உண்டு. அவர்களில் மாமனார், மருமகள், மாமியார், மருமகன் போன்ற உறவுகள் முக்கியமானவைகளாகக் கருதப்படுகின்றன.

### 4.63. கேலிக்குரிய உறவுகள்

குடும்பத்தில் கேலிக்குரிய உறவினர்களாக அண்ணி, கொழுந்தி, கொழுந்தன், மச்சான், மைத்துனர், சம்மந்தி, அத்தை, மருமகன் போன்றவர்கள் விளங்குகின்றனர்.

### 4.64. கணவன்-மனைவி

'கணவனை இழந்தோர்க்குக் காட்டுவது இல்'[74] என்று சிலப்பதிகாரம் கூறுவது போல் கணவர்களைத் தழுவியே மனைவியர் வாழுகின்றனர். பாசம் பொழிவதிலும் அருமையை அறிவதிலும் கணவரைப் போன்று பிறர் இல்லை என்று குறிப்பிட்டுக் கூறுகின்றனர்.

### 4.65. பெற்றோர்-பிள்ளைகள்

பிள்ளைகள், வளர்ந்து வாழ்க்கையை அமைத்துக் கொள்ளும் வரை தங்கள் பெற்றோரைத் தழுவி வாழ்கின்றனர்.

பிள்ளைகளின் ஒவ்வொரு காலக்கட்டத்திலும் அவர்களுக்குத் தேவையானவற்றை செய்வதும்; பிள்ளைகளின் ஆசைகளையும் இலட்சியங்களையும் நிறைவேற்றுவது பெற்றோரின் கடமை.

### 4.66. தழுவல் உறவுகள்

உறவுமுறைகள் பல வகைகள் இருந்த போதும் இந்த உறவுகளுக்குள் அன்பு, பாசம், அரவணைப்பு, கண்டிப்பு அதிகமாக காணப்படும். குடும்பத்தில் ஒருவரையொருவர் தழுவியும் சார்ந்தும் வாழவேண்டிய உறவுகளில் கணவன்-மனைவி, பெற்றோர் பிள்ளைகள் உறவுகளாகும்.

### 4.67. தள்ளல் உறவுகள்

குடும்பத்தில் தேவையில்லாதது என்றும் விலக்கப்பட வேண்டும் என்றும் கருதத்தக்க தள்ளல் உறவுளாக விதவையர், மலடியர், மணமுறிவு பட்டோர், பரத்தையர், வைப்பாட்டியர்_போன்றவர் விளங்குகின்றனர்.

### 4.68. விதவையர்

கணவனை இழந்த பெண்டிர், கைம்பெண், இழிகல மகளிர் ஆளில் பெண்டிர், விதவை, முண்டச்சி, தாலியறுத்தவள், வெள்ளைச்சீலைகாரி என்று பலவாறு சுட்டப்படுகின்றனர். கையறு நிலை, கைம்மை நிலை, தாபதநிலை, ஆனந்தப்பையுள் என்று அவர்களது நிலைமையைப் பழந்தமிழ் இலக்கண இலக்கியங்கள் சுட்டுகின்றன. விதவை மறுமணம் பரவலாகச் சமுதாயத்தில் கடைப்பிடிக்கப் படாததால் விதவையர் சமுதாயத்தில் நடைபெறும் மங்கல நிகழ்ச்சிகளில் தள்ளி வைக்கப்படுகின்றனர்.

புரட்சிக்கவி பாரதிதாசன் கைம்மைக் கொடுமையைப் பற்றி கூறும்போது,

> "கூண்டிர் கிளி வளர்ப்பார் - இல்லத்தில்
> குக்கல் வளர்த்திடுவார்,
> வேண்டியது தருவார்; அவற்றின்
> விருப்பத்தை யறிந்தே!
> மாண்டவன் மாண்டபின்னர் - அவனின்
> மனைவியின் உள்ளத்தை
> ஆண்டையர் காண்பதில்லை ஐயகோ
> அடிமைப் பெண்கதியே"[75]

என்று விதவையின் நிலையைப் பற்றி மனக்குமுறல்களோடு வெளிப்படுத்துகிறார்.

### 4.69. மலடியர்

மக்கள் மலட்டுத் தனத்தை ஒரு சாபமாகக் கருதுவதுடன், புத்திரப் பேறுதான் வாழ்க்கையின் நோக்கம். வாழ்க்கையின் நிறைவு என்றும் 'புத்' என்னும் நரகத்தில் விழாமல் பெற்றோரைக் காக்கும் என்றும் நம்புகின்றனர். மலடியர் சமுதாயத்தில் தள்ளி வைக்கப்பட்டனர். 'மலடி' என்று 'இருசி' என்னும் இகழப்பட்டனர்.

### 470. மணமுறிவு பட்டோர்

மணமுறிவுபட்டவர்களை 'வாழாவெட்டி' என்று சமுதாயம் பழிப்பதுண்டு. சட்டம் மூலமாகவோ, சமுதாயத்தில் குறிப்பிட்ட பொறுப்புள்ள உறுப்பினர் மூலமாகவோ மண முறிவு பெற்றுக்கொள்கின்றனர். இதனை விலக்கி வைத்தல், ஒதுக்கி வைத்தல் என்று குறிப்பிடுவர். பெண்கள் முறிவுப்பணம் கொடுக்க வேண்டும் என்றும் ஊர் மன்றங்கள்

தீர்ப்பிடுவது உண்டு. இவ்வாறு பாதிக்கப்பட்டவர்கள் இன்று நீதிமன்றங்களை நாடிச் சென்றோரின் வழக்குகள் குடும்ப நீதி மன்றங்களில் அதிக அளவில் உள்ளன.

### 4.7.1. பரத்தையர்

ஒருதார மணமே மக்களின் உயர்ந்த குறிக்கோளாகக் கருதப்பட்டாலும், வள்ளுவர் முதல் பல அறிஞர் பெருமக்கள் பரத்தமையைக் கண்டித்தாலும், தொல்காப்பியர் காலம் முதலாக இன்று வரை இவ்வொழுக்கம் தொடர்கதையாகி வருகின்றது.[76]

### 4.7.2. கற்பறம் வலியுறுத்தப்படல்

கற்பறம் மாறுவது உடலுக்குக் கேடானது என்பதை வள்ளுவர் வெளிப்படுத்தியிருக்கிறார். உடலைப் பாதுகாக்கத் தெரியாதவர்கள் தான் வரைவில் மகளிரை நாடுவர் என்கிறது குறள்.[77] கற்பு கெட்டவளின் பின் செல்வது. பேயினைப்பின்தொடர்வது போன்றது என்கிறார் வள்ளுவர். மனமும் உடலும் கெடுகிற இடம் விலைமாதர் விருந்தகம். அந்தப் புதைச் சேற்றில் விழுந்து மாளாதே. அத்தகையோர் மாயமகளிர். கள்ளினும் காமம் கொடியது. அது ஒரு காட்டாற்று வெள்ளம். காமத்தை விடாமல் பற்றினால் நாணத்தை மட்டுமன்று, தருமத்தையும் விட்டு விலகநேரிடும்[78]. எனப் பலவாறாக நம்மை எச்சரித்தவர், வள்ளுவப்பெருந்தகை. அவர் வழியில் செல்லும்போது கண்டிப்பாகக் கற்பறம் காக்கலாம், காணும் நோய்களிலிருந்தும் தப்பலாம்.

### 4.7.3. பெண்டிர் வெய்யோர்க்குப் படுபழிஎளிது

இல்லறம் சிறக்க ஒருவன் - ஒருத்தி என்னும் வாழ்க்கை முறையே சிறந்தது எனக்குறிப்பிடப் பெறுகின்றது. முது மொழிக்காஞ்சி, கணவன்-மனைவி உறவினைத் தவிர்த்த பிற உறவினைச் சுட்டாமல் இந்த உறவிற்கும் சில வரன்முறைகளைச் சுட்டுகின்றது. மேலும் ஆண் பிற பெண்டிர் மீது நாட்டம் கொள்ளும் நிலையில் ஏற்படும் பேரழிவினையும் குறிப்பிடுகின்றது. இலக்கியங்கள் அனைத்தும் தலைவன் பரத்தையரை நாடிச்சென்றமை ஏற்புடைய செயல் அன்று என்பதனை வலியுறுத்தும் பொருட்டே இப்பாங்கினைக் குறிப்பிடுகின்றனவே அன்றி இதனை நியாயப்படுத்தும் வகையில் குறிப்பிடவில்லை.

ஆண்களின் இத்தகைய பழக்கம் காலங்காலமாய்த் தொடர்ந்து வருவதனைக் காணமுடிகிறது. ஆண்களின் பாலியல் சிந்தனை பக்குவம் பெறாத நிலையில் அனைத்து நிலைகளிலும் பாலியல் தொல்லைகளைப் பெண்கள் சந்திக்கவேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது.

ஆண், பெண் இருவருமே நட்பா, பாலியல் எண்ணமா, காதலா எனப் பகுத்தறிய இயலாத நிலையில் கைக்கெட்டுபவரை வாழ்க்கைத் துணையாகக் கருதிப் பயிலும்

காலத்திலேயே வாழ்க்கையினைத் தொலைத்துவிட்டு நிற்கும் நிலைதான் இன்றைக்குக் காணப்படுகின்றது. இதனை நியாயப்படுத்தும் வகையில்தான் ஊடகங்களும் தங்கள் பணியைச் செய்துவருகின்றன.

வாழ்க்கைத்துணையினைத் தெரிவு செய்வதற்கும் பாலியல் சிந்தனைகளுக்கு வடிகால் தேடுவதற்கும் வேற்றுமையினைக் கண்டறியாத இளைய தலைமுறையினர் உலகமயமாக்கம் என்ற போர்வையில் இறக்குமதி செய்யப்பெற்ற மேலைநாட்டுக் கலாச்சாரத்திற்குள் தங்களை மறைத்துக் கொள்ள விரும்புவது அவர்களது பக்குவப்படாத மனநிலையினைத்தான் பிரதிபலிக்கின்றது.

பயிலும் இடத்தில், பணிபுரியும் இடத்தில், பயணிக்குமிடத்தில் என அனைத்து நிலைகளிலும் பாலியல் தொல்லைகள் பெருகிக்கொண்டே செல்கின்றன. இதனுடைய வெளிப்பாடுதான் ஒருவனுக்கு ஒருத்தி என்பதனைக் கட்டாயமாக நடைமுறைப் படுத்தி வரும் நம் நாடு உலக அரங்கில் எய்ட்ஸில் இரண்டாவது இடத்தினைப் பெற்றிருப்பதாக ஆராயப்படுகிறது.

பாரதத் திருநாட்டில் பாலியல் தொல்லை கொடுப்பதில் ஆண்கள் முதலிடம் வகுக்கின்றனர் என்பது தெரியவந்துள்ளது. விலங்குச் சிந்தனை உடையோருக்கு சமுதாய அமைப்பில் முறையான தணடனை இன்மையால் இயற்கையே எய்ட்ஸ் என்னும் ஆயுதத்தினைக் கையில் எடுத்துக் கொண்டுள்ளது, இச்சிக்கலிலிருந்து விடுபட்டிட ஒருவன்–ஒருத்தி என்ற வாழ்க்கைமுறையே ஒரே தீர்வாக அமைகின்றது.

மனம், உடல் ஆகிய இருநிலைகளிலும் சிறந்து, இல்லறம் தழைக்க, ஒருவன்–ஒருத்தி என்னும் உயரிய முறையே சிறந்தது என்பதனைத்தான் அனைத்து இலக்கியங்களும் வலியுறுத்துவதாகக் கூறுகிறார், ஏ.ஆதித்தன்.[79]

### *474.* உறவு சிதைவுகள்

'குடும்பம்' என்பது ஒன்றைக் கொடுத்து அதன்மூலம் கிடைக்கும் இன்பத்தைத்தான் குடும்பம் என்பர். குடும்பத்தில் மகிழ்ச்சியிருந்தால் சமுதாயம் சீர்படும்*;* சமுதாயம் சீர்ப்பட்டால் நாடு உயர்ந்து செழித்து தழைத்தோங்கும். எனவே, அடிப்படையில் மகிழ்ச்சி என்பது குடும்பத்தில்தான் பிறக்கின்றது. குடும்ப உறவுமுறைகள் ஒற்றுமையாக இருத்தல்*;* விட்டுக்கொடுத்தல், தியாக உள்ளமாக செயல்படல்*;* எதையும் சுலபமாக எடுத்துக்கொள்ளல் இவை என்பன போன்று நல்ல குணங்கள் மனதில் வைத்திருந்தால் குடும்பம், நல்லதொரு குடும்பமாகத் திகழும்.

சங்க கால மக்கள் வாழ்ந்த வாழ்க்கை முறைக்கும் இக்கால வாழ்க்கை முறைக்கும் கணக்கிலடங்காத முரண்பாடுகள் காணப்படுகின்றன.

-

காலம் மாற மாற மக்கள் தொகை அதிகமாகிவருகின்றன; தேவைகளும் அதிகமாகிவருகின்றன. மக்கள்தொகை அதிகமாகி, உற்பத்திகள் குறையும்போது மனிதமனதில் சுயநலம். பேராசை, பொறாமை, பொய், கொலை, கொள்ளை போன்ற தீயக்குணங்கள் மனதில் உருவெடுக்கும்போது குடும்பத்தில் சிக்கல் ஏற்பட்டு சிதைந்து உறவுகள் பிரியும் சூழல் ஏற்படுகின்றன.

"ஜோவஹாரியோ" என்ற உளவியல் வல்லுனர் மனித மனத்தை நான்கு நிலையில் விளக்கியுள்ளார்.

நான் சரி; நீ சரியல்ல-கர்வம்
நான் சரியில்லை; நீ சரி-தாழ்வு மனப்பான்மை
நானும் சரியில்லை; நீயும் - முரண்பாடுடைய மனம் சரியில்லை
நானும் சரி; நீயும் சரி- ஒத்துப்போகும் தன்மை"[80]

வாழ்க்கையை ஒருவரை ஒருவர் நன்றாகப் புரிந்து கொண்டும், விட்டுக்கொடுத்தும் வாழ்ந்துவந்தால் மனிதயினம் செழித்தோங்கும் என்பது உறுதி.

குடும்ப உறவுக்குள் சண்டைகள் பிரிவுகள், வரதட்சனைக் கொடுமை, தற்கொலைகள், கொலைகள், வறுமை, பொருளாதாரம், பாலியல் கொடுமைகள். குழந்தை மணம், கள்ளத்தொடர்புகள், விவாகரத்துகள், குடிப்பழக்கம் என்பன போன்ற தீயப் பழக்கவழக்கங்கள் அதிகமாக நிலவி வருகின்றன. இவ்விளைவால் மனிதசமுதாயமும், நாடும் சீரழிந்துவிடும் சூழல் உருவாகி உள்ளன.

வரதட்சணைக் கொடுமையால் கன்னிப்பெண்கள் திருமணம் செய்யமுடியாத அவலநிலையும் இருக்கின்றது. குடும்பத்தில் கணவன் தேவைக்கு அதிகமாக கடன் வாங்கிச் செலவு செய்து, பிறகு அந்தக்கடனை அடைக்க முடியாமல் மனைவியை வேலைக்குச் செல்ல வற்புறுத்தும் சூழலும் உருவாகி வருகின்றன. இக்காரணங்களால் குடும்பத்தில் பிரச்சனை எழுகின்றன. இதனால் கணவன் மனைவிக்கும் உள்ள நல்லுறவு சிதைகின்றது.

சிதைவு, பிரிவு, மகிழ்ச்சியின்மை, குழந்தைகளின் எதிர்காலம் பற்றிய சிந்தனையின்மை என்பன போன்ற பிரச்சனைகள் உள்ளன. குடும்பப் பிரச்சனைகளால் உறவுகள் பிரியும்போதும் சிதையும்போதும் பாதிக்கக்கூடியவர்கள், குழந்தைகள். பிரச்சனைகள் எதுவாக இருந்தாலும் பேசித்தீர்க்க வேண்டுமே ஒழிய, பிள்ளைகள் முன் சண்டை போடுவதும், ஒருவரை ஒருவர் திட்டிக்கொள்வதும்; தீயச்சொற்களைப் பேசுவதும் குழந்தைகளின் மனநிலை மிகவும் பாதிக்கப்படும். குழந்தைகளின் படிப்பு, எதிர்காலக்கனவு இலட்சியம் ஆகியவை வன்மையாக மாறிவிடும்.

குடும்பச் சிதைவுக்கு காதலும் பெரும் அங்கம் வகிக்கின்றது. பணம், சாதி, மதம், ஏழை பணக்காரன் இவை எவற்றையும் பார்த்து வருவதில்லை காதல். காதலிக்கும் போது இவர்களைப் பற்றிய சிந்தனை மட்டுமே தெரிகின்றது. இருவரின் வீட்டினரைப் பற்றிய சிந்தனை இல்லாமல் இருந்தாலும். பிறகு இரு வீட்டாருக்கும் காதலிப்பது தெரிந்தவுடன் பிரச்சனைகள் தலைதூக்குகின்றன. வீட்டில் சம்மதம் கிடைக்காதபோது வீட்டை விட்டு வெளியே வந்து திருமணம் செய்து கொள்கிறார்கள். இவற்றால் இருவீட்டாரின் குழப்பங்களில் கவலைகள் அதிகமாகின்றன.[81]

பிள்ளைகளைப் பெற்று வளர்த்து படிக்கவைத்து நல்ல நிலைமைக்கு ஆளாக்கிய பெற்றோர்களுக்கு எதிராக அவர்கள், காவல் நிலையத்தில் புகார் செய்து பெற்றோர்களை அவமானம் படுத்தும் செயல் அண்மைக்காலமாக அதிகரித்து வருகின்றது.

பீகாரின் கெமூர் மாவட்டத்தில் நடந்த கொடூரமான செயல், பெண் வீட்டார் காதலித்த மாணவனை மொட்டையடித்து தாயின் கண்ணெதிரில் இரயில் முன் தள்ளி கொலை செய்த கொடுமையும் நடந்துள்ளது.[82]

காதல் திருமணமாக இருந்தாலும் சரி, பெற்றோர் பார்த்து நடத்தி வைக்கும் திருமணமாக இருந்தாலும் சரி, மனம்தான் மகிழ்ச்சியை நிர்ணயிக்கிறது.

குடும்பப் பிரச்சனைகளுக்குக் காரணம், பிடிவாத குணம், ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ளாத நிலை, ஒருவருடன் ஒருவர் மனம் விட்டுப் பேசாமை, தவறான கருத்துவேறுபாடு, திருமணம் ஆகிவிட்டதே என்று கடமைக்காக வாழ்க்கை நடத்துவது என்பன போன்ற செயல்களால் குடும்ப பிரச்சனைக்குக்காரணமாக ஆராயப்படுகின்றது.

வறுமை, பொருளாதார சூழலும் குடும்பச்சிதைவிற்குக் காரணங்களாகின்றன. பெற்றோர் வறுமையால் குடும்பம் நடத்துவதற்குப் போதிய பொருளாதாரம் இல்லாததால் தற்கொலை செய்து கொள்வதும்; குழந்தைகள் வேலைக்குச் செல்வதும்; வறுமையைக் காரணம் காட்டி தீவிரவாதத்திற்குள் நுழைவதும்; வறுமைக் குடும்பத்தில் பிறந்த பெண்கள் பாலியல் தொழிலுக்குத் தள்ளப்படுவதும் நிகழ்ந்துக் கொண்டு வருகின்றன. குடிப்பழக்கமும் குடும்பச் சிதைவுக்கு முக்கிய காரணமாகின்றது. குடிப்பழக்கத்திற்கு அடிமையாகியிருக்கும் கணவன் செய்யும் கொடுமைகளை மனைவி பொறுத்துக்கொண்டும் கணவனை விட்டால் வேறுவழியில்லை என்ற நிலையை மனதில் ஏற்படுத்திக் கொண்டு வாழும் பல குடும்பங்களில் நிகழ்ந்தும் வருகின்றன. இக்குடிப்பழக்கம் தன்னையும் பாதித்து, தன் குடும்பத்தையும் பாதிப்படையச் செய்து குடும்பச் சிதைவுக்குக் காரணமாகின்றன.

## அடிக்குறிப்புகள்

1. குறிஞ்சி *21-24*
2. குறுந்.*49*
3. குறிஞ்சி *180-183*
4. குறிஞ்சி *205-210*
5. குறள் *247*
6. குறள் *81*
7. நற்.*186*
8. நற்.*214*
9. நற்.*3*
10. தொல்.பொரு.*52*
11. குறுந்.*156*
12. அகம்.*184*
13. நற்.*330*
14. புறம்.*198*
15. நற்.*110*
16. தொல்.*1058*
17. தொல்.*1151*
18. குறிஞ்சி *30-33*
19. குறிஞ்சி*165-169*
20. குறள்.*51*
21. முல்லைபா.*9-12*
22. முல்லைபா.*100-104*
23. அகம்.*6*.வரி.*24-25*
24. அகம்.*9*. வரி.*24-25*
25. அகம்.*34*.வரி.*18*.
26. குறள்.*53*

27. நற்.42
28. பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர் உரை, நற்றிணை, ப.340
29. நற்றிணைச் செல்வம், மு.வரதராசன், பக்.150.
30. நற்.374
31. குறுந்.136
32. குறுந்.3
33. குறுந்.40
34. குறுந்.9
35. குறுந்.10
36. குறுந்.8
37. குறுந்.40
38. குறுந்.137
39. குறுந்.283
40. குறுந்.135
41. குறள்.45,49
42. குறள்.அதி.9
43. புறம்.333:8-13
44. சஞ்சீவி. ந.சங்க இலக்கிய ஆராய்ச்சி
45. அகம்.86:2-17,136:2-8
46. Iyengar.P.T.S.Pre-Aryan Tamil Culture in the Journal of India History. பக்.35,36
47. குடும்பம்-குறள்.1029, குடி - அகம்-148:1, குலன்-குறள் 195:2; 958
48. முனைவர்.துரை செல்வராசு, இந்தியச் சமூக நிறுவனங்கள்,பள்.127,128
49. க.பாஸ்கரன், சமுதாயத்தத்துவம், தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சை.
50. மேற்படி
51. கோபாலகிருஷ்ணன் மானிடவியல் பக்.124
52. நா.பா.4,பக்.351
53. முனைவர். துரை.செல்வராசு, இந்தியச் சமூக நிறுவனங்கள், பக்.30

54. இந்தியச் சமூக நிறுவனங்கள்-முனைவர்.துரை.செல்வராசு,பக்.127

55. இந்தியச் சமூக நிறுவனங்கள்.முனைவர். துரை.செல்வராசு,பக்.134

56. மன்றல்;அகம்.112:16,318:8, குறள்.820, குறிஞ்சி..21, தொல்.பொ.99:4, வதுவை;அகம்.136:8, ஐங்.294:8, பதிற்.89:17, பரி.19:7,புறம்.372:10, வரைவு;குறள்.அதிகாரம்.92

57. கலைக்களஞ்சியம், தொகுதி.8,பக்.65

58. இரா.கற்பகம், சமூகவியல்பக்.104

59. இரா.கற்பகம்,சமூகவியல்.பக்.60

60. ஏங்கல்ஸ், குடும்பம் தனிமனித சொத்து அரசு தோற்றம்பக்.127

61. த.நா.பா.4, பக்.335

62. த.நா.பா.4, பக்.216,115

63. கலைக்களஞ்சியம், தொகுதி.8,பக்.65

64. அகம்.90,280

65. வ.சுபமாணிக்கம், தமிழ்க்காதல், பக்.82-83

66. தொல்.பொருள்.143

67. அகம்.86,136

68. குறுந்.146

69. குறிஞ்சி.30-32,புறம்.200:1-15

70. அகம்.36

71. ஆர்.பெரியாழ்வார்.இருளர்கால்வழி உறவுமுறைச் சொற்கள், ஆராய்ச்சி தொகுதி.19,பக்.173.

72. தென்மொழிகளில் பழமொழிகள், பக்.23

73. த.நா.பா.4, பக்.393

74. சிலம்பு.20,80

75. புரட்சிக்கவி பாரதிதாசன், கவிதைகள்,பக்.85,86

76. குறள்.அதிகாரம்.92, தொல்.பொ.1093, புறம்.143:7,73:11-14

77. குறள்.916

78. குறள்.1247

79. செம்மொழித் தமிழ் இலக்கியங்களில் கற்புநெறிபக்.23

80. மனிதரும் மனமும், சமூக உளவியல். ந.நளினி, பக்.10

81. தினகரன் செய்தித்தாளில் வெளியானது,4.12.2008, பக்.1

82. தினகரன் செய்தித்தாளில் வெளியானது,10.11.2008, பக்.5

# முடிவுரை

ஆய்வில் கண்டறிந்த உண்மைகள் தொகுத்தளிக்கப் படுகின்றன.

சங்கத் தமிழரது உறைவிடங்கள் செய்தொழில்களுக்கு ஏற்பவும் வேறுபட்டமைந்தன. தொழில் தொடர்பான கருவிகள், துணைநின்ற விலங்குகள் முதலியவற்றைப் பேணுவதற்கும் உறைவிடத்தின் பரப்பளவையும் அமைப்பு முறையையும் மாற்றியமைத்து வாழ்ந்தனர்.

அயல் நாட்டுப் பண்டங்களையும் தம் நாட்டுப் பண்டங்களையும் பேணிவைக்கும் பண்டக சாலை அமைப்பு தோன்றியது. வணிகத்தொழில் அமைந்தமையால் அவரவர் இருப்பிடங்களும் நெருக்கமாக அமைந்தன. இருப்பிட நிலையில் வணிகத்தொழில் பெரும் மாற்றத்தை ஏற்படுத்தியமையை அறிய முடிகிறது.

அகம், இல், இல்லம், உறையுள், கல்லளை, குடில், குரம்பை, குறும்பு, நெடுநகர், புக்கில், மனை, மாடம், பிற என உறைவிடத்தின் வகைகளாக சங்க இலக்கியங்கள் தரமுற்பட்டுள்ளன.

அகம் என்பது ஆண் பெண்ணுடன் இணைந்து அமைதியாக வாழ்வு நடத்தும் இடமாக விளங்கியது.

'நல்இல்' என்பது அமைப்பு நிலையிலும், அழகு நிலையிலும், செல்வ நிலையிலும், ஒழுக்கம்பேணும் நிலையிலும் சிறந்த உறைவிடமாக இருந்ததை ஆராயப்படுகிறது.

பெண் வாழ்ந்த இல் 'எம்இல்' எனவும் ஆண் வாழந்த இல் 'தம்இல்' எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது.

சங்கப் பாடல்கள் குறிப்பிடும் உறையுள் பற்றிய செய்திகளைத்தொகுத்துநோக்கியபோது அகப்பாடல்களிலே உறையுள் பற்றிய செய்திகள் அரிதாகக் காணப்படுகின்றன. புறப்பாடல்களில் சில செய்திகள் உள்ளன.

குரம்பை வறியோர் உறைவிடமாக இருந்தமை விளக்கப்பட்டுள்ளது.

நெடுநகர் இருப்பிடநிலையிலே குடும்பமாக வாழும் இடமாகவும் சுற்றம் சூழ வாழும் இடமாகவும் இருந்தது.
திருமணம் முடிந்த பின்னர் ஆணும் பெண்ணும் தனியாக வாழும் உறைவிடம் 'தன்மனை' எனக் குறிப்பிடப்பட்டது.

பொதியில், மன்றம் என்ற இருவகைப்பட்ட மக்கள் கூடும் இடங்கள் பற்றிய செய்திகளும் சங்கப் பாடல்களில் உண்டு. குடும்பமாக மட்டுமின்றி பொது வாழ்வியல் நிலையில் பலர் கூடும் இடங்களாக இவை விளங்கின.
இச்செய்திகளைத் தொகுத்து நோக்கும் போது அதனூடே வளர்ந்த பண்பாட்டைத்தெளிவாக அறிய முடிகிறது.

'இல்லாள்' என்ற உரிமைப்பெயர் சங்க இலக்கியப் பாடல்களில் இடம் பெறவில்லை.

உடன்போக்கு நிலையில் மட்டும் திருமணம் ஆணின் இருப்பிடத்தில் நடைபெறும். இருதரப்பினரும் ஒருமித்துச் செய்யும் திருமணம் எனில் பெண்வாழும் மனையில் நடைபெறும் வழக்கம் இருந்துள்ளது.

மணமகளுக்கு மங்கல நீராட்டுச் செய்யும் வழக்கம் இருந்ததையும் அது மனையிலே நடைபெற்றதையும் அறிய முடிகிறது. இவ்வழக்கம் இன்று வரை தொடர்வதும் குறிப்பிடப்படுகிறது.

இறந்த கணவனுக்கு நடப்பட்ட நடுகல் வழிபாட்டு நடைமுறைகளையும் மனையில் வாழும் பெண்ணே ஏற்றுக் கொண்டதாக ஆராயப்படுகிறது.

விரும்பிய வாழ்வுபெற வேண்டி மனையிலே தெய்வ வழிபாடு செய்வது வழக்கமாயிருந்தது நன்குதெளிவாகிறது.

வீட்டிலே இருக்கும் சுற்றத்தவரைவிட காக்கை முதலில் உண்ண வேண்டும் என்ற நடைமுறை இருந்துள்ளது. இது இன்றும் தமிழரிடையே நிலவுவது குறிப்பிடத்தக்கது.

சங்கத் தமிழர் இயற்கையான முறையில் உறைவிடம் அமைத்து வாழ்ந்தனர் என்று ஆராயப்படுகிறது.

கூற்றுக்கு உரிமையுள்ள, உரிமையில்லாதவர் கூறக்கூடிய கூற்றிலிருந்தும் தலைவனின் நல்லியல்புகளை ஆராயப்படுகிறது.

களவில் தலைவன் தலைவி ஆகிய இருவரின் உள்ளக்குறிப்புகளை அறிந்து அறநெறியில் செயல்பட்டனர் என்று ஆராயப்படுகிறது.

அவ்வக் காலங்களில் நிகழும் பாங்கன் கூற்றுகளில் தலைவன் தன் இயல்புகள் வெளிப்படுகின்றன.

பாடினி, கூத்தர், விருந்தினர் ஆகியோர் ஊடல் தீர்க்க வருகின்றமை அறிகிறோம். எனினும் இவர்கள் கூற்று நிகழ்த்தியதற்குச் சங்க இலக்கியங்களிற் சான்றில்லை, என ஆராயப்படுகிறது.

தலைவியின் கூற்று அதிக அளவில் இடம்பெறும் நூல் குறுந்தொகை ஆகும். அந்நூலின் மொத்தப் பாடல் தொகையில் ஏறத்தாழ 50 விழுக்காட்டை நெருங்கும் அளவிற்கு அதிக அளவு பாடல்கள் தலைவியின் உணர்வுகளை வெளிப்படுத்துவனவாகக் காணப்படும்.

தலைவியின் கூற்று அதிக அளவில் இடம்பெறும் நூல்வரிசையில் ஐங்குறுநூறு இரண்டாம் இடத்தையும் அகநானூறு மூன்றாம் இடத்தையும் பெறுகின்றன. இம்முறையில் நற்றிணை, கலித்தொகை அடுத்தடுத்த இடத்தில் உள்ளன.

தலைவனுடைய பிரிவை ஆற்றாது புலம்பும் தலைவியின் கூற்று அதிக அளவில் பாலைத் திணையில் காணப்படுகின்றன. இம்முறையில் வரைவின் பொருட்டும், பிரிவின் பொருட்டும் காலம் நீட்டிக்கும் தலைவனை எண்ணி வருத்தும் தலைவி கூற்று இரண்டாம் நிலையில் நெய்தல் திணையில் காணப்படுகிறது.

தலைவியின் கூற்றாக விளங்கும் மொத்தப் பாடல்களின் எண்ணிக்கையில் கற்பு நிலைப்பாடல்கள் நான்கில் மூன்று பங்காக அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

களவு, கற்பு நிகழ்வின்போது தலைவி தோழியிடம் நிகழ்த்தும் கூற்றுகளே அதிக அளவில் காணப்படுகின்றன.

தலைவி தலைவனுடன் நிகழ்த்தும் கூற்றுகள் இரண்டாம் இடத்தைப் பெற்றாலும், களவில் இரண்டு பாடல்கள் மட்டுமே இக்கூற்றாக அகநானூற்றில் காணப்படுவது குறிப்பிடத்தக்கது.

-

தலைவி தன்நெஞ்சிடம் புலம்பிக் கூறும் கூற்றுகள் மூன்றாவது இடத்தைப் பெறுகின்றன.

காமம் மிக்க கழிபடர் கிளவியாகத் தலைவியின் கூற்றுகள் தும்பி, மாலை, திங்கள், வாடை, கடல் போன்றவற்றைக் கண்டுரைப்பனவாக அமைந்துள்ளன. அக்கூற்றுகளும் தலைவனை உட்படுத்தியே விளங்குகின்றன.

அம்மூவனார், கபிலர், ஓரம்போகியார், ஆகியோர் முறையே முதல் மூன்று இடத்திலும், ஓதலாந்தையார், மருதனிளநாகனார் ஆகியோர் அதற்கடுத்த நிலையிலும் பேயனார், மாமூலனார் ஆகியோர் அதற்கடுத்த நிலையிலும் தலைவி கூற்றுப்பாடலை அதிகம் பாடியவர்கள் ஆவர்.

தலைவி தாயின் கடுஞ்சொல்லுக்கும் பார்வைக்கும் அஞ்சுகிறாள். ஆனால் தன்னைப் பாதுகாத்து வளர்த்த அன்னையைப் போற்றுகிறாள்.

தலைவி தன் தோழியையே உற்ற துணையாக எண்ணுகிறாள். தம் மனப்போராட்டத்திற்கும், ஆற்றாமைக்கும் அவளையே வடிகாலாகப் பயன்படுத்துகிறாள்.

தலைவி, தலைவன் மீது கொண்ட அன்பைக் களவிலும் கற்பிலும் நேரடியாகக் கூறாமல், அதிக அளவு தோழியிடம் கூறுவதாலும் பிறருடனும் பிறவற்றுடனும் கூறுவதாலும் வெளிப்படுத்துகிறாள். பிரிவில் வாராதகாலை தலைவனைத் தன்னிடம் அன்பற்றவனாகவே எண்ணுகிறாள். உலகியல் கருதி அவன் பரத்தைப் பிரிவை மறக்கிறாள். அதே நேரத்தில் அவன் குடிப்பெருமை கருதி இன்னொரு மணத்திற்கு உட்படுகிறாள். மேலும் அவனைத் தன் தாயாகவும், தந்தையாகவும் எண்ணிப் போற்றும் தலைவியின் அன்புறவு தமிழ்க்குடிப் பெண்டிரின் மாண்பைப் புலப்படுத்துவதாக உள்ளது.

தன் புதல்வனைப் பாலூட்டிச் சீராட்டி வளர்ப்பதும், தந்தை போல அவன் புறத்தொழுக்கம் இல்லாதிருக்க எண்ணுவதும், தலைவன் பிற மகளீர் உறவு கொள்ள நினைப்பதை வெறுப்பதும், தலைவன் மீது கொண்ட ஊடல்தீர மகன் வாயிலாவதும் காணுமிடத்து அவள் தன் மகன் மாட்டுக்கொண்ட அன்பும் வளர்ப்பு முறையும் அறியப் படுகின்றன.

பாணன் போன்றோர் தலைவியின் பிரிவுத் துயரை அறிந்து அவளைத் தேற்றுவதையும் அவள் பொருட்டுத் தலைவனிடம் தூது செல்ல எண்ணுவதையும் காணமுடிகிறது.

தோழியின் கூற்று அதிக அளவில் இடம்பெறும் நூல் நற்றிணை ஆகும். அதற்கடுத்த நிலைகளில் முறையே ஐங்குறுநூறும் குறுந்தொகையும் அகநானூறும் விளங்குகின்றன.

தோழியின் கூற்றுகளில் களவு ஒழுக்கம் கூற்றுகளே அதிகம் இடம் பெறுகின்றன.

கற்பில் பாலைத் திணையிலும் மருதத் திணையிலும் முறையே அதிக அளவு கூற்றுகள் உள்ளன.

தலைவியின்உணர்வுகளைத்தோழிதனக்குரியதாக்கிக் கொண்டு கூறுவதால் தலைவி கூற்றுப் பாடல்கள் குறைவாக உள்ளன.

தலைவன் அழகு தன்னுள்ளத்தைக் கவர்ந்தது எனத் தலைவன் அழகைப் புகழ்ந்து கூறித் தலைவனுடன் தலைவியை உறவாக்க முயல்கிறாள் தோழி.

தலைவி எந்நாளும் நிறைநலத்தோடு இன்புற்று வாழவேண்டும் என்ற உயர்ந்த உள்ளம் உடையவளாகத் தோழி விளங்குகிறாள்.

உறவை வளர்த்தெடுப்பதே இவளின் வாழ்நாள் குறிக்கோள் என்பதை அறிய முடிகிறது.

தலைவன் தலைவி உறவுக்கு அறத்தொடு நிற்றல் ஒன்றே அறவழியைக் காட்டுகிறது.

தலைவன் தலைவி இருவர்க்கும் ஏற்படும் காதல் நோய்க்கு அவ்விருவரே ஒருவர்க்கொருவர் மருந்தாகின்றனர்.

தோழி நற்றாயிடம் உரையாடுவதாகச் சான்றுகள் இல்லை.

தலைவியை இரவுபகல் பாராது கவனமாகக் காக்கும் செவிலியின் பாதுகாப்புணர்வு தோழியின் கூற்றால் வெளிப்படுகின்றன.

மெய்யறிவு பற்றிய உயர் சிந்தனைகளை உலகில் முதலில் மொழிந்தவர்தமிழரே எனக் கண்டறியப்படுகிறது.

திருமால், சிவன், காளி வழிபாடுகள் தொடக்க நிலையில் திராவிடருக்கே (தமிழருக்கே) உரியவையென்றும் தத்துவமேதை டாக்டர் இராதாகிருஷ்ணன் கூறுவதாக அறியப்படுகிறது.

மாரியோன், சேயோன் என்று, இடத்திற்கேற்ப வேந்தன், வருணன் என்றும் குறித்ததை காணலாம். உருவவழிபாடு தமிழரிடையே தொன்று தொட்டே இருந்தமை புலனாகிறது.

தெய்வத்தின் முன்னின்று சூளுரை செய்யும் வழக்கமும் தமிழரிடம் உண்டு. சூளுரையிலிருந்து தவறினால தீமை விளையும் என்றும் நம்பினர்.

ஒழுக்கத்திலிருந்து தவறுதல் கொடுமை எனவும், இவ்வொழுக்கக்கேடே அவனைத் தாக்கும் என்பதும் பண்டைய தமிழரின் நம்பிக்கை.

இந்த உலகத்தில் புகழைத் தேடிக் கொண்டவர்கள் மேல் உலகை அடைவார்கள். அன்பும்அருளும் இல்லாத உயிர்களைத் துன்புறுத்துவோர் கீழுலகமாகிய நிரயத்தில் நீங்காத துன்பத்தை அடைவர் என்றெல்லாம் நம்பி வாழ்ந்தனர்.
தீதற்ற வாழ்க்கை வாழ்வதே மிக உயர்ந்தது என்பது தமிழரின் எண்ணங்கள் என்று நம்பினர்.

உலகில் எந்த இடமானாலும் அது தாம் வாழும் ஊர்தான் எங்கு வாழ்ந்தாலும், எப்படி வாழ்ந்தாலும், உலகில்வாழும் மக்கள் அனைவரும் உறவினர்கள்தாம் என்று நம்பிக்கைக் கொண்டு வாழ்ந்ததாகக்கூறப்படுகிறது.

அன்புடையவர்கள் இந்த உலகத்தில் இருப்பதால்தான் இந்த உலகம் இன்று இயங்கிக் கொண்டிக்கிறது. இல்லாவிட்டால் மண்ணோடு மண்ணாகப் போய்விடும் என்று நம்பியிருந்தனர் என ஆராயப்படுகிறது.

அரசன் நீதி தவறாதவனாகச் செங்கோல் செலுத்தி வந்தால் அந்த நாட்டில் பருவமழை தவறாது பெய்யும் என்று தமிழர் நம்பினர்.

சமணரும் பௌத்தரும் தமிழர் வாழ்ந்த ஊருக்கு வெளியில் கோட்டம் அமைத்து வழிபட்டு வந்ததைச் சங்க இலக்கியமும் சிலப்பதிகாரமும் தக்கச் சான்றுகளுடன் கூறப்பட்டுள்ளன.

நன்னன் என்னும் குறுநில மன்னன் ஆட்சி புரிந்த வந்தான். அவனுடைய பிறந்த நாள் விழா அவனுடைய நாட்டு மக்களால் சிறப்பு மிகு பெருவிழாவாகக் கொண்டாடப்பட்டது எனக் கூறப்படுகிறது.

கன்னிப் பெண்கள் இறைவனை வேண்டி, நோன்பு நோற்று நோன்பின் நிறைவு நாளன்று நீராடுவது தைந்நீராடலாகும். "சிறந்த கணவரைப் பெற வேண்டும்" என்னும் நோக்கத்தோடு இந்தநோன்ப மேற்கொள்ளப் பட்டதைச் சங்க இலக்கியப்பாடல்கள் தெரிவிக்கின்றன. பிற்காலத்தில் மார்கழி நோன்பு உடன் தைந்நீராடல் திருவிழாபெரிதும் தொடர்பு உடையதாகக் காணப்படுகிறது.

ஒருவர் பார்வை இன்னொருவர்க்குத் துன்பம் செய்யும் என்ற நம்பிக்கை வலுவாக இருந்தது என்று நம்பினர்.

பல்லி சொல்லுக்குப் பயனுண்டாகுமென்று பழந்தமிழர் சமுதாயம் நம்பியது எனக் கூறப்படுகிறது.

காகம் கரைந்தால் விருந்தினர் வருவார் என்ற நம்பிக்கை பழந்தமிழகத்திலிருந்தது என்பது உறுதிப்படுத்தப்படுகிறது. மரங்கள் சிலவற்றிலும் கற்சுனைகளிலும் கடவுள் தங்கியுள்ளதாக நம்பி வாழ்ந்து வந்தனர்.

குழந்தை பிறப்பு முதல் இறப்பு வரை வாழ்வியலில் பல சடங்குகளைச்செய்து வாழ்ந்துவந்தனர் எனக்கூறப்படுகிறது.

சங்க காலத் தமிழ்மக்கள், மனிதனுடைய வாழ்க்கை மதிப்பும் பயனும் வாய்ந்ததாக அமையவேண்டும்என்பதில் பேரார்வம் காட்டினர்.

சங்க காலத்தில் சிறப்புற்று விளங்கிய புலவர்களின் எண்ணிக்கை 473 என்று கணக்கிட்டுள்ளனர்.அவர்களுள் முப்பதுபேர் பெண்பாற் புலவர்களாக உள்ளனர்,
அக்காலத்தில் கல்வி பெறுவதற்கு மகளிர்க்கு வாய்ப்பு வசதிகள் இருந்தன என்பதைத் தெரிவிக்கிறது.

களவு நிலைமுதிர்ச்சி அடைந்து திருமணத்தில்முடிந்து இல்வாழ்க்கை மேற்கொள்வதே கற்பு வாழ்க்கையாகக் கருதினர்.

பிரிவுக்காலத்தில் மனைவி கணவனின் வருகைக்காகப் பொறுமையோடு தம் இல்லத்தில்காத்திருக்கிறாள்.இதையும் ஒரு ஒழுக்கநெறியாகக் கொண்டனர், சங்கத் தமிழர்கள்.

பரத்தையர் ஒழுக்கம் அனைத்து மக்களாலும் இழிவெனவே கருதப்பட்டது.இப்பிறவியில் தலைவனோடு வாழாவிட்டாலும், அடுத்தப்பிறவியிலாவது தலைவனோடு கூடிவாழ்வேன் என்று கூறுகிறாள். இச்செயலால் தலைவி, தலைவன் மீது கொண்ட நல்லுறவைக் காட்டுகிறது.

தன்னையே நம்பி நாணத்தை விட்டுச் சரணடைந்த தலைவியின் உள்ளத்தை அந்தப் பொழுதிலே புரிந்து கொண்டு, அஞ்சாதே, உன் அழகிய நலத்தை நுகர்வேன் என்று கூறும் தலைவனின் உளவியல் பாங்கு பெரிதும் போற்றக் கூடியது.

குடும்பத்தின் மீதான நம்பிக்கை தவறும்பொழுது அது சமூகச் சிதைவுக்கும் அடித்தளமாகிறது.

முல்லைப் பாட்டுத் தலைவன் தலைவிமீதும், தலைவி தலைவன்மீதும் கொண்ட காத்திருப்பு, நம்பிக்கையின் அடிப்படையில் உள்ள வாழ்க்கை சுட்டுகின்றது.

உறவில் சிதைவு ஏற்பட்டு வழக்குகள் நீதிமன்றத்தில் குவிவது குறிப்பிடத்தக்கதாக இன்றை உறவில் ஏற்படக் கூடிய சிக்கலாக ஆராயப்படுகிறது.

ஒருதாரமணக் குடும்பத்தில்இருப்பதால் இம்மணமுறை சிறப்பாகக் கருதப்படுகிறது. சக்களத்தி சண்டைகள் பலதார மணத்தின் மீது கொண்ட வெறுப்பினைச் சுட்டுவதாக ஆராயப்படுகின்றது.

உறவுகள் மட்டுமின்றி தந்தைவழி பாட்டன், பாட்டி, தாய்வழி பாட்டன்,பாட்டி என்ற உறவுகள் தங்களுடைய பேரக் குழந்தைகள் மீது மிகுந்த அன்பும் பாசத்தையும் கொட்டி வளர்ப்பார்கள். இவ்விரு உறவுகளிலும் அன்பும் பாசமும் வெளிப்படுகிறது.

தாய்மாமன் உறவு மிகவும் அவசியமாகிறது. பிறப்பு முதல் மணவிழா, இறப்பு வரை தாய்மாமனின் உறவு மிகவும் அவசியமானது என்று ஆராய ப்படுகிறது.

பிள்ளைகளின் ஒவ்வொரு காலக்கட்டத்திலும் அவர்களுக்குத் தேவையானவற்றைச் செய்வதும், பிள்ளைகளின் ஆசைகளையும் இலட்சியங்களையும் நிறைவேற்றுவதும் பெற்றோரின் கடமை.

ஒருவனுக்கு ஒருத்தி என்பதனைக் கட்டாயமாக நடைமுறைப் படுத்தி வரும் நம்நாடு உலக அரங்கில் எய்ட்ஸில் இரண்டாவது இடத்தினைப் பெற்றிருப்பதாக ஆராயப்படுகிறது.

----

# பின்னிணைப்புகள்

1. அகமாந்தர் கூற்றுகள் அட்டவணை

2. குறிஞ்சி நிலவாழ்க்கை, முல்லை நிலவாழ்க்கைப்படம்

3. மருத நிலவாழ்க்கை, நெய்தல் நிலவாழ்க்கைப்படம்

4. பாலை நிலவாழ்க்கை, சங்ககால உறைவிடத்தின்படம் ஆகியவை இணைக்கப்பட்டுள்ளன.

ί

## அகமாந்தர் கூற்றுகள் அட்டவணை

| நூல்பெயர் அகமாந்தர் | நற்றிணை | குறுந்தொகை | ஐங்குறுநூறு | கலித்தொகை | அகநானூறு | பரிபாடல் | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| தலைவி | 85 | 180 | 148 | 46 | 101 | 2 | 562 |
| தலைவன் | 74 | 62 | 91 | 16 | 103 | - | 346 |
| தோழி | 213 | 140 | 200 | 67 | 157 | 5 | 782 |
| நற்றாய் | 9 | - | 13 | - | 8 | - | 30 |
| செவிலி | 2 | 9 | 13 | 1 | 17 | - | 42 |
| பரத்தை | 11 | 5 | 21 | 8 | 9 | - | 54 |
| கண்டோர் | 3 | 3 | 7 | 9 | 1 | - | 23 |
| அயலார் | - | - | 1 | - | - | - | 1 |
| உணர்ந்தோர் | - | - | 1 | - | - | - | 1 |
| ஊன்றோர் | - | - | - | 2 | - | - | 2 |
| வாயில் | - | - | 1 | 2 | - | - | 3 |
| பாணன் | - | - | 1 | 1 | 1 | 2 | 5 |
| பாங்கன் | - | 2 | 1 | - | - | - | 3 |
| தேர்ப்பாகன் | 1 | - | - | - | - | - | 1 |
| உழையர் | - | - | - | - | 3 | - | 3 |
| சுற்றம் | - | - | - | 1 | - | - | 1 |
| ஆராய்ச்சியர் | - | - | - | 1 | - | - | 1 |
| கூனும்குறளும் | - | - | - | 1 | - | - | 1 |

**மொத்த பாடல்கள் 1857**

குறிப்பு:

*நற்றிணையில் ஒருபாடல் சிதைந்தும் ஒருபாடல் கிடைக்காமலும் உள்ளன.

*ஐங்குறு நூற்றில் 2 பாடல்கள் கிடைக்கப் பெறவில்லை.

*தலைவி கூற்றுப் பாடல்களில் 412 பாடல்கள் தோழியிடம் 412 பாடல்கள் தோழியிடம் கூறுவது.

# துணை நூற் பட்டியல்

## மூலநூல்கள்

1. சாமிநாதையர், உ.வே. பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் காபீர் அச்சுக் கூடம், சென்னை. 1956

2. சாமிநாதையர், உ.வே. புறநானூறு மூலமும் பழைய உரையும் டாக்டர்.உ.வே.சாமிநாதையர்நூல்நிலையம் சென்னை, 1971

3. செயபால், இரா. அகநானூறு (மூலமும் உரையும்) நியூசெஞ்சுரி புக் ஹவுஸ்(பி)லிட் சென்னை, 2004.

4. தட்சிணாமூர்த்தி,அ. ஐங்குறுநூறு (மூலமும் உரையும்) நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட் சென்னை, 2004.

5. துரைசாமிப் பிள்ளை, ஔவை.சு. ஐங்குறுநூறு அண்ணாமலைப் பல்கலைக்கழகம் அண்ணாமலை நகர். 1978.

6. துரைசாமிப் பிள்ளை, ஔவை.சு. பதிற்றுப்பத்து (மூலமும்உரையும்) கழகவெளியீடு சென்னை, 1963.

7. நாகராசன், வி குறுந்தொகை (மூலமும் உரையு நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி)லிட் சென்னை, 2004.

8. பாலசுப்பிரமணியன், கு.வெ. நற்றிணை (மூலமும் உரையும்)
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி)லிட்
சென்னை,
2004.

9. மாணிக்கனார், அ. புறநானூறு (மூலமும் உரையும்)
முதற் பதிப்பு
வர்த்தமானன் பதிப்பகம்,
சென்னை,
1999.

10.மோகன், இரா. பரிபாடல்(மூலமும் உரையும்)
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ்(பி)லிட்
சென்னை
2004.

11. விசுவநாதன். அ. கலித்தொகை(மூலமும் உரையும்)
நியூசெஞ்சுரிபுக் ஹவுஸ்(பி)லிட்
சென்னை.
2004.

12. வேங்கடசாமி நாட்டர்,அ.மு. அகநானூறு(பதவுரைவிளக்கவுரை)
வேங்கடாசலம் பிள்ளை,இரா ஆறாவது பதிப்பு
கழக வெளியீடு,சென்னை.
1968

## இலக்கண நூல்கள்

1. ஐயனாரிதனார் 'புறப்பொருள் வெண்பாமாலை'
கழகவெளியீடு, சென்னை.
1969

2. தொல்காப்பியர் 'தொல்காப்பியம் சொல்லதிகாரம்'
சேனாவரையர் உரை
கு.சுந்தரமூர்த்திபதிப்பு,
திருப்பனந்தாள்,
1970

3. தொல்காப்பியர் — 'தொல்காப்பியம் பொருளதிகாரம்'
இளம்பூரணர் உரை
கழக வெளியீடு, சென்னை
1977.

4. தொல்காப்பியர் — 'தொல்காப்பியம் பொருளதிகாரம்'
நச்சினார்க்கினியர் உரை
கழக வெளியீடு, சென்னை
1973.

5. நக்கீரனார்(உரை) — 'இறையனாரகப் பொருள் விளக்கம்'
கழக வெளியீடு, சென்னை,
1976.

6. நாற்கவிராச நம்பி — 'அகப்பொருள் விளக்கம்'
பழைய உரையுடன்
கழகவெளியீடு, சென்னை,
1971.

அகராதிகள்

1. கதிரைவேற் பிள்ளை, நா. — தமிழ்மொழி அகராதி
6 -ஆம் பதிப்பு
ஆசிய கல்விச்சேவை, புதுடில்லி.
1982.

2. கழகப் புலவர் குழுவினர் — கழகத் தமிழ் அகராதி
முதற் பதிப்பு
கழக வெளியீடு, சென்னை.
1964.

3. சென்னைப் பலகலைக்கழகம் — தமிழ் அகராதி
தொகுதி 1-5
1982.

மேற்கோள் நூல்கள்

1. அந்திரேயெவ், இலி. — எங்கெல்சின்,'குடும்பம்,தனிச்சொத்து,
அரசு ஆகியவற்றின் தோற்றம்'
முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ
1987.

2.அருளப்பா, இரா. 'திருக்குறள் கூறும் சான்றாண்மை' மெய்ப்பொருள் பதிப்பகம்,சென்னை. 1974.

3. இராசமாணிக்கனார், மா. 'தமிழக ஆட்சி' பாரி நிலையம், சென்னை.

4. இராமகிருட்டினன், ஆ. 'அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு' முதற் பதிப்பு சரவணா பதிப்பகம், மதுரை

5. இளங்கோவன், கு.வை. 'உறவு - ஓர் ஆய்வும்' முதற் பதிப்பு முத்துப் பதிப்பகம், விழுப்புரம். 1995.

6. உதயமூர்த்தி, எம்.எஸ். நாடு எங்கே செல்கிறது முதற் பதிப்பு வானதி பதிப்பகம், சென்னை. 1984.

7. கந்தசாமி, சொ. ந. குறுந்தொகைத் திறனாய்வு முதற் பதிப்பு அபிராமிப் பதிப்பகம். அண்ணாமலை நகர். 1978.

8. கம்பர். கம்பராமாயணம், கம்பன் கழகம், கற்பகச் சோலை, சென்னை. 1983.

9. கல்யாண சுந்தரம், திரு. வி. பெண்ணின் பெருமை 'அல்லது' வாழ்க்கைத் துணை நலம், புனித நிலையம், சென்னை. 1969

10.குருசாமி, ம.ரா.போ. ‘சங்க காலம்’
மெர்க்குரி புத்தகக்கம்பெனி,
கோயம்புத்தூர்
1974.

11. குருசாமி,அ.ச நாலடியார்(மூலமும்எளியஉரையும்)
சுறா புக் (பி)லிட்
சென்னை
2003.

12. குழந்தை, புலவர் தொல்காப்பியர் காலத் தமிழர்
முதற் பதிப்பு
பாரி நிலையம்,
சென்னை
1959

13. சரளா, இராசகோபாலன் சங்க இலக்கியத்தில் தோழி
முதற் பதிப்பு
ஒளிப் பதிப்பகம், சென்னை
1986.

14. சரளா, இராசகோபாலன் சங்க இலக்கியம்(அகம்)
முதற் பதிப்பு
ஒளிப்பதிப்பகம், சென்னை
1988.

15. சண்முகசுந்தரம்,சு. திருநெல்வேலி மாவட்ட,
நாட்டுப்புறபபாடல்களில
சமூதாயஅமைப்பு காவ்யா வெளியீடு
பேங்களூர்
1986

16. சாம்பசிவம்,சு. தமிழ்இலக்கியத்தில்நெய்தல்திணை
மீனாட்சிப் புத்தக நிலையம்
மதுரை
1964.

17.சாமிநாதசர்மா. பிளேட்டோவின்அரசியல்(அ)நீதியைப்பற்றிய
(மொழிபெயர்ப்பு) ஆராய்ச்சி பிரபஞ்ச சோதி
பிரசுராலயம், சென்னை.
1948

9. மெய்யப்பன், சி. — சங்க இலக்கியத்தில் பெண்கள்,
இலக்கியத்தி பெண்கள்,
முதற் பதிப்பு,
தி, பாக்கியமுத்துகிறித்துவ இலக்கியச் சங்கம், சென்னை.

10. வெள்ளைவாரணன், க. — குறிஞ்சிப் பாட்டு,
பத்துப்பாட்டுச் சொற்பொழிவுகள்
கழகம், சென்னை , 1969.


## பிஎச். டி. ஆய்வேடுகள்.


1. இரத்தினம்,க. — சங்க அகப்பாடல்களில் கூற்று
மதுரைப் பல்கலைக் கழகம், மதுரை

2. கோகிலவாணி,சு. — சங்க இலக்கியத்தில் தாய்-சேய்-உறவு
ஓர் உளவியல் நோக்கு
சென்னைப் பல்கலைக் கழகம்,
சென்னை,
1997.

# சங்க இலக்கியத்தில்-தமிழரின் உறைவிடமும் உறவும்

சென்னைப் பல்கலைக்கழகத்தின்
முனைவர் (பிஎச்.டி,)பட்டப்பேற்றுக்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு


பா.பாபு
பகுதிநேர ஆய்வாளர்
தமிழ்த்துறை
பச்சையப்பன் கல்லூரி
சென்னை-600 030



மேற்பார்வையாளர்
டாக்டர்.வ.உமாபார்வதி எம்.ஏ.,பிஎச்.டி.,
இணைப் பேராசிரியர்
தமிழ்த்துறை
பச்சையப்பன் கல்லூரி
சென்னை-600 030






தமிழ்த்துறை
பச்சையப்பன் கல்லூரி
சென்னை-600 030

ஏப்ரல்-2011

# முடிவுரை

ஆய்வில் கண்டறிந்த உண்மைகள் தொகுத்தளிக்கப் படுகின்றன.

சங்கத் தமிழரது உறைவிடங்கள் செய்தொழில்களுக்கு ஏற்பவும் வேறுபட்டமைந்தன. தொழில் தொடர்பான கருவிகள், துணைநின்ற விலங்குகள் முதலியவற்றைப் பேணுவதற்கும் உறைவிடத்தின் பரப்பளவையும் அமைப்பு முறையையும் மாற்றியமைத்து வாழ்ந்தனர்.

அயல் நாட்டுப் பண்டங்களையும் தம் நாட்டுப் பண்டங்களையும் பேணிவைக்கும் பண்டக சாலை அமைப்பு தோன்றியது. வணிகத்தொழில் அமைந்தமையால் அவரவர் இருப்பிடங்களும் நெருக்கமாக அமைந்தன. இருப்பிட நிலையில் வணிகத்தொழில் பெரும் மாற்றத்தை ஏற்படுத்தியமையை அறிய முடிகிறது.

அகம், இல், இல்லம், உறையுள், கல்லளை, குடில், குரம்பை, குறும்பு, நெடுநகர், புக்கில், மனை, மாடம், பிற என உறைவிடத்தின் வகைகளாக சங்க இலக்கியங்கள் தரமுறப்பட்டுள்ளன.

அகம் என்பது ஆண் பெண்ணுடன் இணைந்து அமைதியாக வாழ்வு நடத்தும் இடமாக விளங்கியது.

'நல்இல்' என்பது அமைப்பு நிலையிலும், அழகு நிலையிலும், செல்வ நிலையிலும், ஒழுக்கம்பேணும் நிலையிலும் சிறந்த உறைவிடமாக இருந்ததை ஆராயப்படுகிறது.

பெண் வாழ்ந்த இல் 'எம்இல்' எனவும் ஆண் வாழந்த இல் 'தம்இல்' எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது.

சங்கப் பாடல்கள் குறிப்பிடும் உறையுள் பற்றிய செய்திகளைத்தொகுத்துநோக்கியபோது அகப்பாடல்களிலே உறையுள் பற்றிய செய்திகள் அரிதாகக் காணப்படுகின்றன. புறப்பாடல்களில் சில செய்திகள் உள்ளன.

குரம்பை வறியோர் உறைவிடமாக இருந்தமை விளக்கப்பட்டுள்ளது.

நெடுநகர் இருப்பிடநிலையிலே குடும்பமாக வாழும் இடமாகவும் சுற்றம் சூழ வாழும் இடமாகவும் இருந்தது.
திருமணம் முடிந்த பின்னர் ஆணும் பெண்ணும் தனியாக வாழும் உறைவிடம் 'தன்மனை' எனக் குறிப்பிடப்பட்டது.

பொதியில், மன்றம் என்ற இருவகைப்பட்ட மக்கள் கூடும் இடங்கள் பற்றிய செய்திகளும் சங்கப் பாடல்களில் உண்டு. குடும்பமாக மட்டுமின்றி பொது வாழ்வியல் நிலையில் பலர் கூடும் இடங்களாக இவை விளங்கின.
இச்செய்திகளைத் தொகுத்து நோக்கும் போது அதனூடே வளர்ந்த பண்பாட்டைத்தெளிவாக அறிய முடிகிறது.

'இல்லாள்' என்ற உரிமைப்பெயர் சங்க இலக்கியப் பாடல்களில் இடம் பெறவில்லை.

உடன்போக்கு நிலையில் மட்டும் திருமணம் ஆணின் இருப்பிடத்தில் நடைபெறும். இருதரப்பினரும் ஒருமித்துச் செய்யும் திருமணம் எனில் பெண்வாழும் மனையில் நடைபெறும் வழக்கம் இருந்துள்ளது.

மணமகளுக்கு மங்கல நீராட்டுச் செய்யும் வழக்கம் இருந்ததையும் அது மனையிலே நடைபெற்றதையும் அறிய முடிகிறது. இவ்வழக்கம் இன்று வரை தொடர்வதும் குறிப்பிடப்படுகிறது.

இறந்த கணவனுக்கு நடப்பட்ட நடுகல் வழிபாட்டு நடைமுறைகளையும் மனையில் வாழும் பெண்ணே ஏற்றுக் கொண்டதாக ஆராயப்படுகிறது.

விரும்பிய வாழ்வுபெற வேண்டி மனையிலே தெய்வ வழிபாடு செய்வது வழக்கமாயிருந்தது நன்குதெளிவாகிறது.

வீட்டிலே இருக்கும் சுற்றத்தவரைவிட காக்கை முதலில் உண்ண வேண்டும் என்ற நடைமுறை இருந்துள்ளது. இது இன்றும் தமிழரிடையே நிலவுவது குறிப்பிடத்தக்கது.

சங்கத் தமிழர் இயற்கையான முறையில் உறைவிடம் அமைத்து வாழ்ந்தனர் என்று ஆராயப்படுகிறது.

கூற்றுக்கு உரிமையுள்ள, உரிமையில்லாதவர் கூறக்கூடிய கூற்றிலிருந்தும் தலைவனின் நல்லியல்புகளை ஆராயப்படுகிறது.

களவில் தலைவன் தலைவி ஆகிய இருவரின் உள்ளக்குறிப்புகளை அறிந்து அறநெறியில் செயல்பட்டனர் என்று ஆராயப்படுகிறது.

அவ்வக் காலங்களில் நிகழும் பாங்கன் கூற்றுகளில் தலைவன் தன் இயல்புகள் வெளிப்படுகின்றன.

பாடினி, கூத்தர், விருந்தினர் ஆகியோர் ஊடல் தீர்க்க வருகின்றமை அறிகிறோம். எனினும் இவர்கள் கூற்று நிகழ்த்தியதற்குச் சங்க இலக்கியங்களிற் சான்றில்லை, என ஆராயப்படுகிறது.

தலைவியின் கூற்று அதிக அளவில் இடம்பெறும் நூல் குறுந்தொகை ஆகும். அந்நூலின் மொத்தப் பாடல் தொகையில் ஏறத்தாழ 50 விழுக்காட்டை நெருங்கும் அளவிற்கு அதிக அளவு பாடல்கள் தலைவியின் உணர்வுகளை வெளிப்படுத்துவனவாகக் காணப்படும்.

தலைவியின் கூற்று அதிக அளவில் இடம்பெறும் நூல்வரிசையில் ஐங்குறுநூறு இரண்டாம் இடத்தையும் அகநானூறு மூன்றாம் இடத்தையும் பெறுகின்றன. இம்முறையில் நற்றிணை, கலித்தொகை அடுத்தடுத்த இடத்தில் உள்ளன.

தலைவனுடைய பிரிவை ஆற்றாது புலம்பும் தலைவியின் கூற்று அதிக அளவில் பாலைத் திணையில் காணப்படுகின்றன. இம்முறையில் வரைவின் பொருட்டும், பிரிவின் பொருட்டும் காலம் நீட்டிக்கும் தலைவனை எண்ணி வருத்தும் தலைவி கூற்று இரண்டாம் நிலையில் நெய்தல் திணையில் காணப்படுகிறது.

தலைவியின் கூற்றாக விளங்கும் மொத்தப் பாடல்களின் எண்ணிக்கையில் கற்பு நிலைப்பாடல்கள் நான்கில் மூன்று பங்காக அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

களவு, கற்பு நிகழ்வின்போது தலைவி தோழியிடம் நிகழ்த்தும் கூற்றுகளே அதிக அளவில் காணப்படுகின்றன.

தலைவி தலைவனுடன் நிகழ்த்தும் கூற்றுகள் இரண்டாம் இடத்தைப் பெற்றாலும், களவில் இரண்டு பாடல்கள் மட்டுமே இக்கூற்றாக அகநானூற்றில் காணப்படுவது குறிப்பிடத்தக்கது.

தலைவி தன்நெஞ்சிடம் புலம்பிக் கூறும் கூற்றுகள் மூன்றாவது இடத்தைப் பெறுகின்றன.

காமம் மிக்க கழிபடர் கிளவியாகத் தலைவியின் கூற்றுகள் தும்பி, மாலை, திங்கள், வாடை, கடல் போன்றவற்றைக் கண்டுரைப்பனவாக அமைந்துள்ளன. அக்கூற்றுகளும் தலைவனை உட்படுத்தியே விளங்குகின்றன.

அம்மூவனார், கபிலர், ஓரம்போகியார், ஆகியோர் முறையே முதல் மூன்று இடத்திலும், ஓதலாந்தையார், மருதனிளநாகனார் ஆகியோர் அதற்கடுத்த நிலையிலும் பேயனார், மாமூலனார் ஆகியோர் அதற்கடுத்த நிலையிலும் தலைவி கூற்றுப்பாடலை அதிகம் பாடியவர்கள் ஆவர்.

தலைவி தாயின் கடுஞ்சொல்லுக்கும் பார்வைக்கும் அஞ்சுகிறாள். ஆனால் தன்னைப் பாதுகாத்து வளர்த்த அன்னையைப் போற்றுகிறாள்.

தலைவி தன் தோழியையே உற்ற துணையாக எண்ணுகிறாள். தம் மனப்போராட்டத்திற்கும், ஆற்றாமைக்கும் அவளையே வடிகாலாகப் பயன்படுத்துகிறாள்.

தலைவி, தலைவன் மீது கொண்ட அன்பைக் களவிலும் கற்பிலும் நேரடியாகக் கூறாமல், அதிக அளவு தோழியிடம் கூறுவதாலும் பிறருடனும் பிறவற்றுடனும் கூறுவதாலும் வெளிப்படுத்துகிறாள். பிரிவில் வாராதகாலை தலைவனைத் தன்னிடம் அன்பற்றவனாகவே எண்ணுகிறாள். உலகியல் கருதி அவன் பரத்தைப் பிரிவை மறக்கிறாள். அதே நேரத்தில் அவன் குடிப்பெருமை கருதி இன்னொரு மணத்திற்கு உட்படுகிறாள். மேலும் அவனைத் தன் தாயாகவும், தந்தையாகவும் எண்ணிப் போற்றும் தலைவியின் அன்புறவு தமிழ்க்குடிப் பெண்டிரின் மாண்பைப் புலப்படுத்துவதாக உள்ளது.

தன் புதல்வனைப் பாலூட்டிச் சீராட்டி வளர்ப்பதும், தந்தை போல அவன் புறத்தொழுக்கம் இல்லாதிருக்க எண்ணுவதும், தலைவன் பிற மகளிர் உறவு கொள்ள நினைப்பதை வெறுப்பதும், தலைவன் மீது கொண்ட ஊடல்தீர மகன் வாயிலாவதும் காணுமிடத்து அவள் தன் மகன் மாட்டுக்கொண்ட அன்பும் வளர்ப்பு முறையும் அறியப் படுகின்றன.

பாணன் போன்றோர் தலைவியின் பிரிவுத் துயரை அறிந்து அவளைத் தேற்றுவதையும் அவள் பொருட்டுத் தலைவனிடம் தூது செல்ல எண்ணுவதையும் காணமுடிகிறது.

தோழியின் கூற்று அதிக அளவில் இடம்பெறும் நூல் நற்றிணை ஆகும். அதற்கடுத்த நிலைகளில் முறையே ஐங்குறுநூறும் குறுந்தொகையும் அகநானூறும் விளங்குகின்றன.

தோழியின் கூற்றுகளில் களவு ஒழுக்கம் கூற்றுகளே அதிகம் இடம் பெறுகின்றன.

கற்பில் பாலைத் திணையிலும் மருதத் திணையிலும் முறையே அதிக அளவு கூற்றுகள் உள்ளன.

தலைவியின்உணர்வுகளைத்தோழிதனக்குரியதாக்கிக் கொண்டு கூறுவதால் தலைவி கூற்றுப் பாடல்கள் குறைவாக உள்ளன.

தலைவன் அழகு தன்னுள்ளத்தைக் கவர்ந்தது எனத் தலைவன் அழகைப் புகழ்ந்து கூறித் தலைவனுடன் தலைவியை உறவாக்க முயல்கிறாள் தோழி.

தலைவி எந்நாளும் நிறைநலத்தோடு இன்புற்று வாழவேண்டும் என்ற உயர்ந்த உள்ளம் உடையவளாகத் தோழி விளங்குகிறாள்.

உறவை வளர்த்தெடுப்பதே இவளின் வாழ்நாள் குறிக்கோள் என்பதை அறிய முடிகிறது.

தலைவன் தலைவி உறவுக்கு அறத்தொடு நிற்றல் ஒன்றே அறவழியைக் காட்டுகிறது.

தலைவன் தலைவி இருவர்க்கும் ஏற்படும் காதல் நோய்க்கு அவ்விருவரே ஒருவர்க்கொருவர் மருந்தாகின்றனர்.

தோழி நற்றாயிடம் உரையாடுவதாகச் சான்றுகள் இல்லை.

தலைவியை இரவுபகல் பாராது கவனமாகக் காக்கும் செவிலியின் பாதுகாப்புணர்வு தோழியின் கூற்றால் வெளிப்படுகின்றன.

மெய்யறிவு பற்றிய உயர் சிந்தனைகளை உலகில் முதலில் மொழிந்தவர்தமிழரே எனக் கண்டறியப்படுகிறது.

திருமால், சிவன், காளி வழிபாடுகள் தொடக்க நிலையில் திராவிடருக்கே (தமிழருக்கே) உரியவையென்றும் தத்துவமேதை டாக்டர் இராதாகிருஷ்ணன் கூறுவதாக அறியப்படுகிறது.

மாரியோன், சேயோன் என்று, இடத்திற்கேற்ப வேந்தன், வருணன் என்றும் குறித்ததை காணலாம். உருவவழிபாடு தமிழரிடையே தொன்று தொட்டே இருந்தமை புலனாகிறது.

தெய்வத்தின் முன்னின்று சூளுரை செய்யும் வழக்கமும் தமிழரிடம் உண்டு. சூளுரையிலிருந்து தவறினால தீமை விளையும் என்றும் நம்பினர்.

ஒழுக்கத்திலிருந்து தவறுதல் கொடுமை எனவும், இவ்வொழுக்கக்கேடே அவனைத் தாக்கும் என்பதும் பண்டைய தமிழரின் நம்பிக்கை.

இந்த உலகத்தில் புகழைத் தேடிக் கொண்டவர்கள் மேல் உலகை அடைவார்கள். அன்பும்அருளும் இல்லாத உயிர்களைத் துன்புறுத்துவோர் கீழுலகமாகிய நிரயத்தில் நீங்காத துன்பத்தை அடைவர் என்றெல்லாம் நம்பி வாழ்ந்தனர்.
தீதற்ற வாழ்க்கை வாழ்வதே மிக உயர்ந்தது என்பது தமிழரின் எண்ணங்கள் என்று நம்பினர்.

உலகில் எந்த இடமானாலும் அது தாம் வாழும் ஊர்தான் எங்கு வாழ்ந்தாலும், எப்படி வாழ்ந்தாலும், உலகில்வாழும் மக்கள் அனைவரும் உறவினர்கள்தாம் என்று நம்பிக்கைக் கொண்டு வாழ்ந்ததாகக்கூறப்படுகிறது.

அன்புடையவர்கள் இந்த உலகத்தில் இருப்பதால்தான் இந்த உலகம் இன்று இயங்கிக் கொண்டிக்கிறது. இல்லாவிட்டால் மண்ணோடு மண்ணாகப் போய்விடும் என்று நம்பியிருந்தனர் என ஆராயப்படுகிறது.

அரசன் நீதி தவறாதவனாகச் செங்கோல் செலுத்தி வந்தால் அந்த நாட்டில் பருவமழை தவறாது பெய்யும் என்று தமிழர் நம்பினர்.

சமணரும் பௌத்தரும் தமிழர் வாழ்ந்த ஊருக்கு வெளியில் கோட்டம் அமைத்து வழிபட்டு வந்ததைச் சங்க இலக்கியமும் சிலப்பதிகாரமும் தக்கச் சான்றுகளுடன் கூறப்பட்டுள்ளன.

நன்னன் என்னும் குறுநில மன்னன் ஆட்சி புரிந்த வந்தான். அவனுடைய பிறந்த நாள் விழா அவனுடைய நாட்டு மக்களால் சிறப்பு மிகு பெருவிழாவாகக் கொண்டாடப்பட்டது எனக் கூறப்படுகிறது.

கன்னிப் பெண்கள் இறைவனை வேண்டி, நோன்பு நோற்று நோன்பின் நிறைவு நாளன்று நீராடுவது தைந்நீராடலாகும். "சிறந்த கணவரைப் பெற வேண்டும்" என்னும் நோக்கத்தோடு இந்தநோன்ப மேற்கொள்ளப் பட்டதைச் சங்க இலக்கியப்பாடல்கள் தெரிவிக்கின்றன. பிற்காலத்தில் மார்கழி நோன்பு உடன் தைந்நீராடல் திருவிழாபெரிதும் தொடர்பு உடையதாகக் காணப்படுகிறது.

ஒருவர் பார்வை இன்னொருவர்க்குத் துன்பம் செய்யும் என்ற நம்பிக்கை வலுவாக இருந்தது என்று நம்பினர்.

பல்லி சொல்லுக்குப் பயனுண்டாகுமென்று பழந்தமிழர் சமுதாயம் நம்பியது எனக் கூறப்படுகிறது.

காகம் கரைந்தால் விருந்தினர் வருவார் என்ற நம்பிக்கை பழந்தமிழகத்திலிருந்தது என்பது உறுதிப்படுத்தப்படுகிறது. மரங்கள் சிலவற்றிலும் கற்சுனைகளிலும் கடவுள் தங்கியுள்ளதாக நம்பி வாழ்ந்து வந்தனர்.

குழந்தை பிறப்பு முதல் இறப்பு வரை வாழ்வியலில் பல சடங்குகளைச்செய்து வாழ்ந்துவந்தனர் எனக்கூறப்படுகிறது.

சங்க காலத் தமிழ்மக்கள், மனிதனுடைய வாழ்க்கை மதிப்பும் பயனும் வாய்ந்ததாக அமையவேண்டும்என்பதில் பேரார்வம் காட்டினர்.

சங்க காலத்தில் சிறப்புற்று விளங்கிய புலவர்களின் எண்ணிக்கை 473 என்று கணக்கிட்டுள்ளனர்.அவர்களுள் முப்பதுபேர் பெண்பாற் புலவர்களாக உள்ளனர்,
அக்காலத்தில் கல்வி பெறுவதற்கு மகளிர்க்கு வாய்ப்பு வசதிகள் இருந்தன என்பதைத் தெரிவிக்கிறது.

களவு நிலைமுதிர்ச்சி அடைந்து திருமணத்தில்முடிந்து இல்வாழ்க்கை மேற்கொள்வதே கற்பு வாழ்க்கையாகக் கருதினர்.

பிரிவுக்காலத்தில் மனைவி கணவனின் வருகைக்காகப் பொறுமையோடு தம் இல்லத்தில்காத்திருக்கிறாள்.இதையும் ஒரு ஒழுக்கநெறியாகக் கொண்டனர், சங்கத் தமிழர்கள்.

பரத்தையர் ஒழுக்கம் அனைத்து மக்களாலும் இழிவெனவே கருதப்பட்டது.இப்பிறவியில் தலைவனோடு வாழாவிட்டாலும், அடுத்தப்பிறவியிலாவது தலைவனோடு கூடிவாழ்வேன் என்று கூறுகிறாள். இச்செயலால் தலைவி, தலைவன் மீது கொண்ட நல்லுறவைக் காட்டுகிறது.

தன்னையே நம்பி நாணத்தை விட்டுச் சரணடைந்த தலைவியின் உள்ளத்தை அந்தப் பொழுதிலே புரிந்து கொண்டு, அஞ்சாதே, உன் அழகிய நலத்தை நுகர்வேன் என்று கூறும் தலைவனின் உளவியல் பாங்கு பெரிதும் போற்றக் கூடியது.

குடும்பத்தின் மீதான நம்பிக்கை தவறும்பொழுது அது சமூகச் சிதைவுக்கும் அடித்தளமாகிறது.

முல்லைப் பாட்டுத் தலைவன் தலைவிமீதும், தலைவி தலைவன்மீதும் கொண்ட காத்திருப்பு, நம்பிக்கையின் அடிப்படையில் உள்ள வாழ்க்கை சுட்டுகின்றது.

உறவில் சிதைவு ஏற்பட்டு வழக்குகள் நீதிமன்றத்தில் குவிவது குறிப்பிடத்தக்கதாக இன்றை உறவில் ஏற்படக் கூடிய சிக்கலாக ஆராயப்படுகிறது.

ஒருதாரமணக் குடும்பத்தில்இருப்பதால் இம்மணமுறை சிறப்பாகக் கருதப்படுகிறது. சக்களத்தி சண்டைகள் பலதார மணத்தின் மீது கொண்ட வெறுப்பினைச் சுட்டுவதாக ஆராயப்படுகின்றது.

உறவுகள் மட்டுமின்றி தந்தைவழி பாட்டன், பாட்டி, தாய்வழி பாட்டன்,பாட்டி என்ற உறவுகள் தங்களுடைய பேரக் குழந்தைகள் மீது மிகுந்த அன்பும் பாசத்தையும் கொட்டி வளர்ப்பார்கள். இவ்விரு உறவுகளிலும் அன்பும் பாசமும் வெளிப்படுகிறது.

தாய்மாமன் உறவு மிகவும் அவசியமாகிறது. பிறப்பு முதல் மணவிழா, இறப்பு வரை தாய்மாமனின் உறவு மிகவும் அவசியமானது என்று ஆராய ப்படுகிறது.

பிள்ளைகளின் ஒவ்வொரு காலக்கட்டத்திலும் அவர்களுக்குத் தேவையானவற்றைச் செய்வதும், பிள்ளைகளின் ஆசைகளையும் இலட்சியங்களையும் நிறைவேற்றுவதும் பெற்றோரின் கடமை.

ஒருவனுக்கு ஒருத்தி என்பதனைக் கட்டாயமாக நடைமுறைப் படுத்தி வரும் நம்நாடு உலக அரங்கில் எய்ட்ஸில் இரண்டாவது இடத்தினைப் பெற்றிருப்பதாக ஆராயப்படுகிறது.

----